அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம்

# விஞ்ஞானத் தப்ஸீர்




ரஹ்மத் ராஜகுமாரன்

RAHMATH RAJAKUMARAN

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 230**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்துல் அல்பலத் - (இந்த) நகரம் - 1 )**

لَاۤ اُقْسِمُ بِهٰذَا الْبَلَدِۙ

1) இந்நகரத்தின் மீது நான் சத்தியம் செய்கின்றேன். (குர்ஆன் : 90:1-3)

لَاۤ

اُقْسِمُ

بِهٰذَا الْبَلَدِ

இல்லை

நான் சத்தியம் செய்கின்றேன்

இந்நகரத்தின் மீது

குறிப்பு:- இந்த அத்தியாயத்தின் துவக்கத்தில் ஒரு لَاۤ உள்ளது அதற்கு 'இல்லை' என்பது பொருள், ஆனால் இந்த இடத்தில் அதற்கு அந்த பொருள் கொள்ளக் கூடாது, لَاۤ என்று இப்படிதான் அரபுகள் பயன்படுத்துவது பழக்கம். அதுவும் அந்நகரத்தைப் பற்றி இவ்வசனம் குறிப்பிடுவதால் , அம்மக்களின் பேச்சு வழக்கு பாணியிலேயே 'அப்படியெல்லாம் இல்லை'- அதுபோன்றே அல்லாஹ்வும் கூறி இவ்வத்தியாயத்தை ஆரம்பித்துள்ளான்.

நாமும் கூட பேசும் போது, 'அப்படியெல்லாம் இல்லை' என்று ஆரம்பிக்கும் பழக்கமிருக்கிறது. அப்படித்தான் இந்த சூராவையும் இறைவன் ஆரம்பிக்கிறான்.

'அப்படியெல்லாம் இல்லை'- இல்லை; நான் சத்தியம் செய்கின்றேன் இந்நகரத்தின் மீது

وَاَنْتَ حِلٌّ بِهٰذَا الْبَلَدِۙ

2) நீர் இந்நகரத்தில் (சுதந்திரமாகத்) தங்கியிருக்கும் நிலையில்,

وَوَالِدٍ وَّمَا وَلَدَ ۙ

3) பெற்றோர் மீதும், (பெற்ற) சந்ததியின் மீதும் சத்தியமாக,

(குர்ஆன் : 90:1-3)

இந்நகரம் என்பது திரு மக்காவைக் குறிக்கிறது. 'பெற்றவர்' என்பது ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களையும். 'பிறந்தது' என்பது ஹளரத் இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களையும் குறிக்கின்றன.

தவிர, 'பெற்றவர்' என்பது ஹளரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களையும், 'பிறந்தது' என்பது அவரது சந்ததியினரையும் குறிக்கின்றன என்றும் சிலர் கூறியுள்ளார்கள்.

திரு மக்காவில் உள்ள குரேஷியதும் அரபு நாட்டில் உள்ள மற்றைய அரபியரில் பெரும்பாலும் அலரத் இப்ராஹிம் அலை அவர்களுடைய சந்ததியினர் ஆவார்கள்

ஏறக்குறைய ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் இறைவனது கட்டளைப்படி ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தமது வாழ்க்கைத் துணைவி ஹாஜரா ரலியல்லாஹுதஆலா அன்ஹா அவர்களையும், புதல்வர் இஸ்மாயில் அலைஹிஸ்ஸலாம் அவர்களையும் திரு மக்கமா நகரம் இருக்கிற இடத்தில் கொண்டு வந்து விட்டுச் சென்றார்கள்.

தாயும் மகனுமாக அங்கிருக்கும் போதுதான், அங்கு ஜம்ஜம் கிணறு உண்டாயிற்று. அதனை ஒட்டி மற்றவர்களும் அங்கு வந்து குடியேறினார்கள். பின்னர் ஹளரத் இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அவ்வூருக்குத் தலைமை வகித்து வாழ்ந்து கொண்டிருந்தார்கள்.

இறைவன் அவருக்கு மக்கட் (பேற்றை மிகுதியாக அளித்தான். நாளடைவில் அவரது சந்ததியினர் அரபு நாடு முழுவதிலும் பரவியதோடல்லாமல் வெளியிலும் சென்று குடியேறினார். இறுதியாக அந்நாட்டிலுள்ள பூர்வீகக் குடிகளைப் பார்க்கினும் இவர்கள்தாம் ஜனத் தொகையில் பெரும்பான்மையினராகி விட்டார்கள். இவர்களிலுள்ள ஒரு பிரிவினர்தாம் குறைஷியர் எனப்படுபவர்கள். இக்குறைஷிக் கோத்திரத்தில்தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிறந்தார்கள்.

திரு மக்கமா நகரம் குறைஷியராலும் ஏனைய அரபிக் கோத்திரத்தாலும் புனிதமாகக் கொண்டாடப்பட்டு வந்தது. அன்று இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தமது புதல்வரை இறைவன் கட்டளைப்படி குடியேற்றிய போது "இதனை அபயமுள்ள நகரமாக்குவாயாக " என்று பிரார்த்தித்ததற்கேற்ப அரபியர் இதனை புனித ஸ்தலமாக கொண்டாடி வந்தனர்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இவ்வூரில் பிறந்து வளர்ந்தாலும், தங்களது வெகு நாளைய பழக்க வழக்கத்துக்கு மாறாக, இஸ்லாமிய சன்மார்க்கத்தைப் போதித்து, குறைஷியரின் விக்கிரஹ ஆராதனையைக் கண்டித்ததால், குறைஷித் தலைவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை இவ்வூரைவிட்டுத் துரத்தி விட வேண்டுமென ஆரம்பத்தில் முயன்றனர். கொடுமைப்படுத்தினர்.

அவர்கள் ஊரை விட்டுச் சென்று விட்டால் தங்களுக்கு இடையூறு இல்லை என்றே அவர்கள் எண்ணினர். அவர்களது இவ்வெண்ணத்துக்கு மாறாக இறைவன் "நீர் இந்நகரில் வசித்து கொண்டிருக்கிற நிலையில் இந்நகரைக் கொண்டு நான் சத்தியம் செய்கிறேன்" என்று பெருமானார் அங்கு வசித்ததால் அந்நகருக்கு சிறப்பு உண்டு என்பதை விளக்கியுள்ளான்.

அதாவது ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம், இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம் ஆகிய நபிமார்களால் நிர்மாணிக்கப்பட்ட நகரம், திருகஃபா இருந்து வரும் நகரம் என்ற முறையில், அந்நகருக்கு சிறப்புகள் இருந்த போதினும், அங்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வாழ்ந்து வந்ததால், அதற்கு மேலும் அதிகமான சிறப்பு உண்டாகும் என்பதை விளக்கியுள்ளான்.

பொதுவாக அரபியரும் குறிப்பாக திரு மக்காவாசிகளும் தங்களை ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய புதல்வர், ஹளரத் இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய சந்ததியினர் என்று சொல்லிக் கொள்வதில் பெருமையுள்ளவர்களாக இருந்தனர்.

இரு பெரிய நபிமார்களது சந்ததியினர் என்ற முறையில் அவர்கள் பெருமைப்படுவது நியாயமேயாகும். எனவே, அவர்களுக்குப் பிரியமான அவர்களின் மூலபிதாக்களில் இருவரையும் குறிப்பிட்டு சத்தியம் செய்துள்ளான்.

இந்த சூரத்தில் கூறப்படுகிற விஷயம் மிக முக்கியமானதால் அவர்களுக்குப் பிரியமான அவர்களது இரு மூதாதையரையும், அவர்கள் கொண்டாடும் நகரையும் குறிப்பிட்டு இறைவன் சத்தியம் செய்துள்ளான்.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 231**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்துல் அல்பலத் - (இந்த) நகரம் - 2 ) பகுதி - 1**

لَقَدْ خَلَقْنَا الْاِنْسَانَ فِىْ كَبَدٍ

திடமாக, நாம் மனிதனைக் கஷ்டத்தில் (உழலுபவனாகப்) படைத்தோம்.

(குர்ஆன் : 90:4)

குறைஷிக் காஃபிர்கள் திரு மக்காவில், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையும் இஸ்லாம் மார்க்கத்தைத் தழுவியதற்காக ஏழை முஸ்லிம்களுக்கு பல்வேறு நெருக்கடியைத் தந்து கடுந்துன்பங்களுக்கு உட்படுத்தினர். இதனால் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு கவலை ஏற்பட்டது. எனவே இவ்வாயத்தின் மூலம் இறைவன் ஆறுதல் கூறியிருக்கிறான்.

அதாவது மனிதப் பிறப்பே சிரமமும் கஷ்டமும்தான். கஷ்டப்படாதவர் எவருமில்லை. ஒரு வகையில் இலேசாக இருந்தால் இன்னொரு வகையில் கஷ்டம்தான். ஆதலால், துன்மார்க்கர்கள் செய்யும் துன்பங்களைப் பொருட்படுத்த வேண்டியதில்லை" என்று கூறியுள்ளான்.

குழந்தை பிரசவமாகும் போது மிகச் சிறிய பாதையின் வழியாக பெரிய உடலுடன் வர வேண்டும். இதனால் குழந்தைக்கும் சிரமம். தாய்க்கும் சிரமம்.

பிறந்த பின்னர் இவ்வுலகின் சீதோஷ்ண நிலையை தாங்கும் சக்தி அந்த உடலுக்கு இல்லாததால் பல விதமான நோய்கள் உண்டாகின்றன. இதனைத் தடுக்க பல வித மருத்துவம் செய்ய வேண்டும்.

பின்னர் குழந்தை நடக்கும்போது எத்தனையோ முறை இபரி விழுதல், பின்னர் பள்ளிக்குச் செல்லல், அங்கு ஆசிரியருக்குப் பணிந்து அவர் விருப்பப்படி நடத்தல், சிரமப்பட்டு பாடங்களை மனனஞ் செய்தல்,

பின்னர் திருமணம் செய்தல், தாம்பத்ய வாழ்கையை நடத்தி மக்கட்பேற்றை அடைதல், இவர்களைப் போஷித்தல். வீடு வாசல்களை உண்டு பண்ணல், மூப்பு, வயோதிகம் முதலியவற்றை அடைந்து பலவித நோய்களுக்கு ஆளாதல் முதலிய வாழ்க்கையின் பலதரப்பட்ட நிலையைப் பார்த்தால்,

மனிதனுக்கு பிறந்தது முதல் இறப்பது வரை தொடர்ந்து ஏதேனும் ஒரு இடையூறு இல்லாமல் இருக்காது என்பது தெரியவரும். இக்கஷ்டங்களுக்கு இடையில்தான் சன்மார்க்க வரையறைகளைப் பேணி நடக்கக் கடமைப்பட்டுள்ளான்.

இவ்வித இன்னல்களின் மத்தியில் உலகில் வாழ்ந்து மரணமடையும் போது மரண வியாதி, உயிர் பிரிதல், மண்ணறையில் விசாரணை, அங்கு தனித்திருத்தல், மீண்டும் உயிர் பெற்றெழும்பல், மஹ்ஷர் மைதானில் விசாரிக்கப்பட்டு, தண்டனை அடைதல் அல்லது நன்மை பெறல் ஆகியவை நிகழ்கின்றன.

மனிதனுக்கு நிகழ்கிற இத்தகைய சம்பவங்களை ஒரு பேரறிஞர் ஆராய்ந்து "இவ்வுலகில் மனிதனுக்கு இன்பம் என்று எதுவுமே இல்லை. ஒரு துன்பத்திலிருந்து விடுதலை அடைவதைத்தான் பாமரர்கள் இன்பம் என்று எண்ணிக் கொண்டிருக்கின்றனர்.

உணவில் இன்பம் என்பது பசியை விட்டு விடுபடல். உடையில் இன்பம் என்பது வெய்யில், பனி ஆகியவற்றின் துன்பங்களை விட்டு உடல் விடுபடலாகும். மனிதனுக்கு இவ்வுலக வாழ்வு என்பது துன்பம் அல்லது துன்பத்தை விட்டு விடுபடல் ஆகிய இரண்டில் ஒன்றைத் தவிர வேறில்லை" என்று கூறியுள்ளார்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை விரோதிகள் துன்பத்துக்கு உட்படுத்துகிறார்களென்றால், அவ்விரோதிகள் சுகத்தில் இருந்து விடுபடவில்லை; அவர்கள் வேறொரு விதத்தில் துன்பத்தைத்தான் அடைகின்றனர். எனவே மனிதனாகப் பிறந்த அனைவரும் துன்பத்தில்தான் இருக்கின்றனர் என்பது கருத்து.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 232**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்துல் அல்பலத் - (இந்த) நகரம் - 3 ) பகுதி – 2**

لَقَدْ خَلَقْنَا الْإِنْسَانَ فِي كَبَدٍ

திடமாக, நாம் மனிதனைக் கஷ்டத்தில் (உழலுபவனாகப்) படைத்தோம்.

(குர்ஆன் : 90:4)

உளவியல் நிபுணர்கள் இதற்குரிய காரணத்தை தத்துவ ரீதியில் ஆய்வு செய்து சமர்பித்துள்ளனர்.

வாழ்க்கையில் நமது எதிர்பார்ப்புகள் மற்றும் ஆசைகள் நிறைவேறாத போது நமது மனம் துன்பத்தில் தவிக்கிறது.

உங்களிடம் நானும் ஒரு கேள்வி கேட்க்கிறேன்.ஏன் வாழ்க்கையில் இன்பம் வருகிறது?

இந்தக் கேள்வியை மட்டும் ஏன் நீங்கள் கேட்கவில்லை. ஏனென்றால்

நமக்கு இன்பம் பிடிக்கிறது துன்பம் பிடிக்கவில்லை அவ்வளவுதான்.

இப்படித்தான் நம் மனது நம்மை காலம் காலமாக பழக்கி வைத்துள்ளது.

நமக்கு இன்பத்தை பிடித்த அளவிற்கு துன்பத்தை பிடிக்கவில்லை அதனால் தான் இந்த கேள்வி நம் மனதில் எழுகிறது.

வாழ்க்கையில் இன்பம் என்ற ஒன்றும் இல்லை துன்பம் என்ற ஒன்றும் இல்லை. இவை அனைத்தும் நமது மனம் உருவாக்கும் சித்து விளையாட்டுகளே.

இது புரிந்தால் உங்களால் இன்பத்தையும் துன்பத்தையும் சரி சமமாக பாவிக்க முடியும். அப்பொழுது உங்களுக்கு இந்தக் கேள்வி மனதில் எழாது.

ஒரு உதாரணத்தைப் பார்ப்போம் : உங்கள் வாழ்க்கையில் நீங்கள் ஒரு மிகப்பெரிய விஷயத்தை இன்று சாதித்து விட்டீர்கள் என்று வைத்துக் கொள்வோம்.

அப்போது உங்கள் மனநிலை எப்படி இருக்கும்?

உங்கள் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. உங்கள் வாழ்க்கையில் அனைத்து இன்பங்களையும் நீங்கள் பெற்றதாக உணர்வீர்கள்.

சரி இதே விஷயத்தை மறுநாளும் யோசிக்கிறீர்கள் உங்களுக்கு மறுநாளும் மிக்க மகிழ்ச்சியாகத்தான் இருக்கும்.

இந்த விஷயத்தை மூன்றாவது நாளும் யோசிக்கிறீர்கள். நான் எவ்வளவு பெரிய விஷயத்தை இப்போது சாதித்து உள்ளேன் என்று. நீங்கள் மகிழ்ச்சியாக இருப்பீர்கள்

ஆனால் முதல் நாளிலிருந்த அளவுக்கு நீங்கள் மகிழ்ச்சியாக இருப்பீர்களா? இல்லை அந்த மகிழ்ச்சியின் திடம் குறைந்திருக்கும். உங்கள் மனதில் மகிழ்ச்சியின் ஆரவாரம் குறைந்திருக்கும்.

நாட்கள் செல்லச் செல்ல மீண்டும் இந்த சாதனையை யோசித்தால் உங்களுக்கு மனதில் மகிழ்ச்சி என்பது மிகமிகக் குறைவாகவே இருக்கும்.

இது எதனால்?

நம் மனதின் போலித் தன்மையே இதற்கு காரணம், மனதை எந்த ஒரு செயலாலும் திருப்திப்படுத்த இயலாது. எப்பொழுதும் ஏதாவது ஒன்று அதற்கு தேவைப்பட்டுக் கொண்டே இருக்கும்.

நம் மனதில் ஏற்படும் இன்ப- துன்ப உணர்ச்சியில் அனைத்தும் மனம் செய்யும் மாய விளையாட்டுக்கள்.

மனம் என்பது ஒரு என்கவுண்டர் ஸ்பெஷலிஸ்ட்(Encounter-Specilist) போன்றது உங்களை இன்பம்/ துன்பம் என்ற தோட்டாக்களைக் கொண்டு தொடர்ந்து போட்டு தள்ளிக் கொண்டே இருக்கும்.

நீங்களும் சளைக்காமல் உயிர்த்தெழுந்து கொண்டேதான் இருக்கப் போகிறீர்கள். இதுவே நமது மனதின் அடிப்படை கட்டமைப்பு இதை உங்களால் மாற்ற இயலாது.

ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள் போல் உங்கள் வாழ்க்கையில் இந்த இன்ப/ துன்பங்கள் தொடர்ந்து துரத்திக் கொண்டே தான் இருக்கும். இவற்றிற்கு முடிவு இல்லை.

இன்பம் வரும்போது நீங்கள் மகிழ்ச்சியாக இருப்பது போல். துன்பம் வரும்போது நீங்கள் துக்கமாகவே இருந்தாக வேண்டும் வேறு வழியில்லை.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 233**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்துல் அல்பலத் - (இந்த) நகரம் - 4 ) பகுதி - 3**

لَقَدْ خَلَقْنَا الْاِنْسَانَ فِىْ كَبَدٍ

திடமாக, நாம் மனிதனைக் கஷ்டத்தில் (உழலுபவனாகப்) படைத்தோம்.

(குர்ஆன் : 90:4)

மனிதன் துன்பத்தில் உழலுபவனாக இருப்பதற்கு காரணம் மெஞ்ஞான ரீதியாக ....

வாழ்கையில் துன்பம் இருப்பதற்கு காரணம் விதி என்று கூறுவார்கள். அது உண்மையா பொய்யா என்று தெரியவில்லை. ஆனால் ஒருவேளை கீழே உள்ள கதைப்படி நடந்தால் நமது விதியை நாம் வெல்லலாம். முயற்சி செய்து தான் பாருங்களேன்.

வெகு நாட்கள் முன்பு பாலை நிலத்தில் பரிதவித்து வாழ்ந்த ஒரு பறவை, பாலைவனத்தின் வெப்பத்தால் தன் உடலிறகுகள் அனைத்தையும் இழந்து உண்ணவும், பருகவும் எதுவுமின்றி தவித்துக் கொண்டிருந்தது. தங்குவதற்கு ஒரு கூடு கூட இன்றி தன் வாழ்வை சபித்த வண்ணம் அல்லும் பகலும் வாழ்ந்து வந்தது.

ஒரு நாள் ஒரு ஞானி அப்பாலை நிலத்தை கடந்து செல்வதைக் கண்ட அப்பறவை அவரிடம், "எங்கு செல்கிறீர்கள்" என்று கேட்டது. "முக்காலத்தையும் உணர்ந்த என் குருவை சந்திக்க செல்கின்றேன்" என்று அவரும் பதில் கூறினர். உடனே அப்பறவை, "என்று என் துன்பங்கள் முடிவுறும் என்று அவரிடம் கேட்டு சொல்லுங்கள்" என்று பறவை கேட்டது.

"கண்டிப்பாக கேட்டுச் சொல்கிறேன்" என்று கூறிச் சென்றார்.

தன் குருவை அடைத்த அந்த ஞானி "இறைவனிடம் அப்பறவையின் பரிதாப நிலையை விளக்கிக் கூறி எப்பொழுது அதன் துன்பம் முடிவுறும் ? என்று கேட்டார்.

அப்பறவை அது அனுபவிக்கும் துன்பத்தை மீதி உள்ள வாழ்நாள் முழுவதும் அனுபவித்தாக வேண்டும். அதுவரை அப்பறவைக்கு எவ்வித இன்பமும் இல்லை" என்று குரு பதில் கூறினார்.

இதைக்கேட்டால் ஏற்கெனவே சோர்வுற்றிருக்கும் அப்பறவை மேலும் மனமொடிந்து போய் விடுமே என்றெண்ணிய ஞானி "இதற்கொரு நல்ல தீர்வைக் கூறுங்கள் ஐயா" என்று குருவை பணிந்து வேண்டினார்.

குருவும் மனமிரங்கி ஒரு மந்திரத்தைத் திரும்பத் திரும்ப கூறினால், நன்மை விளையும் என்று சொல்லி மந்திரத்தையும் கற்பித்தார். *அனைத்தும் நன்மைகே அனைத்திற்கும் நன்றி* என்பதுவே அந்த மாமந்திரம்.

குரு கற்பித்த மந்திரத்தை ஞானியும் அப்பறவைக்கு கூறிச் சென்று விட்டார். ஏழு நாட்களுக்குப் பின் அந்த ஞானி அப்பாலை நிலத்தைக் கடந்து சென்றபோது அந்த பறவை மிகுத்த ஆனந்ததுடன் இருப்பதைக் கண்டார்.

அதன் உடலிறகுகள் முளைத்திருந்தன. அப்பாலை நிலத்தில் ஒரு சிறு செடி முளைத்திருந்தது. ஒரு சிறிய நீர்நிலையும் அங்கு இருந்தது. ஆனந்ததுடன் அங்குமிங்கும் மகிழ்வுடன் அப்பறவை அலைந்து திரிந்து கொண்டிருந்தது.

ஞானிக்கு மகா ஆச்சர்யம். இனி வாழ்நாள் முழுவதும் துன்பந்தான் இன்பமே இல்லையென குரு கூறினாரே! இன்றெப்படி இது சாத்தியமென எண்ணி அதே கேள்வியுடன் குருவை பார்க்கச் சென்றார்.

குருவிடம் பறவையின் மகிழ்ச்சி குறித்து கேட்டபோது அவர் கூறிய பதில் இதுவே: "ஆம். இனி வாழ்நாள் முழுவதும் துன்பந்தான் அப்பறவைக்கு எவ்வித மகிழ்வும் இல்லையென்ற விதி இருந்தது உண்மைதான்.

ஆனால் *அனைத்தும் நன்மைக்கே, அனைத்திற்கும் நன்றி* என்ற மந்திரத்தை அப்பறவை எல்லா சூழலிலும் மாறி மாறி கூறியதால் நிலைமை மாறியது.

பாலையின் சுடுமணலில் விழுந்த போது நன்றி சொன்னது.

வெப்பத்தில் வருந்தி பறக்க முடியாது தவித்த போதும் நன்றி சொன்னது.

*சூழல் எதுவாயினும் நம்பிக்கையுடன் சொன்னது*.

எனவே வாழ்நாள் முழுவதும் துன்பம் என்கிற விதிப் பயன் ஏழு நாட்களில் கரைந்து மறைந்தது" என்று பதில் கூறினார்.

.மெய்நிலை கண்ட ஞானி மாபெரும் தவசீலர் மஹபூபே சுபுஹானி மஃஷூக்கே ரஹ்மானி ஸூல்தானுல் அவுலியா ஈருலக ரட்சகர் குத்புல் அக்தாப் அஸ்ஸையிது அஷ்ஷைகு கௌதுல் அஃளம் முஹிய்யத்தீன் அப்துல் காதிர் ஜீலானி நாயகம் திருவாய் மலர்ந்தார்கள்:

இஸ்லாம் என்பது இறைவனின் நாட்டத்துக்குச் சிரம் சாய்ப்பது தான். ரிஜ்க் அளிப்பவன் அவனாகையால் அவன் தனது குறைவற்ற 'தக்தீர்' எனும் திட்டப்படி ரிஜ்க் அளிப்பான் என்பதை நம்பித் தன்னை அவன் வசம் ஒப்புவிப்பது இஸ்லாம் ஆகும்.

தன் பலத்தைப் பெரிதாக நினைக்காது அவனது உதவியைத் தேடி நிற்பது இஸ்லாம் ஆகும்.

அவனளித்த இம்மைப் பேறுகள் அனைத்தையும் அவன் வழியிலேயே செலவழித்து விடுவதுடன், நற்கருமங்களை ஓயாது செய்து, அவைகளையும் அவன் புறத்தில் சாட்டிவிட்டு, அவைகளையும் அடியோடு மறந்துவிட்டு, அவனுடைய ஞாபகமும் அவன் பற்றிய நாட்டமும் தேட்டமும் தவிர வேறொன்றையும்' இதயத்தில் இடம்பெற அனுமதிக்காமலிருப்பதுவே இஸ்லாம் ஆகும்.

என்னை (எமது உயர்நிலையை) மலக்குமார்களாலும் அறிய முடியாது ஜின்களாலும் அறிய முடியாது.

என்னிடம் இம்மை உலகின் இன்பமும் இல்லை மறுமை சுவர்க்கத்தின் மதுரமும் இல்லை

நான் விரும்புவது எல்லாம் அல்லாஹ்வின் ரிளாவும் முஹம்மது ரசூலுல்லாஹ் ﷺ அவர்களின் ரிளா (திருப்பொருத்தம்) ஒன்றே ஆகும் !

அல்லாஹ்வும் அல்லாஹ்வின் ரசூலும் எனக்கு ஆணையிட்டு இந்த இந்த பணியை செய்யுங்கள் என்று எனக்கு சொல்லாமல் இருந்திருந்தால், எனக்கு இந்த காட்டு வாழ்க்கையே சிறந்தது என்று தனிமையில் இறை இன்பத்திலே ஒன்றித்திருப்பேன் ! சுப்ஹானல்லாஹ் !

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 234**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்துல் அல்பலத் - (இந்த) நகரம் - 5 )**

اَيَحْسَبُ اَنْ لَّنْ يَّقْدِرَ عَلَيْهِ اَحَدٌ ۘ

"(தீமை செய்தால் தன்னை தண்டிக்க) எவரும் தன் மீது சக்தி பெற மாட்டார் என்று அவன் எண்ணிக்கொள்கிறானோ (குர்ஆன் : 90:5)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மிகவும் இடையூறு செய்து கொண்டிருந்த குறைஷித் தலைவர்களில் வலீதுப்னுல் முஙய்யரா போன்றவர்களைக் குறிப்பதாக இங்கு சொல்லப்படுகிறது.

அதாவது பிறந்தது முதல் மறுமையில் சுவர்க்கம் அல்லது நரகம் ஆகிய இரண்டில் ஒன்றை அடைகிற வரை ஒன்றுக்குப்பின் ஒன்றாகத் துன்பத்தையே அடைந்து கொண்டிருக்கிற மனிதன் தனது நிலையை கவனித்துப் பார்க்காமல் திரையிடப் பட்டிருக்கிறான்.

இதன் பயனாக சன்மார்க்கத்தை எதிர்க்கவும் சன்மார்க்கர்களை கொடுமைப்படுத்தவும் செய்கிறான். அவன் இவ்வாறு செய்வதற்குரிய தண்டனையை ஒருவரும் அவனுக்கு அளிக்கவே இயலாது என்று எண்ணிக் கொண்டானோ? அவ்வாறு அவன் எண்ணுவது தகாது என்பது இவ்வாயத்தின் கருத்து.

மேலும்,

நபி (ஸல்) அவர்களுக்கு வலீதுப்னுல் முஙய்யரா மூலமாக இறைவன் வாழ்வியல் பாடத்தை போதிக்கிறான் என்பதாக திருக்குர்ஆன் உளவியலாளர்கள் கூறுகின்றனர்

1) யாராவது உங்களுக்கு எரிச்சல் அடையச் செய்கிறார்களா? அவர் தான் உங்களுக்கு பொறுமையை போதிக்கிறார்.

2) யாராவது உங்களை விட்டு விலகிச் செல்கிறாரா? அவர்கள் தான் உங்களுக்கு தனியாக இருப்பது எப்படி என்று கற்று கொடுக்கிறார்.

3) யாராவது உங்களிடம் அதிகமாக கோபப்படுகிறார்களா? அவர்கள் தான் உங்களுக்கு மன்னிப்பு என்பது என்ன என்பதையும், இரக்கம் என்பது என்ன என்பதையும் போதிக்கிறார்.

4) உங்கள் மீது அதிகாரம் செலுத்தும் எதுவும் உங்களுக்கு அதை நீங்கள் எப்படி பெறுவது என்று போதிக்கிறது.

5) நீங்கள் வெறுக்கும் எதுவுமே உங்களுக்கு நிபந்தனையற்ற அன்பை போதிக்கிறது.

6) நீங்கள் எதைக் கண்டு பயந்தாலும் அது உங்களுக்கு தைரியத்தை கொடுத்து பயத்தை போக்கும் வித்தையை கற்பிக்கிறது.

7) உங்களால் கட்டுப்படுத்த முடியாத எதுவுமே உங்களுக்கு எப்படி அதை அப்படியே எடுத்துக்கொள்வது என்பதை போதிக்கிறது.

இப்படி எல்லாமே அதன் எதிர்பதத்தில் உங்களுக்கான போதனை உள்ளது என்பதை நீங்கள் விளங்கிக் கொள்ள வேண்டும்

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 235**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்துல் அல்பலத் - (இந்த) நகரம் - 6 )**

يَقُوْلُ اَهْلَكْتُ مَالًا لُّبَدًا

“ஏராளமான செல்வத்தை நான் அழித்தேன்” என்று அவன் கூறுகிறான்.

(குர்ஆன் : 90:6)

சன்மார்க்கத்தை எதிர்ப்பதற்காகவும், சன்மார்க்கர்களை ஒதுக்குவதற்காகவும் பொருளை செலவு செய்கிறான். இப்படி செலவு செய்வதைக் கொண்டு கர்வங் கொண்டு "பெரும் செல்வத்தை நான் அழித்துவிட்டேன் " என்று ஜம்பம் அடிக்கிறான் என்பது பொருள்

மேற்கண்ட வசனம் வலீது இப்னு முஙய்யரா (Walid Ibn Mughira கிபி 527- கிபி 622 ) சொன்னதாக இறைவன் குறிப்பிடுகிறான்.

வலீது இப்னு முஙய்யரா வை பற்றி தெரிந்து கொள்ளுங்கள்.

வலீது இப்னு முஙய்யரா : - “முஹம்மத் பைத்தியம் என்று கூறுகிறீர்கள்.அவர் எப்பொழுதாவது பைத்தியம் போல் உளறுவதை நீங்கள் பார்த்ததுண்டா?”

குறைஷிகள் சொன்னார்கள்: “இல்லை.”

“அவர் ஜோசியர் என்று கூறுகிறீர்கள். வாழ்க்கையில் என்றைக்காவது அவர் ஜோசியம் படித்ததை நீங்கள் கண்டதுண்டா?”

“இல்லை.” – மீண்டும் அதே பதிலே வந்தது குறைஷிகளிடமிருந்து.

“அவர் சொல்வது கவிதை என்று கூறுகிறீர்கள். என்னை விட கவிதை அறிந்தவர் உங்களில் யாரும் இல்லை. முன்பு எப்பொழுதாவது முஹம்மத் கவிதை சொல்லி நீங்கள் யாராவது கேட்டதுண்டா?”

“இல்லை.” – குறைஷிகள் நம்பிக்கையிழந்து தலையாட்டினார்கள்.

“முஹம்மத் சொல்வது பொய் என்று கூறுகிறீர்கள். வாழ்க்கையில் என்றைக்காவது அவர் பொய் சொன்னார் என்று உங்களால் சுட்டிக்காட்ட முடியுமா?”

“இல்லை.” – மக்கள் மீண்டும் அதே பதிலையே சொன்னார்கள்.

வலீத் இப்னு முகீரா என்பவர்தான் மேற்கண்ட கேள்விகளைக் கேட்டது.

வலீத் குறைஷிகளில் அதிக பணக்காரர். கலைகளிலும், கவிதைகளிலும், இலக்கியத்திலும் நிபுணத்துவம் பெற்றவர். குறைஷிகளின் உதாரணப் புருஷர்.

இவரும் முஹம்மதின் வலையில் வீழ்ந்து விட்டாரோ என்பதே மக்காவாசிகளின் கவலையாக இருந்தது.

ஒருமுறை கஅபா ஆலயத்தின் அருகில் முஹம்மத் (ஸல்) அவர்கள் தொழும் அழகை வலீத் கண்டார். தொழுகையில் அண்ணலார் ஓதிய வசனங்கள் வலீதின் காதுகளில் விழுந்தன. அவற்றின் இலக்கிய அழகையும், பொருட்செறிவையும் கண்டு அவர் பிரமித்தார். ஆவேசப்பட்டார்.

அதே ஆவேசத்துடன் குடும்பங்கள் சங்கமித்த ஒரு சபையில் சென்று இவ்வாறு கூறினார்:

“இறைவன் மீது சத்தியமாக! நான் சில வாக்கியங்கள் கேட்டேன். அது மனிதனின் பேச்சல்ல. ஜின்களின் பேச்சுமல்ல. அல்லாஹ்தான் சத்தியம்! அந்த வாக்கியங்களுக்கு இனிமையும், ஈர்ப்பும் உண்டு. நான் இதுவரை படித்த அனைத்து வாக்கியங்களையும் விட அவை மிகச் சிறந்தவை. அவற்றை விட சிறந்த வாக்கியங்களை உருவாக்குவதற்கு ஒரு இலக்கியப் படைப்பாளியும் இல்லை.”

ஒரே மூச்சில் ஆவேசத்துடன் பேசி முடித்து விட்டு வலீத் தன் வீட்டுக்குச் சென்றார். மக்கள் மிரண்டு போய் நின்றார்கள். வலீத் மதம் மாறிவிட்டார். குறைஷிகள் அனைவரும் இனி மதம் மாறுவர். வலீத் மக்களிடம் உரையாற்றிய அந்த உரைதான் இந்தக் கருத்துக்கு மக்கள் வரக் காரணமாயிற்று.

வலீத் ஒரு காரியத்தை சரி என்று தீர்மானித்தால் அதனை எதிர்ப்பதற்கு அங்கே யாரும் இல்லை. முஹம்மதை வலீத் ஆதரிப்பது மக்காவைப் பிடித்து உலுக்கும்.

அபூஜஹ்லுக்கு இந்த விவரம் தெரிய வந்தது. பதறியடித்து வலீதிடம் ஓடி வந்தான். நீண்ட நேரம் வலீதுடன் பேசினான். அந்த நீண்ட பேச்சுக்குப் பின் ஒரு வழியாக வலீதைத் தன் வசம் ஆக்கினான் அபூஜஹ்ல். அதன் பின் மக்களிடம் அழைத்து வந்தான்.

அப்போதுதான் வலீத் இப்னு முகீரா மேற்கண்ட கேள்விகளை மக்களிடம் கேட்டார். பேச்சின் போக்கு பொதுக் கருத்துக்கு எதிராகப் போகிறதோ என்று அபூஜஹ்லும் ஐயப்படாமல் இருக்கவில்லை. அவனுக்கு இதயத் துடிப்பு அதிகமாகியது. பதட்டத்தை வெளிக்காட்டாமல் வலீதைத் தீர்க்கமாகப் பார்த்தான். முஹம்மதை ஆதரித்து வலீதின் வாயிலிருந்து கருத்துகள் வந்து விழுந்து விடுமோ என்று அவன் உள்ளம் பதை பதைத்தது.

இதற்கிடையில் கூட்டத்தில் ஒரு ஆள் இவ்வாறு கேட்டார்: “முஹம்மத் பைத்தியமில்லை. ஜோசியருமில்லை. கவிஞரும் இல்லை. பொய் சொல்பவரும் இல்லை. அவருடைய வாக்குகள் குறித்து தாங்கள் என்னதான் சொல்ல வருகிறீர்கள்?”

இந்தக் கேள்விக்கு வலீத் என்ன பதில் கூறப் போகிறார் என்று அபூஜஹ்ல் உட்பட அனைவரும் சங்கடத்துடன் நோக்கி நின்றனர். ஊரில் தனக்குள்ள அந்தஸ்தை வலீத் எண்ணிப் பார்த்தார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் வாக்குகளில் வலுவாக நிற்கும் சத்தியத்தை விட அவர் முக்கியத்துவம் கொடுத்தது மக்காவில் நிலவில் நின்ற சம்பிரதாய சமூக நடவடிக்கைகளுக்கு.

குறைஷிகளின் பாரம்பரியப் பெருமையைக் காக்க வேண்டிய அவசியம் உள்ளது. அவர்களுக்கிடையில் தனக்கு இருக்கும் கண்ணியத்தையும், மரியாதையையும் கெடுத்துக்கொள்ள அவர் விரும்பவில்லை. வலீத் இப்னு முகீரா மனசாட்சியைக் குழி தோண்டிப் புதைத்து விட்டு, மக்களிடையே இவ்வாறு உரைத்தார்:

“இது வெறும் மந்திரவாதம். முஹம்மத் எங்கிருந்தோ அதனைக் கேட்டுப் படித்திருக்கிறார். கணவனையும், மனைவியையும், மக்களையும், உறவினர்களையும் அது பிரிப்பதை நீங்கள் காண்கிறீர்கள் அல்லவா? முஹம்மத் சூனியம் செய்பவர். அவரின் வாக்குகள் மாயாஜாலங்கள்.”

வலீத் இப்னு முகீரா இதன் பின்னர் இஸ்லாத்தைத் திரும்பிக்கூட பார்க்க முடியாமல் போனது. சத்தியத்தின் பால் விடுக்கப்படும் அழைப்பு பலமுறை செய்யப்படும் என்றில்லை. உள் மனதில் ஏற்படும் அழைப்பின் முதற்கட்ட வாய்ப்புகளில் அனுகூலம் இல்லையெனில் பிற்பாடு அந்த வாசல் அடைபட்டு விடும்.

அவன் கிடைத்த பெரும் பணம் அவளை பத்தும் செய்ய வைத்தது.

அதென்ன பத்து ?

'பத்து' என்ற சொல் 'எண்ணில் அடங்காத ' என்ற வகையில் இங்கு பொருள் தருகிறது. எதை வேண்டுமானாலும் பணத்தால் சாதித்து விடலாம் என்று கருதுகிறார்கள். ஒருவனிடம் பணம் தேவைக்கு அதிகமான அளவு வந்துவிட்டால் இந்த பத்துவித குணங்களும் வெளியேறாமல் அவனிடம் வந்து ஒட்டிக்கொள்ளுமாம்.

அது என்னென்ன குணங்கள் என்று இப்போது பார்ப்போம்.

காம, குரோத, லோப, மோஹ, மத, மச்சர, டம்ப, தர்ப்ப, ஈர்ஷை, அசூயை

1) காம – என்பது

ஆசை, ப்ரீதி, தனம், தான்யம், புத்திரம், மனைவி, மக்கள், பௌத்திராதிகளின் பேரில் அதிக அன்பு வைத்து துயரமடைந்தவர்

2) குரோத – என்பது

ஒருவர் ஏதோ ஒரு விதத்தில் ஒருவருக்கு நல்லவராக இருந்தாலும், அவருக்கு கெடுதல் விளைவிக்க முயற்சி செய்தால் அதை குரோதம் என்பர்.

3) லோப – என்பது

தன்னிடம் சொத்துக்கள் அதிகமாக இருந்தும், அதை நண்பர்கள், உறவினர்கள் அல்லது கஷ்டப்படுபவர்களுக்கு கொடுக்க கூடாது என்ற எண்ணம் இருந்தால் அதை கஞ்சத்தனம் என்று சொல்வர்.

4) மோஹ – என்பது

தன் ஆசையால் காதல், திருமணம் என்று செய்து குழந்தைகளும் பிறந்ததும், தன்னிடம் இருக்கும் செல்வங்கள் போதாது என்று மேலும் சம்பாதிக்க ஆசைப்பட்டு துயரம் அடைவர். .

5) மத – என்பது

பணம் அதிகமாக சேர்த்து விட்டதால் மற்றவர்களை மதிக்காமல், அலட்சியமாகவும் அகம்பாவமாகவும் நடந்து கொள்வர்

6) மச்சர – என்பது

தனக்கு கிடைத்த செல்வமும் பொருளும் மற்றவர்களுக்கும் கிடைத்து விட்டதே என்று பொறாமையால் அவர்களுக்கு தீங்கு நினைக்கும் குணம் கொண்டவர்கள்

7) டம்ப – என்பது

டம்ப என்பதை ஆடம்பரம் என்று சொல்வர். அதாவது ஒருவர் தனக்கு விருப்பம் இல்லையென்றாலும், தற்பெருமைக்காக தர்மம் செய்து தன்னை விளம்பரப்படுத்திக் கொள்வர். .

😎தர்ப்ப – என்பது

இந்த உலகத்தில் தன்னை போல் யாருமே கிடையாது, நான் தான் அனைத்திலும் சிறந்தவன் என்று கர்வம் அடைவதை கர்வம் – அகங்காரம் என்று சொல்வர்.

9) ஈர்ஷை – என்பது

தனக்கு வந்த கஷ்டமும் துயரங்களும் மற்றவர்களும் அனுபவிக்க வேண்டும் என்று நினைப்பவர்கள்

10) அசூயை – என்பது

ஒருவர் தனக்கு செய்த கெடுதலை அவருக்கே திருப்பி கொடுத்து பழிதீர்க்க வேண்டும் என்று நினைப்பவர்கள்

தினசரி பத்திரிகைச் செய்திகளில் காணும் ஈவிரக்கமற்ற கொலைகளும், வன்முறை நிகழ்வுகளும்,அரசியல் கலாட்டாக்களும் இந்த பணம் செய்யும் அநியாயங்கள்தான்…தினமும் நிகழும் அயோக்கியத்தனங்கள்தான் இவற்றிற்கு எடுத்துக் காட்டு….

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 236**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்துல் அல்பலத் - (இந்த) நகரம் - 7 )**

اَيَحْسَبُ اَنْ لَّمْ يَرَهٗۤ اَحَدٌ

தன்னை ஒருவரும் பார்க்கவில்லையென்று அவன் எண்ணுகிறானா?

(குர்ஆன் : 90:7)

மேற்கண்டவாறு பொருளை துஷ்பிரயோகம் செய்து அழிப்பதை ஒருவரும் காணவில்லை என்று துன்மார்க்கர்கள் எண்ண வேண்டாம். இறைவன் அவர்கள் செலவு செய்யும் இனங்களையும்,துஷ்பிரயோகம் துறைகளையும் அறிவதுடன், அவர்களுடைய மனத்தினுள் உள்ள எண்ணங்களையும் கூட அறிவான்.

"தெரிந்தே விதிகளுக்குப் புறம்பாக அல்லது தவறாகப் பயன்படுத்துதல்; முறை தவறிய பயன்பாடு இதையே துஷ்பிரயோகம் எனப்படும்.

ஒவ்வொருவருக்கும் அவரவர் நன்மை தீமைகளைக் குறித்து கூலியும் அளிப்பான் என்பது இவ்வாயத்திற் கூறப்பட்டுள்ள விபரம்.

ஒருவனுடைய வயதைக் குறித்து எதில் அதனைச் செலவு செய்தாய்? என்றும்,

அவனது கல்வியைக் குறித்து எப்படி அமல் செய்தாய் என்றும்,

அவனது பொருளைக் குறித்து எங்கிருந்து அதனைச் சம்பாதித்தாய், எவ்வழியில் அதனைச் செலவு செய்தாய்? என்றும்,

அவனது உடல் உழைப்பை எப்படிப் பயன்படுத்தினாய் என்று விசாரிக்கப்படும் வரை,

அடியான் தனது இருகால்களையும் வேறுபக்கம் எடுத்து வைக்க முடியாது என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். நூல்:- திர்மிதி

வயது, கல்வி, பொருள் மற்றும் செல்வாக்கு ,உழைப்பு இவைகளில் அவனுக்கு கிடைத்த அதிகாரத்தை வைத்

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 237**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்துல் அல்பலத் - (இந்த) நகரம் - 😎**

اَلَمْ نَجْعَلْ لَّهٗ عَيْنَيْنِۙ

அவனுக்கு நாம் இரண்டு கண்களை ஆக்கவில்லையா? (குர்ஆன் : 90:8)

பார்வை என்னும் பேரற்புதம் :-

நம் உடலில் உள்ள ஐம்புலன்கள் வெளி உலகோடு நம்மை தொடர்பு படுத்துகின்றன. பார்த்தல், நுகர்தல், தொடுதல், கேட்டல் மற்றும் ருசித்தல் இவை இல்லாத ஒரு வாழ்க்கை எப்படி இருக்கும் என்று யூகித்து பாருங்கள்!

அதனால் தான் ‘கூன், குருடு, செவிடு , பேடு நீங்கி பிறத்தல் அரிது’ என்று ஔவை பாடினார். இப்புலன்களின் மத்தியில் பார்வைக்கு ஒரு தனித்தன்மையான இடம் உண்டு. அவை என்னவென்று கொஞ்சம் பார்ப்போமா ?

மனிதமூளையில் ஒரு வினாடிக்கு 3 பில்லியன் மின்செயல்பாடுகள் நடைபெறுகிறது. இதில் 2 பில்லியன் செயல்பாடுகள் பார்வையோடு சம்பந்தப்பட்டு உள்ளது. சின்ன உதாரணத்துடன் சொல்றேன்.

உங்கள் அலைபேசிக்கு வரும் அழைப்புகளில் நூற்றில் அறுபத்தி ஆறு அழைப்புகள் ஒரு நபரிடமிருந்து வருமென்றால், கண்டிப்பாக அந்த நபர் முக்கியமானவர் தானே. மீதி நான்கு புலன்களுக்கு ஒட்டு மொத்தமாக உபயோகப்படும் மூளை நரம்பு செல்களை காட்டிலும் பார்வைக்கு மட்டும் அதிகமான நரம்பு செல்களை மூளை பயன்படுத்துகிறது.

இதிலிருந்து பார்வையின் நுட்பத்தையும் முக்கியத்துவத்தையும் நாம் அறிந்து கொள்ளலாம்.

இவ்வளவு ஏன்? நமக்கு பிடித்தவர்களை ‘கண்ணே ! கண்மணியே!’ என்று அழைப்பதும், ‘கண்ணுக்கு கண்ணாய் பார்த்து கொள்வேன்’ என்று ஆசையாய் உறுதி கொடுப்பதும், கண்களின் அவசியத்தை எடுத்து காட்டுகின்றது.

எப்படி பார்க்கிறோம்?

நாம் எப்படி பார்க்கிறோம்? அந்த காலாத்து எகிப்திய பண்டைய நாகரீகம் தொடங்கியே மனிதன் இந்த கேள்விக்கு பதிலை ஆராய்ந்து கொண்டிருக்கிறான். நவீன விஞ்ஞான உதவியால் கண்களின் செயல்பாடுகள், பார்வை தெரியும் செயல்முறைகள் பெரும்பாலும் அறியப்பட்டு இருக்கின்றன. இன்னும் பலதரப்பட்ட ஆராய்ச்சிகள் நடந்து கொண்டும் இருக்கின்றன.

கண்களை புகைப்பட கருவிக்கு (camera) ஒப்பிடலாம் (நவீன டிஜிட்டல் கேமரா அல்ல, அந்த காலத்து புகைப்பட சுருள் கேமரா). லென்ஸ் ஒளியை குவித்து உள்ளே அனுப்ப, பார்க்கபடுகிற பொருளின் பிம்பம் புகைப்பட சுருளில்/ கண்களின் விழித்திரையில்( retina ) தலைகீழாக விழுகின்றது.

விழித்திரையில் கூம்பு (cones) செல்கள் மற்றும் ராட் (rods) செல்கள் உள்ளன. மனித விழித்திரையில் 120 மில்லியன் ராட் செல்களும், 6 மில்லியன் கூம்பு செல்களும் உள்ளன. பகல் நேரத்தில் கூம்பு செல்களும் ஒளி குறைந்த மற்றும் இரவு நேரங்களில் ராட் செல்களும் ஒளியால் தூண்டப்பட்டு அவற்றில் ரசாயன மாற்றங்கள் ஏற்பட தொடங்குகின்றன.

இம்மாற்றங்களால் பிம்பம் மின்சக்தியாக மாற்றப்பட்டு விழித்திரையின் மூன்று அடுக்கு செல்களின் மூலமாக பார்வை நரம்பை (optic nerve) சென்றடைகிறது .

இச்செய்தி பார்வை நரம்பு, பார்வை பிணைப்பு (optic chiasma), பார்வை தடங்கள் (optic tract) மூலமாக மூளையின் பின்பகுதியை (visual cortex) சென்றடைகிறது. மூளையில் மீண்டும் பிம்பம் நேராக்கபட்டு நமக்கு உணர்த்தபடுகிறது.

இதில் பார்க்கபடுகிற பொருளின் இருப்பு, அளவு, நிறம், வெளிச்சம், நிலை (position), அசைவு, அதன் தொலைவு, ஆழம் இப்படி பல விஷயங்களை இயல்பாக விழித்திரை மூளைக்கு தெரிய படுத்துகிறது. பார்வை என்கிற வார்த்தையில் இவ்வனைத்தும் அடங்குகின்றன.

பள்ளிக் கூடத்தில் ஒரு விளையாட்டு சொல்லி தரப்படும். மாணவர்களை ஒருவர் பின் ஒருவராக வரிசயாக நிற்க வைத்து, முதல் மாணவனிடம் ஒரு செய்தி சொல்லப்படும். அவன் அவனுக்கு பின் நிற்கும் மாணவனிடம் சொல்ல வேண்டும். இப்படி செய்தி எல்லோரிடமும் சென்று கடைசி நபரிடத்தில் வரும் போது மொத்தமாக மாறி இருக்கும்!

அனால், நம் விழித்திரையின் செல்களில் உருவாகும் செய்தி, பல அடுக்கு செல்கள் மூலமாக, பல நரம்பிழைகள் மூலமாக மூளையை துல்லியமாய் தவறின்றி செல்லும் விந்தையை அதிசயம் என்று சொல்லாமல் வேறென்ன சொல்ல !

எவ்வளவு முயன்றும் இன்னும் விஞ்ஞானிகள் முழுமையாக விழித்திரையை போல பணியாற்றக்கூடிய chip களை இன்னும் கண்டு பிடிக்க இயலவில்லை.

ஒருங்கிணைந்த பார்வை

இது மட்டுமல்ல. நாம் இரண்டு கண்களால் பார்க்கிறோம் ஆனால் நமக்கு உலகம் இரண்டிரண்டாக தெரிவது இல்லை. ஒரு கண்ணால் பார்ப்பது போல, நாம் உலகத்தை காண்கிறோம். இரண்டு கண்களும் ஒரு சேர இயங்குவதாலும் , மூளையின் செயல்பாடினாலும் இப்படிப்பட்ட ஒருங்கிணைந்த பார்வை சாத்தியாமாகிறது. இதனால் தானே என்னவோ குர்ஆனில் ( 90: 8 ) -ல் இறைவன் அவனுக்கு இரு கண்களை கொடுக்கவில்லையா ?

இப்படி கண்கள் ஒருசேர நகர கண்களின் தசைகள் முக்கிய பங்காற்றுகின்றன. உடலின் மற்ற தசைகளை காட்டிலும் கண்களின் தசைகள் அதிக வேலை செய்கின்றன.

ஒரே பொருளின் இரண்டு கண்களின் பார்வை கோணங்கள் வித்தியாசப்படும். அதனால் நமக்கு அப்பொருளின் முப்பரிமாண உணர்வை பெறமுடியும்.

திரைப்பட அரங்கங்களில் முப்பரிமாண காட்சியைப் பார்ப்பதற்கு அதற்கு என கண்ணாடி அணிந்து கொள்வது திரையில் விழும் தனித் தனியான இரண்டு கோணங்களின் காட்சிகளைப் பார்பதற்குத் தான்.

அப்படியென்றால் மாறுகண் (squint eye) உள்ளவர்களின் நிலைமை எப்படியிருக்கும்.?

அதிக அளவில் மாறுகண் உள்ளவர்களால் முப்பரிமாண காட்சியைப் பார்க்கவே முடியாது. ஏனெனில் ஒரே சமயத்தில் இரண்டு கண்களால் காட்சிகளை அவர்களால் காண முடியாது. ஒரு சமயத்தில் ஒரு கண்ணால் தான் பார்க்க முடியும். மூளை மாற்றி மாற்றி கண்களை உபயோகித்துக் கொள்ளும்.

ஒரு கண் நம்மை பார்ப்பது போல் இருக்கும் ஆனால் அவர்கள் மற்றோறு கண்ணால் வேறு எங்கேயோ பார்த்துக் கொண்டு இருப்பார்கள்.

மான் போன்ற மிருகங்களுக்கு கண்கள் பக்க வாட்டில் இருப்பது தற்காப்புக்காக . கண்களை மாற்றி மாற்றி பார்ப்பதால் பார்வை கோணம் அதிகமாகும்.

அதேபோல புலி சிங்கம் போன்ற மிருகங்களுக்கு கண்கள் முன்பக்கமாக இருப்பது முப்பரிமாண காட்சிக்குத்தான். மான் எவ்வளவு தொலைவில் ஒடுகிறது என்று துல்லியமாக அதனால் அறிய முடியும்.

- ஒரு மனிதனின் கண், 10 மில்லியன் நிறங்களை துல்லியமாக இனங்காண முடியும்.

- உலகில் அதிகமானோர் கபில (brown) நிற கண்களை கொண்டுள்ளனர்.

- நம் உடலிலேயே மிக விரைவாக செயல்படும் தசை, நமது கண்களே. அதனால்தான் கணப்பொழுதில்/ விரைவாக நடந்து முடிந்த ஒன்றை "கண்ணிமைக்கும் நொடியில் " என்று குறிப்பிடுவார்கள்.

- ஒருவர் தனக்கு பிடித்தவர்களை பார்க்கும்போதும், பயப்படும் போதும் அவரது கண்மணி (pupil🤔) 45 சதவிகிதம் விரிவடையுமாம்.

- ஒருவர் கண்களை பார்த்துப்பேசும்போது பொய் சொல்லமாட்டார் என்னும் கூற்று தவறானது. உண்மையிலேயே மனிதர்கள் பொய் சொல்லும்போது, எதிரே இருப்பவர் தன்னை நம்பவேண்டும் என்பதற்காக அவர்களின் கண்களை பார்த்து பேசுவார்களாம்.

- Heterochromia என்னும் நிலையில் பிறந்தவர்களின் கண்கள் இரண்டு வெவ்வேறு நிறங்களில் இருக்குமாம்.

- நாம் படிக்கும்போழுது குறைவாகவும், பேசும்போது அதிகமாகவும் கண்ணிமைக்கிறோம்.

- மனிதர்கள் அழும்போது, அவர்களின் முதல் கண்ணீர்த்துளி வலது புற கண்ணிலிருந்து வந்தால் அது மகிழ்ச்சியை குறிக்கும். இடது புற கண்ணிலிருந்து வந்தால் வலியை குறிக்கும்.

- நீல நிற கண்களை கொண்டவரால் பிறரை காட்டிலும் இருளில் சுலபமாக பார்க்க இயலும்.

- காதணி அணிவது கண்பார்வையை மேம்படுத்தும். இதனால்தான் கடற்கொள்ளையர்கள் (pirates) காதணி அணிந்தார்களாம்.

- நமது கண்கள் ஒரே நொடியில் 50 பொருட்களை நோக்கும் சக்தி கொண்டது.

கணவன்-மனைவி என்று இருவரும் கருப்பு அல்லது கபில நிற கண்களை கொண்டுள்ள பட்சத்தில், மனைவியானவள் நீல நிற கண்களை கொண்ட குழந்தையை பெற்றெடுப்பது சாத்தியமே.

ஆனாலும், முன்பு இதுபோல் பெற்றெடுக்கும் பெண்களை சமுதாயம் பழித்ததாம். காரணம், முன்புள்ளவர்கள் நீல நிற கண்களை கொண்ட பெற்றோர் மட்டுமே, நீல நிற கண்களையுடைய குழந்தையை பெற்றெடுக்க முடியும் என்று நம்பினார்களாம்.

கண்கள் உடலில் ஜன்னல் போன்றவை என்று கூறப்படுவதுண்டு. மனதின் உணர்ச்சிகள் மட்டும் இல்லை, உடலில் ஏற்படும் பல்வேறு நோய்களின் அறிகுறிகளையும் கண்களில் காண முடியும். சர்க்கரை, உயர் இரத்தஅழுத்தம் போன்ற நோய்கள் உடலின் பிற முக்கிய உறுப்புகளை தாக்குவதன் அறிகுறிகளை கண்களின் விழித்திரையில் ஆரம்ப கட்டத்திலேயே காணலாம்.

படம் :- ஓமெடாஃபோபியா ( Ommatophobia ) என்பது கண்களைப் பார்த்தால் பயம். இந்த படத்தின் பெண் கண்கள் உங்களை பயமுறுத்தினால், கம்பெனி பொறுப்பல்ல.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 238**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்துல் அல்பலத் - (இந்த) நகரம் - 9) (பகுதி - 1)**

وَلِسَانًا وَّشَفَتَيْنِۙ

மேலும் நாவையும், இரண்டு உதடுகளையும் (ஆக்கவில்லையா)?

(குர்ஆன் : 90:9)

( ஒரு நாவும் இரண்டு உதடுகளும் )

உங்கள் ரகசியங்களைத் தெரிந்தவன் ஒருநாள் உங்களைக் கைதியாக்கி விடுவான். அவனுக்கு நீங்கள் அறிந்தோ அறியாமலோ அடிமையாகிவிடுவீர்கள்.

‘இருவரைக் கடந்துவிட்டால் எதுவும் ரகசியமல்ல’ என்று பழைய சொலவடை ஒன்று இருக்கிறது. ‘யார் அந்த இருவர்?’ என்று ஒருவரிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர், இரு உதடுகள் மீது விரல் வைத்து ‘இவர்கள்தான்’ என்று சுட்டிக் காட்டினார். உண்மைதான் இரு உதடுகளைக் கடந்துவிட்டால் எதுவும் ரகசியமல்ல.

அனஸ் (ரலி) அவர்களை (இறைத்தூதரின் பணியாளர்) நபி (ஸல்) அவர்கள் ஒருநாள் ஒரு பணி நிமித்தமாக வெளியே அனுப்பினார்கள். செல்லும் வழியில் தமது தாயாரைச் சந்திக்கின்றார் அனஸ் (ரலி).

அனஸ் (ரலி) அவர்களுடைய தாயார் கேட்டார்கள்: ‘எங்கு செல்கின்றீர்?’

அனஸ் (ரலி): ‘அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒரு வேலை நிமித்தமாக என்னை அனுப்பியுள்ளார்கள்’.

தாயார்: ‘என்ன வேலை?’

அனஸ் (ரலி): ‘அது ரகசியம். அல்லாஹ்வின் தூதருடைய ரகசியத்தை நான் வெளியே சொல்லக் கூடாது. சொல்லவும் மாட்டேன்’.

தாயார்: ‘அவ்வாறெனில் யாரிடமும் அதை நீ கூற வேண்டாம்’. (புகாரி, முஸ்லிம்)

தமது சொந்தத் தாயாரிடம் கூட அந்த ரகசியத்தை அனஸ் (ரலி) கூறவில்லை என்பதும், அனஸ் (ரலி) அவர்களை நபி (ஸல்) அவர்கள் எதற்காக அனுப்பினார்கள் என்பதும் இறுதிவரை யாருக்கும் தெரியாமலேயே போய்விட்டதும் ரகசியம் பேணுவதின் முக்கியத்துவத்தை உணர்த்திச் செல்கிறது.

தொலைத் தொடர்பு சாதனங்களைவிட வேகமாக பிறரின் ரகசியத்தைப் பரப்பும் மக்களும் இருக்கத்தான் செய்கின்றார்கள். அனைவரைவிடவும் மிகவும் ஆபத்தானவர்கள் இவர்களே. இவர்களிடம் சற்று எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

உமர் (ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்ற தினத்தில் தாம் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்ட செய்தி உடனடியாக மக்காவின் வீதிகளில் ஒலிக்க வேண்டும் என்பதை விரும்பினார். ஆயினும் இன்றைய நாட்களைப் போன்று தொலைதொடர்பு சாதனங்கள் அன்று இருக்கவில்லையே. என்ன செய்தார் தெரியுமா..?

பரம ரகசியம் என்று சொன்னால் உடனடியாக அதை அடுத்தவரிடம் பரப்பும் நபர் யார் என்று விசாரித்தார். ஜமீல் பின் மஅமர் என்பவரைக் குறித்து கேள்விப்பட்டார்.

நேராக அவரிடம் சென்று, 'உன்னிடம் ஒரு ரகசியம் சொல்வேன். நீ யாரிடமும் கூறக்கூடாது' என்று கூறினார்.

'என்ன ரகசியம்?' என்று அவர் கேட்டார்.

'நான் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டேன். ஆயினும் இதை நீ யாரிடமும் கூறிவிடாதே' என்று கூறிவிட்டு அங்கிருந்து எழுந்து சென்றுவிட்டார்.

உமர் (ரலி) அவர்களின் தலை மறைந்ததுதான் தாமதம் ஜமீல் பின் மஅமர் எழுந்து, 'உமர் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டார்.. உமர் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டார்' என்று கூறியவாறே மக்காவின் வீதிகளில் கண்ணில் படும் அனைவரிடமும் கூறியவாறு ஓடத் தொடங்கினான்.

கொஞ்ச நேரத்தில் மக்காவாசிகள் அனைவரும் உமர் (ரலி) இஸ்லாத்தை ஏற்ற செய்தியை அறிந்துகொண்டனர். உமர் (ரலி) அவர்களும் இதைத்தான் விரும்பினார்கள்.

விஞ்ஞான ரீதியாக உதடுகள் குறித்து.....

உணர்ச்சிவசப்பட்டால் துடிக்கிறது ! சந்தோஷத்தில் குவிகிறது செக்ஸ் மற்றும் பாச உணர்வு வந்தால் குழைகிறது! தொட்டால் மென்மையாக இருக்கிறது ! அட , முத்தமிட்டால் சுவைக்கிறது !

காரணம் மர்ம உறுப்புகள் மார்பு நுனியான நிப்பிள் உதடுகளில் நரம்புகள் அதிகம் இந்த இடங்களை Erotic Areas என்று சொல்கிறார்கள் தொட்டால் போதும் சும்மா அதிரும்லே . . . . . .

உதடுகளை உதடுகளால் மட்டும் அல்ல விரலால் தொடடால் கூடப் போதும் . . . . . உடனே " உணர்ச்சிவசப்படுங்கள் " என்று உடம்பின் இருக்கும் அத்தனை நரம்புகளுக்கும் செய்திகள் மின்னல் வேகத்தில் செல்லும். இதனால்தானோ உதடுகள் குறித்து குர்ஆன் பேசுகிறதோ ?

இமாம் முனவி ரஹ்மதுல்லாஹி அலைஹி உரைக்கிறார்கள்:

"புணர்ச்சிக்கு முன் முன்விளையாட்டும் அழுத்தமான காதல் முத்தங்களும் வலியுறுத்தப்பட்ட நபிவழியாகும். (ஸுன்னா முஅக்கதா) அதற்கு மாற்றமாக நடப்பது விரும்பத்தகாததாகும் (மக்ரூஹ்)". (ஆதாரம்: ஃபைழ் அல்-காதிர் ஷரஹ் அல்-ஜாமிஃ அல்-ஸகீர் 5:115)

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அறிவிக்கப்படுகிறது:

"உங்களில் எவரும் மிருகத்தைப் போன்று தன் மனைவியை அணுகக்கூடாது. அவர்களுக்கு இடையில் தூது அனுப்புதல் வேண்டும்.

"அல்லாஹ்வின் தூதரே! (இங்கே) தூது என்பது யாது?" என வினவப்பட்டதற்கு,

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள், "முத்தமும், இன்சொற்களும் (கொண்ட முன்விளையாட்டு) என பதிலளித்தார்கள்."

(ஆதாரம்: இமாம் கஸ்ஸாலி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் இத் ஹாஃப் அல்-ஸாதாத் அல்-முத்தகீன் பிஷரஹ் இஹ்யா உலூம் அல்-தீன் 6:175)

அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிரார்கள்:

"அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தம் மனைவியர்களில் ஒருவரை முத்தமிட்டுவிட்டு, ஒளூச்செய்யாமலே தொழச் சென்றார்கள். (ஆயிஷா ரளியல்லாஹு அன்ஹா அவர்களிடமிருந்து அறிவிக்கும்) உர்வா கூறுகிறார்,

"நான் ஆயிஷாவிடம் 'அது நீங்களாகத்தான் இருக்கும்?' என்றேன். அதற்கு அவர்கள் புன்னகைத்தார்கள்:."(ஆதாரம் ஸுனன் திர்மிதீ 86, ஸுனன் அபூதாவூத் 181, சுன்பன் அந் நஸாஈ 170)

கிட்னி மாற்று ,நுரையீரல் மாற்று கல்லீரல் மாற்று கூட உண்டு . . . ஆனால் தோல் மாற்று கிடையாது

உடம்பின் மற்ற இடங்களில் தீக்காயம் ஏற்பட்டு தோல் சேதமானால் கை கால்களில் உள்ள தோலை எடுத்து பொருத்திவிடலாம்.ஆனால் . .

உதடுகளில் தீக்காயத்தோடு ஒரு இளம் பெண் குறிப்பிட்ட மருத்துவமனைக்கு வந்தாள் உதடுகள் முழுவதும் தீக்காயத்தால் கருகி இருந்தது. இன்னும் சொல்லப் போனால் உதடு இல்லாமல் இருந்தது. அந்தப் பெண்ணுக்கு ஆப்ரேஷன் செய்தாக வேண்டும் . .

உதட்டில் மிக அதிகமான நரம்புகள் இருக்கும் உதட்டு தோலோடு 'மேட்ச்' ஆகக் கூடிய தோல் உடம்பில் வேறு எங்கும் இல்லை. ஒரே ஒரு இடம் இருக்கிறது அது ரொம்பவும் "ரிஸ்க்'''கான இடம் அந்த இடம் பெண்ணின் மர்ம ஸ்தான உறுப்பின் தோல்தான் !

சாதாரணமாக உதடு தோல் அடித்து தடித்து கொஞ்சம் காயப்பட்டாலே முகம் விகாரமாக ஆகிவிடும் இதில் தோலே கரித்து இல்லாமல் இருந்தால் பார்க்க எப்படி இருக்கும் ? ஆகையால் உதடு முக்கியம் அதுவும் பெண்ணாச்சே . . . . .

வேறு என்ன செய்ய ? . . . . .' அங்கே ' வெட்டி எடுத்து . . . . ( என்ன கதையா கேக்றீங்க ).

சரி . . சரி . . ஆப்ரேஷன் நல்ல மாதிரியாக நடந்து முடிந்தது . ஆப்ரேஷனைப் பற்றி கற்பனை செய்ய வேண்டாம் என கேட்டுக் கொள்ளபடுகிறது.

ஆப்ரேஷனுக்குப் பிறகு அந்தப் பெண் 'உதட்டோடு' வந்தாள்.

( நல்ல வேளை ஆணுக்கு உதடுகளில் தீக்காயம் ஏற்பட்டு சேதமடைந்ததால் , ஆப்ரேஷன் செய்ய தோலை எங்கு எடுக்க ? ...என்று யாரும் யோசித்து வைக்கவில்லையாம் )

எவ்வளவு தூரம் நீங்கள் ரகசியத்தைப் பேணுகின்றீர்களோ அவ்வளவு தூரம் மக்கள் உங்களை நம்புவார்கள். இதயங்களில் இடம் தருவார்கள். உங்களைக் குறித்த மதிப்பு அவர்களிடம் உயரும். ‘நம்பிக்கைக்கு உரியவர்கள்’ என்று உங்களைக் கருதுவார்கள்.

எனவே முடிந்தவரை உங்கள் ரகசியங்களை உங்கள் மனங்களிலேயே பூட்டி வையுங்கள். கூடவே பிறரது ரகசியங்களையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்.ஒருபோது வெளிப்படுத்தாதீர்கள்.

ஏனெனில் உங்கள் ரகசியங்களைத் தெரிந்தவன் ஒருநாள் உங்களைக் கைதியாக்கி விடுவான். அவனுக்கு நீங்கள் அறிந்தோ அறியாமலோ அடிமையாகிவிடுவீர்கள்.

இதனால்தான் இறைவன் ரகசியத்தை சொல்ல நாவையும் , அதனை வாய்க்குள்ளே பூட்டி வைக்க இரு உதடுகளையும் படைத்தானோ ..?

تَلْفَحُ وُجُوْهَهُمُ النَّارُ وَهُمْ فِيْهَا كٰلِحُوْنَ

(நரக) நெருப்பு அவர்களுடைய முகங்களை கரிக்கும்; இன்னும் அதில் அவர்கள் உதடு சுருண்டு (முகம் விகாரமானவர்களாக) இருப்பார்கள். (அல்குர்ஆன் : 23:104) (மீள் )

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 239**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்துல் அல்பலத்-(இந்த) நகரம்-10) (பகுதி - 2)**

وَلِسَانًا وَّشَفَتَيۡنِۙ

மேலும் நாவையும், இரண்டு உதடுகளையும் (ஆக்கவில்லையா)?

(குர்ஆன் : 90:9)

அல்லாஹ் மனிதனுக்குக் கணக்கிட முடியாத பாக்கியங்களைக் கொடுத்தருளியிருக்கிறான். அவற்றில் ஒன்றிரண்டை இங்கு குறிப்பிட்டுக்காட்டுகிறான்.

பொருள்களை தெரித்து கொள்ளக்கூடிய பார்வையுள்ள இரு கண்களை அருளியிருக்கின்றான். தன் கருத்துக்களை வெளியிடக் கூடியதும், ஜீவித்திருப்பதற்கு அவசியமான உணவை ருசித்து உட்கொள்ளத் தேவையானதுமான நாவையும், உதடுகளையும் கொடுத்திருக்கிறான்,

மனிதனுக்கு அல்லாஹ் அளித்திருக்கிற பாக்கியங்களில் கண்களும் நாவும் மிக முக்கியமானவை, கண்ணில்லாது போனால் மனிதனால் எந்த ஒரு காரியமும் செய்ய முடியாது. மிகுந்த துன்பத்திற்குள்ளாக வேண்டியிருக்கும். ஆகவே மனிதனுக்குக் கொடுக்கப்பட்ட உறுப்புகளில் கண்கள் பிரதானமானவை என்பதை யாரும் மறுக்க முடியாது.

இதைப் போலவே நாவும் ஒரு பிரதானமான உறுப்பாகும். பேச்சு மனிதனை மிருகத்தை விட்டும் பிரித்துக் காட்டுகின்றது. உணவிலுள்ள பல சுவைகளையும் அறிந்து கொள்கிறது.

ஒரு மனிதனை மேன்மைப்படுத்துகிறதற்கும் தாழ்மைப் படுத்துகிறதற்கும் உள்ள சாதனங்களில் நாவு மிக முக்கியமானது, அல்லாஹ் தனக்கு அருளியிருக்கும் இம்மேலான உறுப்புகளாகிய கண்களையும் நாவையும் அல்லாஹ் விலக்கியிருக்கும் காரியங்களை விட்டும் நீங்கி அல்லாஹ் செய்யும்படி கட்டளையிட்டிருக்கும் காரியங்களை அனுஷ்டிப்பதுதான் நியாயமானது,

நாவு பிரதான உறுப்பென்பதையும் அதை எவ்வாறு உபயோகப்படுத்துவது என்பதையும் பற்றி பின்வரும் ஹதீதுகள் நன்கு விளக்குகின்றன.

உக்பா இப்னு ஆமிர் (ரலி) என்னும் ஸஹாபி அவர்கள், நபிகள் பெருமான் (ஸல்) அவர்களிடம், "எதைக் கொண்டு முக்தி அடையலாம்?" என்று கேட்டபோது, 'உன்னுடைய நாவை அடக்கி, வீட்டில் தனித்திருந்து, உன்னுடைய பாவங்களை நினைத்து அழுது கொண்டிரு''என்று நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் அருளினார்கள். (திர்மிதி)

"தனது இரு தாடைகளுக்கு இடையிலுள்ளதை (நாவை)யும், தனது இரு தொடைகளுக்கு இடையிலுள்ள (வெட்க ஸ்தலத்)தையும், பாவங்கள் செய்வதை விட்டும் பேணிக் கொள்வதாக எனக்கு எவர்களாவது பொறுப்பு (ஜாமீன்) கொடுத்தால் அவர்களுக்குச் சுவர்க்கத்தைப் பற்றி நான் பொறுப்பாளியாக இருப்பேன்.(ஹதீஸ், புகாரி).

ஆதமுடைய மகனே ! உனது நாவு, நான் உனக்கு விலக்கியிருக்கிற காரியங்களில் உனக்குப் பிணங்கிக் கொள்ளுமாயின், இரண்டு மூடிகளைக் (உதடுகள்) கொண்டு உனக்கு உதவி செய்திருக்கிறேன். நீ கொண்டு மூடிக்கொள்.

மேலும் உனது பார்வை, உனக்கு நான் விலக்கி இருக்கிற சிலவற்றில் உன்னுடன் பிணங்கிக் கொண்டால், இரண்டு மூடிகளைக் ( இமைகள்) கொண்டு உனக்கு நான் உதவி புரிந்திருக்கிறேன். எனவே நீ அதனை கொண்டு மூடிக்கொள்.

உனது வெட்கஸ்தலம், நான் விலக்கி இருக்கிற காரியத்தைப் பற்றி உன்னிடம் பிணங்கிக் கொள்ளுமாயின், உனக்கு இரு மூடிகளைக் (தொடைகள்) கொண்டு நான் உதவி செய்துள்ளேன். எனவே அதனைக் கொண்டு மூடிக்கொள்வாயாக என்று அல்லாஹ் கூறுகிறான். அல்ஹதீஸ்

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 240**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்துல் அல்பலத்-(இந்த) நகரம்-11)**

وَهَدَيْنٰهُ النَّجْدَيْنِ

அன்றியும் (நன்மை, தீமையாகிய) இருபாதைகளையும் நாம் அவனுக்குக் காண்பித்தோம். (குர்ஆன் : 90:10)

" அன்னஜ்தைனி" (இரண்டு பாதைகள்) என்பது நன்மை தீமைக்கான பாதைகளைக் குறிக்கிறது. தவிர, 'நஜ்துன்' என்பதற்கு உயரமான இடம் என்பது அசல் பொருள்.

பெண்களுக்குரிய இரண்டு ஸ்தனபாரங்களையும் இது குறிப்பிடுவதாகவும் சொல்லப்படுகிறது. ஏனெனில், குழந்தைகள் பிறந்தவுடன் அவைகள் உயிர் வாழ்வதற்கான பால் என்னும் அமிர்தம் வருகிற வழிகளாக அவைகள் இருக்கின்றன. குழந்தைகள் இல்லாத பெண்களது ஸ்தனபாரத்தில் பால் இல்லை.

எனவே, குழந்தைகளது வாழ்வுக்காக இறைவன் இவ்விரண்டையும் இரு - பாதைகளாக ஏற்படுத்தியுள்ளான் என்றும் கருத்து உரைக்கப்படுகிறது. ( தப்ஸீருல் ஹமீது )

இந்த வசனத்திற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் விளக்கம் அளித்த போது 'இரு பாதைகள்' என்பது தாயின் இரு மார்பகங்களை குறிக்கிறது என்றார்கள்

அதாவது நாவையும் உதடுகளையும் மனிதனுக்கு கொடுத்த நாம் தாயின் மார்பகங்களில் தாய்ப்பாலை அருந்தி ஊட்டச்சத்துடன் வளர்வதற்கான வழியையும் வகுத்துள்ளோம். 'நஜ்த்' சொல்லுக்கு உயரமான ஒரு இடம். அதாவது 'மேடு' என்று பொருள் இருப்பது இக்கருத்துக்கு வலு சேர்க்கிறது.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 241**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்துல் அல்பலத் - (இந்த) நகரம் - 12 )**

فَلَا اقْتَحَمَ الْعَقَبَةَ

ஆயினும், அவன் கணவாயைக் கடக்கவில்லை.

(அல்குர்ஆன் : 90:11)

وَمَاۤ اَدْرٰٮكَ مَا الْعَقَبَةُ

(நபியே!) கணவாய் என்பது என்ன என்பதை உமக்கு எது அறிவிக்கும்.

(அல்குர்ஆன் : 90:12)

فَكُّ رَقَبَةٍ ۙ

(அது) ஓர் அடிமையை விடுவித்தல்-

(அல்குர்ஆன் : 90:13)

اَوْ اِطْعٰمٌ فِىْ يَوْمٍ ذِىْ مَسْغَبَةٍ ۙ

அல்லது, பசித்திருக்கும் நாளில் உணவளித்தலாகும்.

(அல்குர்ஆன் : 90:14)

يَّتِيْمًا ذَا مَقْرَبَةٍ ۙ

உறவினனான ஓர் அநாதைக்கோ,

(அல்குர்ஆன் : 90:15)

اَوْ مِسْكِيْنًا ذَا مَتْرَبَةٍ

அல்லது (வறுமை) மண்ணில் புரளும் ஓர் ஏழைக்கோ (உணவளிப்பதாகும்). (அல்குர்ஆன் : 90:16)

ثُمَّ كَانَ مِنَ الَّذِيْنَ اٰمَنُوْا وَتَوَاصَوْا بِالصَّبْرِ وَتَوَاصَوْا بِالْمَرْحَمَةِ

பின்னர், ஈமான் கொண்டு, பொறுமையைக் கொண்டு ஒருவருக்கொருவர் உபதேசித்தும், கிருபையைக் கொண்டு ஒருவருக்கொருவர் உபதேசித்தும் வந்தவர்களில் இருப்பதுவும் (கணவாயைக் கடத்தல்) ஆகும். (அல்குர்ஆன் : 90:17)

( வெள்ளிமேடை- velli medai-- juma khuthuba bayan -خطبة الجمعة கோவை அ,அப்துல் அஜீஸ் பாகவி Thursday, December 07, 2023 )

அல்லாஹ் நமக்கு வழங்கிய திருக்குர்ஆன் மகத்தான சிறப்புக்களை கொண்ட ஒரு வேதம்.

அது வணக்க வழிபாடுகளுக்கு பயன்படுகிற ஒரு நூலாக மட்டும் இல்லாமல் மக்களின் வாழ்க்கையில் பிரமிப்பூட்டும் திருப்பங்களை ஏற்படுத்தியது. இப்போதும் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறது.

அன்றைய அரபுகள் இலக்கியத்தில் அதிக ஈடுபாடு கொண்டவர்களாக இருந்தனர். வியாபாரிகளான அவர்கள் தங்களது சந்தைகளுக்கு சரக்குகளை கொண்டு வருவதோடு அவரவர்களது சமூகத்தில் உள்ள கவிஞர்களையும் அழைத்து வருவார்கள்.

கடைச் சரக்குகளை விற்ற பிறகு கவிதை சரக்குகளுக்கு சபை அமைப்பார்கள். அதில் சிறந்த கவிதைகளை தங்க எழுத்துக்களில் எழுதி கஃபாவின் திரையில் தொங்க விடுவார்கள். அப்படி தொங்க விடப்பட்ட கவிதைகளில் ஏழு கவிதைகள் மிகப் பிரபலமானவை.

இந்தக் கவிதகள் ஆபாசத்தின் உச்சத்தில் இருந்தன.

سبع معلقاتஏழு தொங்கும் கவிதைகளில் அதில் ஒன்று امرأ القيسஉடை கவிதை.

அந்தக் கவிதையில் அவன் தான் உறவு கொண்ட பெண்களின் கவர்ச்சிகளையும் பாலுறவு திறமைகளையும் பாடினான்.

இதை தான் அன்றைய அரபு மக்கள் ஆரவரித்து ரசித்தார்கள். (இப்போதும் கூட ஆபாசமான பாடல்கள் தானே மக்களிடம் பிரபலமடைகிறது)

இந்தச் சூழ்நிலையில் தான் திருக்குர் ஆன் அரபுகள் மிகவும் நேசித்த அதே இலக்கிய வடிவத்தில் அவர்கள் அதுவரை கேள்விப்பட்டிராத பண்பாடுகளை எடுத்துக் கூறியது.

திருக்குர் ஆனுடைய இலக்கியத்தில் மனதை பறிகொடுத்த மக்கள் அது பேசும் தத்துவங்களுக்கு தலை சாய்த்தார்கள். வரலாற்றின் பேரொழுக்கத்திற்கும் பெரும் பண்புகளுக்கும் சொந்தக்கார்ர்களாக மிளிர்ந்தார்கள். எந்த அளவுக்கென்றால் பெருமானார் (ஸல்) தன் தோழர்கள் அத்தனை பேர் குறித்தும் நம்பிக்கையோடு கூறினார்கள்

( ن جابر قال : قال رسول الله صلى الله عليه وسلم : ( أصحابي كالنجوم بأيهم اقتديتم اهتديتم

எனது தொண்டர்கள் அத்தனை பேரும் நல்லவர்கள் என்று சர்ட்பிகேட் வழங்கும் தைரியம் இந்த உலகில் எந்த தலைவருக்காவது இருந்தது உண்டா?

முஹம்மது நபி (ஸல்) அவர்களுக்கு மட்டுமே அந்த தகுதி இருக்கிறது.

அவ்வாறு ஒரு சமூகத்தை உருவாக்க அவர்களுக்கு மூல கருவியாக இருந்தது திருக்குர்ஆன்.

குர்ஆன் பேசிய பேரழுகளில் ஒன்றுதான் திருக்குர்ஆனுடைய 90 வது அத்தியாயமான அல்பலத் அத்தியாயம். மக்கா நகரின் மீது சத்தியமிட்டு அந்த அத்தியாயம் தொடங்குகிறது.

அதன் 11 முதல் 18 வரையிலான வசனங்கள் மிக அற்புதமானவை. அந்த வசனங்கள் ஆபாசம் கோலோச்சிய அரபுலகில் அதே கவித்துவ நடையில் மகத்தான் மானுடத்தை போதித்தவை.

فَلَا اقْتَحَمَ الْعَقَبَةَ (11) وَمَا أَدْرَاكَ مَا الْعَقَبَةُ (12) فَكُّ رَقَبَةٍ (13) أَوْ إِطْعَامٌ فِي يَوْمٍ ذِي مَسْغَبَةٍ (14) يَتِيمًا ذَا مَقْرَبَةٍ (15) أَوْ مِسْكِينًا ذَا مَتْرَبَةٍ (16) ثُمَّ كَانَ مِنَ الَّذِينَ آمَنُوا وَتَوَاصَوْا بِالصَّبْرِ وَتَوَاصَوْا بِالْمَرْحَمَةِ (17) أُولَئِكَ أَصْحَابُ الْمَيْمَنَةِ ()

இந்த வசனம் சிராத்துல் முஸ்தகீம் பாலம் பற்றியது.

இதன் கருத்து.

சிரமப்பட்டாவது அவர் சிராத்துல் முஸ்தகீம் பாலத்தை கடந்து விட வேண்டாமா? அந்தப் பாலத்தை கடக்கும் வழி என்ன தெரியுமா ? அடிமைகளை உரிமை விடுவதும், நெருக்கடி நாளில் நெருங்கிய அனாதைகளுக்கு உணவளிப்பதும், வறிய ஏழைகளுக்கு உணவளிப்பதும், நம்பிக்கை கொண்டு பொறுமையாக இருக்கவும் கருணையோடு நடந்து கொள்ளவும் பிறருக்கு உபதேசிக்கிற குழுவினரோடு சேர்ந்திருப்பதும் ஆகும். அவர்களே வலது புறம் இருப்பவர்கள் ஆவார்கள்,

சிராத்துல் முஸ்தகீமை கடப்பது என்பது ஒவ்வொரு முஃமின் பெருங்கவலையாகும்.

சிராத்துல் முஸ்தகீமை வெற்றி கரமாக கடந்து விட்டால் சொர்க்கம் சொந்தமாகிவிடும். அதை எவ்வளவு விரைவாக கடக்கிறோமோ அவ்வளவு சீக்கிரம் சொர்க்கம் செல்ல முடியும்.

சிராத்துல் முஸ்தகீம் பாலத்தை கடப்பது எளிதானதல்ல. சிலருக்கு அது மூவாயிரம் ஆண்டு தூரம் கொண்டதாக இருக்கும்

مسيرته ثلاثة الاف سنة

இன்று அரசுகள் போடுகிற பாலம் கட்டுகின்றன. அதற்கு கட்டணமும் வசூலிக்கின்றன. ஒரு நிமிடம் இரண்டு நிமிட்த்தில் நாம் அதை கடந்து விட முடியும். அதற்கே எவ்வளவு கட்டணம் செலுத்த வேண்டியிருக்கிறது ?

மக்கள் அவர்களது செயல்களுக்கு ஏற்ப சிராத்துல் முஸ்தகீம் காலத்தை கடப்பார்கள் என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

يؤمر بالصراط فيضرب على جهنم فيمر الناسر كقدر أعمالهم زمرا كلمح البرق، ثم كمر الريح، ثم كمر الطير، ثم كأسرع البهائم، ثم كذلك، حتى يمر الرجل سعيا، ثم مشيا، ثم يكون آخرهم رجلا يتلبط على بطنه، قال: فيقول: أي رب ـ لماذا أبطأت بي؟ فيقول لم أبطئ بك، إنما أبطأ بك عملك.رواه الحاكم

சிராத்துல் முஸ்தகீம் பாலத்தை கடக்க எப்படிப்பட்ட நற்செயல்கள் வேண்டும் ? இந்த பலத் அத்தியாயம் கூறுகிறது.

فَكُّ رَقَبَةٍ (13

அடிமைகளை உரிமை விடுவது.

ஆச்சரியமூட்டுகிற செய்தி இது.

கடவுளுக்கு வழிபாடு செய்வதை அல்ல; மக்களுக்கு உபகாரம் செய்வதை சிராத்துல் முஸ்தகீமை கடக்க வழியாக கூறுகிறது.

இந்த வசனத்திற்கு அடிமைகளை விடுதலை செய்து என்பது பொருள் என்றாலும் காலத்திற்கேற்ப அதற்கு பொருள் கொள்ள முடியும் என்று அறிஞர்கள் கூறுகிறார்கள். இந்த வகையில் நெருக்கடியில் சிக்கியிருப்பவர்களுக்கு உதவுகிற அனைத்து செயல்களையும் இது எடுத்துக் கொள்ளும் என்கிறார்கள்.

புயல் வெள்ளத்தில் சிக்கியிருப்பவர்களை காப்பாற்றுவது, அவர்களுக்கு தேவையான, இடவசதி, செய்திகளை தருவது, உணவளிப்பது, மற்ற நிவாரணம் பணிகள் அனைத்தையும் இது எடுத்துக் கொள்ளும்.

நிவாரணம் தேவையுடையோர் எவ்வளவு வசதியானவர்களாக இருந்தாலும் அவர்களுக்கு சேவை செய்ய வேண்டும்

தேவையுடையவர்கள் குதிரையில் வந்தாலும் சரி அவர்களுக்கு உதவு என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

( وى الإمام مالك في الموطأ عنه أن النبي صلى الله عليه وسلم قال : ( أَعْطُوا السَّائِلَ وَإِنْ جَاءَ عَلَى فَرَسٍ .

இதில் பேதம் பாராட்டக்கூடாது என முஹம்மது நபிகள் நாயகம் (ஸல்) கற்றுக் கொடுத்தார்கள்.

الرَّاحِمُونَ يَرْحَمُهُمُ الرَّحْمَنُ ، ارْحَمُوا مَنْ فِي الأَرْضِ يَرْحَمْكُمْ مَنْ فِي السَّمَاءِ ».أَخْرَجَهُ أَبُو دَاوُدَ

இவ்வாறு செய்கிற உதவிகள் வாழ்வில் நம்முடைய அனைத்து காரியங்களையும் இலேசாக்கி வைக்கும் என்று மற்றொரு வசனம் கூறுகிறது.

فأما من أعطى واتقى وصدق بالحسنى فسنيسره لليسرى وأما من بخل واستغنى وكذب بالحسنى فسنيسره للعسرى

இந்த வசனமும் மக்கள் பணியை தான் முதலாவதாக கூறுகிறது என்பதை நாம் கவனிக்க வேண்டும்.

பெருமானார் (ஸல்)அவர்கள் மேலும் சொன்னார்கள்

أن رسول الله صلى الله عليه وسلم قال: (من نفَّسَ عن مسلمٍ كُربةً مِن كُربِ الدُّنيا نفَّسَ اللَّهُ عنهُ كربةً مِن كُرَبِ يومِ القيامةِ، ومن يسَّرَ على مُعسرٍ في الدُّنيا يسَّرَ اللَّهُ عليهِ في الدُّنيا والآخرةِ، ومن سَترَ على مُسلمٍ في الدُّنيا سترَ اللَّهُ علَيهِ في الدُّنيا والآخرةِ، واللَّهُ في عونِ العَبدِ، ما كانَ العَبدُ في عونِ أخيهِ) (الألباني في صحيح الترمذي

عن أنس بن مالك رضي الله عنه أن النبي صلى الله عليه وسلم قال: "الخلق كلهم عيال الله وأحب خلقه إليه أنفعهم لعياله "الطبراني

ومعنى "عيال الله" فقراء الله

(அல்லாஹ்வின் குடும்பம் என்பதன் பொருள் அல்லாஹ்வின் உதவியில் வாழ்பவர்கள் என்பதாகும்).

இந்த வழிகாட்டுதல்கள் தேவையுடையவர்களுக்கு உபகாரம் செய்ய ஒரு வாய்ப்புக் கிடைத்தால் அதை தலைமேல் கடமையாக எடுத்துக் கொள்ளும் பக்குவத்தை முஸ்லிம் சமுதாயத்திற்கு வழங்கின. பேரரசர்களாக இருந்தவர்கள் கூட அவசர காலத்தில் மக்களுக்கு உதவும் செயலை நேரடியாக செய்தார்கள்.

உமர் ரலி அவர்கள் தன்னிடம் எதுவும் இல்லை என்று உதவி கேட்டு வந்த பெண்ணுக்கு தானே உதவிப் பொருட்களை எடுத்து வந்து கொடுத்து இது தீர்வதற்குள் அடுத்த உதவி வந்து சேரும் என்று ஆறுதல் படுத்தினார்கள்

ا رواه أسلم مولى عمر قال: (خرَجْتُ مع عمرَ بنِ الخطابِ رضي الله عنه إلى السُّوقِ، فلَحِقَتْ عمرَ امرأةٌ شابةٌ، فقالت: يا أميرَ المؤمنين، هلكَ زوجي وترَكَ صِبْيَةً صِغارًا، والله ما يَنْضِجون كُراعًا، ولا لهم زرعٌ ولا ضَرْعٌ، وخَشِيتُ أن تأكلَهم الضَبْعُ، وأنا بنتُ خَفافِ بنِ إيماءَ الغِفاريِّ، وقد شَهِدَ أبي مع النبيِّ صلى الله عليه وسلم، فوَقَفَ عمرُ ولم يَمْضِ، ثم قال: مرحبًا بنَسَبٍ قريبٍ. ثم انصرَفَ إلى بَعِيرٍ ظَهِيرٍ كان مربوطًا في الدارِ، فحَمَلَ عليه غَرارتَيْنِ ملأَهما طعامًا، وحَمَل بينهما نَفَقَةً وثيابًا، ثم ناولَها بخِطَامِه، ثم قال : اقْتَادِيه، فلن يَفْنَى حتى يأتيَكم اللهُ بخيرٍ، فقال رجلٌ: يا أميرَ المؤمنين، أكثرْتَ لها؟ قال عمرُ: ثَكِلَتْك أمُّك! واللهِ إني لأرى أبا هذه وأخاها، قد حاصرَا حِصْنًا زمانًا فافتَتَحَاه، ثم أصبحنا نَسْتَفِيءُ سُهْمَانَهما فيه) (صحيح البخاري 4160) .

அஜ்மீர் காஜா முயீனுத்தீன் சிஸ்தி ரஹ் அவர்கள் ஒரு குடியானவனுக்கு அவனது நிலம் பற்றிய பிரச்சனையில் உதவு வதற்காக அஜ்மீரிலிருந்து தில்லி வரை நடந்தே சென்றார்கள். அப்போதைய அரசர் இல்துமிஷ் தில்லியியின் வாசலுக்கே வந்து காஜா நாயகத்தை வரவேற்றார். இதை யாரிடமாவது சொல்லி அனுப்பியிருக்கலாமே என்றார். காஜா நாயகம் கூறினார்கள் இந்த நன்மை எனக்கு கிடைக்க வேண்டுமே அதற்காக நானே வந்தேன் என்றார்கள்.

சிராத்துல் முஸ்தகீம் பாலத்தை கடக்க உதவும் அடுத்த செயல் சிரமப்படுகிற நாளில் சொந்தக்கார அநாதைகளுக்கு உணவளிப்பது, அடித்தட்டிலிருக்கிற ஏழைகளுக்கு உணவளிப்பது என்று அல் பலத் அத்தியாயம் கூறுகிறது.

أَوْ إِطْعَامٌ فِي يَوْمٍ ذِي مَسْغَبَةٍ (14) يَتِيمًا ذَا مَقْرَبَةٍ (15) أَوْ مِسْكِينًا ذَا مَتْرَبَةٍ (16 )

பொதுவாக பசித்தோருக்கு உணவளிப்பதை பல வகைகளில் திருக்குர் ஆனும் முஹம்மது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மிகச் சிறப்பாக வலியுறுத்தியுள்ளார்கள்.

திருக்குர் ஆனின் அத்தஹ்ர் (76) அத்தியாயத்தின் 5 முதல் 12 வரையிலான வசனங்கள் உணவளிப்போரின் சிறப்பை எடுத்துப் பேசுகின்றன.

அற்புதமான செய்திகள் அவை

إِنَّ الْأَبْرَارَ يَشْرَبُونَ مِنْ كَأْسٍ كَانَ مِزَاجُهَا كَافُورًا؛ عَيْنًا يَشْرَبُ بِهَا عِبَادُ اللَّهِ يُفَجِّرُونَهَا تَفْجِيرًا؛ يُوفُونَ بِالنَّذْرِ وَيَخَافُونَ يَوْمًا كَانَ شَرُّهُ مُسْتَطِيرًا؛ وَيُطْعِمُونَ الطَّعَامَ عَلَى حُبِّهِ مِسْكِينًا وَيَتِيمًا وَأَسِيرًا؛

நல்லவர்கள் சொர்க்கத்தில் கற்பூரம் கலந்த மணம்மிக்க தண்ணீரை அருந்துவார்கள். அந்த தண்ணீர் அவர்கள் விரும்புகிற இட்த்தில் அவர்களாக உற்பத்தி செய்த அருவிகளிலிருந்து கிடைத்த தண்ணீர்ரை அருந்துவார்கள்.

விரலசைவில் வந்து விழும் அருவிகள்

இந்த வசனம் நல்லவர்கள் நாளை மறுமையில் தங்களது விரலசைவிற்கேற்ப அருவிகளை உருவாக்கி கொள்வார்கள். அவர்கள் அருவிகளை தேடிப் போக வேண்டியிருக்காது என்று கூறுகிறது.

عَيْنًا يَشْرَبُ بِهَا عِبَادُ اللَّهِ يُفَجِّرُونَهَا تَفْجِير என்ற வார்த்தைக்கு அவர்கள் பீறிடச் செய்கிற அருவிகள் என்று பொருள் என்று முஜாஹித ரஹி விளக்கம் கூறுகிறார்.

وقال مجاهد : ( يفجرونها تفجيرا ) يقودونها حيث شاؤوا ، وكذا قال عكرمة وقتادة . وقال الثوري : يصرفونها حيث شاؤوا .

இவ்வளவு பெரும் சிறப்பு அவர்களுக்கு எதனால் கிடைத்து ?

அவர்கள் ஏழைகளுக்கும் அநாதைகளுக்கும் நிர்கதியானவர்களுக்கும் உணவளிப்பார்கள் அதனால் கிடைத்து.

وَيُطْعِمُونَ الطَّعَامَ عَلَى حُبِّهِ مِسْكِينًا وَيَتِيمًا وَأَسِيرًا

தேவையுடையோரின் பசியை ஆற்றுவோருக்கு கிடைக்கும் இந்த பெருமையை எவ்வளவு மதிப்பு மிக்கது?

வசதி வாய்ப்பிருந்தும் நெருக்கடியான கால கட்ட்த்தில் மக்கள் பசியாற்றாதோர் நரகத்தின் சொந்தக் கார்ர்கள் என்று மற்றொரு வசனம் கண்டிக்கிறது.

நரகவாசிகளிடம் உங்களை இங்கு இழுத்து வந்தது எது என்று கேட்கப்படும். அப்போது அவர்கள் சொல்வார்கள். நாங்கள் ஏழைகளுக்கு உணவளித்திருக்க வில்லை.

(مَا سَلَكَكُمْ فِي سَقَرَ (42) قَالُوا لَمْ نَكُ مِنَ الْمُصَلِّينَ (43) وَلَمْ نَكُ نُطْعِمُ الْمِسْكِينَ (44

அல் பலத் அத்தியாயம் சிராத்துல் முஸ்தகீம் பாலத்தை கடக்க மூன்றாவது ஒரு வழியையும் சொல்கிறது .

ثُمَّ كَانَ مِنَ الَّذِينَ آمَنُوا وَتَوَاصَوْا بِالصَّبْرِ وَتَوَاصَوْا بِالْمَرْحَمَةِ (16)

நம்பிக்கையாளர்கள் ஒரு குழுவாக செயல்பட்டு பரஸ்பரம் பொறுமையாக இருக்க அறிவுறுத்துவார்கள். பரஸ்பரம் கருணையை வெளிப்படுத்தவும் அறிவுறுத்துவார்கள்.

இது நெருக்கடி காலங்களில் இதுவும் தேவைப்படும் மிக முக்கிய மான ஒரு சேவையாகும். நெருக்கடிகளுக்கு உள்ளாகியிருப்போர் பல சந்தர்ப்பத்திலும் பதட்டத்தில் இருப்பார்கள்.

அவர்களுக்கு நம்பிக்கை ஊட்ட வேண்டும். அவர்களிடம் பொறுமையாக இருங்கள். நாங்கள் உங்களுடன் இருக்கிறோம். கடவுள் உங்களுக்கு கிருபை செய்வான் என்று ஆறுதல் கூறவேண்டும். அதே போல அன்பையும் ஆதரவையும் வெளிப்படுத்த மக்களுக்கு அறிவுறுத்த வேண்டும்.

இத்தகைய மூன்று செயல்கள் சிராத்துல் முஸ்தகீமை கடக்க உதவும் என்று சொல்லி விட்டு திருக்குர் ஆன் இறுதியாக சொல்கிறது.

أُولَٰئِكَ أَصْحَابُ الْمَيْمَنَةِ

தப்ஸீர் தன்தாவீ கூறுகிறது.

هم أصحاب الجهة اليمنى التى فيها السعداء الذين يؤتون كتابهم بأيمانهم

அவர்கள் வலது பக்கத்துக் கார்ர்கள் என்பதன் பொருள் அவர்களுடைய பட்டோலைகள் அவர்களது வலது கையில் கொடுக்கப்படும் என்பதாகும்.

மறுமையில் முஸ்லிம்களுடைய பெரும் கவலைகளில் ஒன்று அவர்களது பட்டோலை எந்த கையில் தரப்படும் என்பது.

ஆக் அல்பலத் அத்தியாயத்தின் இந்த வசனம் சிராத்துல் முஸ்தகீமை கடக்க ஆரம்பத்தில் வழி சொல்கிறது. இறுதியில் அதையே வலது கையில் பட்டோலையை பெருவதற்கானது என்றும் கூறிவிடுகிறது.

இத்தகைய அறிவுறுத்தல்கள் தான் முஸ்லிம் உம்மத்தை எந்த சூழ்நிலையிலும் உபகாரிகளாகவும் உதவியாளர்களாகவும் ஆக்கியிருக்கிறது. வரலாறு நெடுகிலும்.

அந்த வகையில் தான் தற்போதைய சென்னை பெரு வெள்ளத்தில் ஏராளமான வீடுகளுக்குள் தண்ணீர் புகுந்துள்ளது. கடந்த வாரம் 50 வருடங்களில் இல்லாத அளவு கன மழை பொழிந்துள்ளது. பெரும் வெள்ளம் சூழ்ந்துள்ள நிலையில் சுமார் ஒரு வார காலமாக மக்கள் தங்களது இயல்பு வாழ்க்கையை இழந்துள்ளனர்.

குழந்தைகளும் வயதானவர்களும் ஒதுங்க இடமின்றி அல்லல் படுகிற சூழ்நிலையில் முஸ்லிம்கள் தங்களது பள்ளிவாசல்களை அனைத்து மக்களும் தங்கிக் கொள்ள தாராள அனுமதிகளை வழங்கியுள்ளனர். கடைகள் மூடிக்கிற நிலையில் மக்களுக்கு உணவு தயாரித்து வழங்கியுள்ளனர்.

குடிக்கிற தண்ணீருக்கு மக்கள் பெரிதும் சிரமப்படுகிற நிலையில் தண்ணீர் வழங்கியும், இன்றைய அத்தியாவசியமான செல்போன்களை சார்ஜ் செய்து கொள்ளவும் வசதிகளை ஏற்பாடு செய்துள்ளனர்.

முஸ்லிம்கள் மட்டுமல்ல மற்ற பல மத சமுக அமைப்புக்களும் இதில் மிகச் சிறப்பாக பங்காற்றிவருகின்றனர். ஏனெனில் மக்களுக்கு உதவி செய்வதை போற்றாதவர்கள் இருக்க முடியாது. எனினும் முஸ்லிம்களின் பணி இன்னும் சிறப்பாக இருந்தது.

பாதிப்புக்குள்ளான மக்களுக்கு விரைவான நிவாரணத்தையும் நிம்மதியையும் தந்தருள்வானாக!

அரசாங்கம், அமைச்சர்கள், அதிகாரிகள், அலுவலர்கள் தூய்மைப்பணியாளர்கள், மின்சாரத்துறை ஊழியர்கள், பொதுத்துறை அதிகாரிகள் மாநகராட்சி பணியாளர்கள் இவர்களோடு சேர்ந்து ஏராளாமானோ பொதுமக்களும் இந்த காரியத்திற்காக தம் உயிரை, உடல் நலனை பொருட்படுத்தாது பணியில் ஈடுபட்டுள்ளனர். வசதி வாய்ப்புள்ளோர் தாராளமாக உதவி செய்துள்ளனர். அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தகுந்த பாதுகாப்பையும் நற்கூலிகளையும் வழங்கியருள்வானாக!

நிவாரணப் பணிகளில் ஈடுபட்ட முஸ்லிம்களின் பணிகளை அல்லாஹ் கபூல் செய்தருள்வானாக! அவர்கள் அனைவரும் சிராத்துல் முஸ்தகீம் பாலத்தை அல்லாஹ் மின்னல் வெட்டும் நேரத்தில் கடக்கச் செய்வானாக! அவர்களது பட்டோலைகளை வலது கரத்தில் தந்தருள்வானாக!

இவ்வாறு துஆ செய்யும் போது ஒரு விசயத்தை நினைவு படுத்துவது நமது கடமை.

நிவாரணப்பணிகளில் ஈடுபடும் முஸ்லிம்கள் நினைவில் வைக்க வேண்டிய முக்கியமான ஒரு அறிவுரையை திருக்குர் கூறுகிறது.

அரசியல் ரீதியா ஒரு பலத்தை வளர்த்துக் கொள்வதற்காக, அல்லது சமூக அளவில் கிடைக்கும் ஒரு நற்பெயருக்காக என்று இந்த அருமையான காரியத்தை மலிவுபடுத்தி விட வேண்டாம். என்பதே அந்த அறிவுரை

அத்தஹ்ரு அத்தியாயம் கூறுகிறது.

நல்லவர்கள் கூறுவார்கள். நாங்கள் அல்லாஹ்விற்காக செய்கிறோம். நாங்கள் மிக கடுமையான முகத்தை கடுகடுப்பாக்குகிற அந்த இறுதி நாளை பயந்து செய்கிறோம். உங்களிடமிருந்து ஒரு நன்றியை கூட நாங்கள் எதிர்பார்க்க வில்லை (தப்ஸீர் தப்ரீ)

إِنَّمَا نُطْعِمُكُمْ لِوَجْهِ اللَّهِ لَا نُرِيدُ مِنْكُمْ جَزَاءً وَلَا شُكُورًا؛ إِنَّا نَخَافُ مِنْ رَبِّنَا يَوْمًا عَبُوسًا قَمْطَرِيرًا؛ فَوَقَاهُمُ اللَّهُ شَرَّ ذَلِكَ الْيَوْمِ وَلَقَّاهُمْ نَضْرَةً وَسُرُورًا؛ وَجَزَاهُمْ بِمَا صَبَرُوا جَنَّةً وَحَرِيرًا} [الإنسان:5-12

இவர்கள் விளம்பரத்திற்காக செய்கிறார்கள் என்று மக்கள் நினைத்து விடாத அளவில் நமது பணி தூய்மையாக இருக்க வேண்டும்.

அப்போது அல்லாஹ் திருப்தியடைவான்.

அபூபக்கர் சித்தீக் ரலி அவர்கள் பிலால் ரலி அவர்களை விலைக்கு வாங்கி உரிமை விட முன் வந்த போது பிலால் ரலி அவர்களின் முதலாளி " இவர் வேண்டாம் இவரை விட சிறந்த வேறு அடிமையை தருகிறேன் என்றார்.

அபூபக்கர் சித்தீக் ரலி அதை மறுத்து அவர் தான் வேண்டும் என்றார்கள். அப்போது அக்கம் பக்கத்திலிருந்தவர்கள் கிசு கிசுத்தார்கள். இவருக்கும் அவருக்கும் ஏதோ ஒரு உறவு அல்லது இரசியம் இருக்கிறது. அதனால் தான் நோஞ்சான் அடிமைய வாங்குகிறார் என்று பேசினார்கள்.

அவர்களுக்கு அல்லாஹ் பதிலளித்தான்.

الَّذِي يُؤْتِي مَالَهُ يَتَزَكَّىٰ (18) وَمَا لِأَحَدٍ عِندَهُ مِن نِّعْمَةٍ تُجْزَىٰ (19) إِلَّا ابْتِغَاءَ وَجْهِ رَبِّهِ الْأَعْلَىٰ (20) وَلَسَوْفَ يَرْضَىٰ (21

அவரை அல்லாஹ் பொருந்திக் கொள்வான் என்றான்.

இதுவே மக்கள் தொண்டாட்டுகிற முஸ்லிம்கள் ஒவ்வொருவரும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டிய அழுத்தமான செய்தி .

விதைகளுக்காகவும், ஏழைகளுக்காகவும் பாடுபடுபவர் ஜிஹாது செய்பவரை போன்றும் இடைவிடாமல் நின்று வணங்குபவரை போன்றும் நோன்பு திறக்காமல் தொடர்ந்து நோன்பு நோற்பவரைப் போன்றும் ஆவார் - ஹதீஸ்

அல்லாஹ்வுக்காக நாம் காரியங்களை ஆற்றுவோம். அல்லாஹ் கபூல் செய்வானாக!

அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 242

(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்துல் அல்பலத் - (இந்த) நகரம் - 13 )

اُولٰٓٮِٕكَ اَصْحٰبُ الْمَيْمَنَةِ

அத்தகையவர் தாம் வலப்புறத்தில் இருப்பவர்கள். (குர்ஆன் : 90:18)

وَالَّذِيْنَ كَفَرُوْا بِاٰيٰتِنَا هُمْ اَصْحٰبُ الْمَشْــَٔـمَةِ

ஆனால், எவர்கள் நம் வசனங்களை நிராகரிக்கிறார்களோ, அவர்கள் தாம் இடப்பக்கத்தையுடையோர். (குர்ஆன் : 90:19)

عَلَيْهِمْ نَارٌ مُّؤْصَدَةٌ

அவர்கள் மீது (எப்பக்கமும்) மூடப்பட்ட நெருப்பு இருக்கிறது.(குர்ஆன் : 90:20)

மேற்கண்ட நன்மையான காரியங்களைச் செய்பவர்கள், கடமையைச் செய்யும் போது எத்துணை துன்பங்கள் நேரிட்ட போதிலும், சகித்துக் கொண்டு கடமைகளைச் செய்து வருகின்றனர்.

அவர்கள் படைப்புகளிடம் அன்போடு நடந்து கொள்வதால் அல்லாஹ்வின் அருளுக்குப் பாத்திரமாகின்றனர். இதனைக் குறித்தே (படைப்புகளின் மீது) பரிவு காட்டுவோருக்கு, கிருபையுள்ள ரஹ்மானும் அருள்புரிகிறான்;

புவியிலுள்ளோர் மீது நீங்கள் கிருபை காட்டுங்கள்: வானில் உள்ளோன் (அல்லாஹ்) உங்கள் மீது கிருபை காட்டுவான்" என நபிகள் பிரான் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (அபூதாவூத், திர்மிதி)

அல்லாஹ்வின் அருளுக்குப் பாத்திரமாகும் நற்காரியங்களாவன: அனாதைகளின் மீது அன்பு பாராட்டல், சிறுவர்கள் மீது கிருபை கொள்ளல், திக்கற்றவர்கள், கைம்பெண்கள் வாயில்லா ஜீவன்கள் முதலானோரைக் கவனித்தல், சமூகத்தவர், நாட்டவர் ஆகியோருக்குக் கூடுமான அளவு நன்மை புரிதல்,

பசித்தோருக்கு உணவளித்தல், உடையில்லாதாருக்கு உடை வழங்கல். நோயுற்றாரைக் கவனித்து ஆறுதல் கூறல், வழி தவறியவருக்கு நேரான வழியைக் காண்பித்தல் போன்றவைகளேயாம். இந்நற்காரியங்களைச் செயலில் காட்டுபவர்களே வலது சாரியினராவர் (அதிர்ஷ்டசாலிகள்) அல்லாஹ்வின் "அர்ஷி"

(ஆசனத்தி)ன் வலப்பக்கத்தில் நிற்கின்றனர்.

நமது சான்றுகளை மறுத்துப் பாவங்களைச் செய்கிறவர்கள் ஆத்மீக நோயால் பீடிக்கப்பட்டவர்களாவர். அவர்களின் மீது நரக நெருப்பைப் போட்டு மூடப்படும். அல்லாஹ் நம் யாவரையும் அதை விட்டும் காத்தருள்வானாக. ஆமீன்,

இறைவன் முதலில் தன்னுடைய வலக்கையால் ஆதம் (அலை) அவர்களின் முதுகைத் தடவினான். அதன் பின் தன் இடக்கையால் அவர்களின் முதுகைத் தடவினான். தடவியதும், தன் இரு கைகளையும் மூடிக் கொண்டு ஆதம் (அலை) அவர்களை நோக்கி ''ஆதமே! இவற்றில் நீர் விரும்பியதைத் தேர்ந்தெடும்!" என்று கூறினான்.

இறைவனின் இரு கரங்களும் பாக்கியம் பெற்றவையே யாயினும் ஆதம் (அலை) அவர்கள் வெள்ளியென ஒளிர்ந்த அவனின் வலக்கரத்தைத் தேர்ந்தெடுத்தனர்.

அதனை இறைவன் விரிக்கவே அதிலிருந்தும் உலக முடிவு நாள் வரை தோன்றக்கூடிய ஆதம் (அலை) அவர்களின் வழித் தோன்றல்களின் நல்லோர் ஒளி முகத்துடன் சிற்றெறும்பினும் சிறியதாய் வெளி வந்தனர்.

அப்பொழுது ஆதம் (அலை) அவர்கள் இறைவனை நோக்கி, "இவர்கள் யார்" என்று வினவினார்.

அதற்கு இறைவன், ஆதமே, "இவர்கள் உம் வழித்தோன்றல்களில் நல்லோர், சுவனப் பேறுடையவர்கள். இவர்கள் சுவனவாசிகளின் செயல்களில் ஈடுபடுவர்” என்று பதிலுரைத்தான்.

பின்னர் இறைவன் நிலக்கரி போன்று கறுப்பாயிருந்த தன் இடக்கையைத் திறந்தான். அதிலிருந்து உலக முடிவு நாள் வரை தோன்றக் கூடிய, ஆதம் (அலை) அவர்களின் வழித் தோன்றல்களில் தீயோர் சிற்றெறும்பிலும் சிறியதாய் வெளி வந்தார்கள்.

அப்பொழுது ஆதம் (அலை) அவர்கள் இறைவனை நோக்கி, "இவர்கள் யார்? என்று வினவினர்.""இவர்கள் உம் வழி வழி தோன்றும் தீயோர், இவர்கள் நரகத்தில் உழல்பவர்கள் நரகவாசிகளின் செயல்களை மேற்கொள்பவர்கள் " என்று இறைவன் விடை பகர்ந்தான்

ஒவ்வொரு செயலையும் செய்யும் பொழுது இறைவனுக்கு பயந்து “இறைவா நான் செய்யக்கூடிய செயல்கள் நேர்வழியாக இருக்க வேண்டும் என்ற எண்ணங்களிலேயே செய்தால், அல்லாஹ் விதியை மாற்றி நேர்வழியாக தருவான் என்று தன் திருமறையிலேயே குர்ஆன் 42:13ல் கூறுகிறான்.

ஏனெனில் இதுகூட பிரார்த்தனையே ஆகும். மதியைக் கொண்டு விதியை வென்று விடலாம் என்று கூறுபவர்களும் தனது அறிவால் உயர்ந்தேன் என்று பெருமை பேசுபவர்களும் திருமறையின் வசனங்களையும், நபி அவர்களின் பொன்மொழிகளையும் ஆராய்ந்து பார்க்கவும். அவர்களுக்கு தெளிவான விடை இதில் கிடைக்கும். விதி இறைவனின் முத்திரைதான் என்ற முடிவு கிடைக்கும்.

குறிப்பு :- இத்துடன் விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்துல் அல்பலத் - (இந்த) நகரம் - நிறைவு பெற்றது.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 243**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துஷ் ஷம்ஸ் - சூரியன் 1)**

சூரத்துஷ் ஷம்ஸ் இந்த அத்தியாயத்தின் சாரம்சம்.

1) வாழ்க்கைக்கு முக்கியமாக தேவைப்படும் 6 பொருட்களை கவனித்து அவற்றை படைத்தவனுக்கு நன்றி செலுத்த வேண்டும் என்கிறது. அவைகள் 1) சூரியன் 2) சந்திரன் 3) பகல் 4) இரவு 5) வானம் 6) பூமி

2) அல்லாஹ் நன்மையும், தீமையும் ஆத்மாவிற்கு உணர்த்தி வைத்து விட்டான். ஆகையால் அவ்வாத்மாவை பரிசுத்த நிலையில் வைத்தாலே வெற்றியை அளிக்கும். இல்லையேல் எதிலும் நஷ்டமே நேரிடும்.

3) தீயோர்கள் செய்யும் துன்பங்கள் எல்லை மீறிவிடின், வல்ல நாயனின் வேதனை இறங்கி அவர்களை நிர்மூலமாக்கி விடும். இது "தமூத்"சமுதாயத்தினர் மூலம் கற்க வேண்டிய படிப்பினையாகும். அப்போது மனிதனின் பலமும், பொருளும் எவ்விதப் பயனையும் அளிக்காது.



وَالشَّمْسِ وَضُحٰٮهَا

சூரியன் மீதும், அதன் பிரகாசத்தின் மீதும் சத்தியமாக- (குர்ஆன் : 91:1)

சூரியனைப் பற்றி விஞ்ஞான ரீதியாக ....

இங்கு `ஷம்ஸ்' என்பது சூரியனை (Sun) குறிக்கும். சூரிய ஒளிக்கும் (வெயில் 'ஷமஸ் என்பர் பூமிக்கு இன்றியமையாத ஒளியையும் வெப்பத்தையும் தருகின்ற நட்சத்திரமே சூரியன் அல்லது கதிரவன் எனப்படுகிறது.

சூரியக் குடும்பத்தின் அங்கங்கள் அனைத்தாலும் சுற்றப்படும் ஒரு நட்சத்திரமதான் சூரியன், சூரியக் குடும்பத்தின் மொத்த நிறையில் 99% கொண்டது சூரியனே.

சூரியன், தன் மையப் பகுதியில் ஏற்படும் அணுக்கருப் பிணைவு வினைகள் மூலமாக நொடிக்கு 50 லட்சம் டன் பெறுமானமுள்ள பொருளை ஆற்றலாக மாற்றுகிறது. இதன் விளைவாக நியுட்ரினோக்களும் சூரியக் கதிர்வீச்சும் உருவாகின்றன.

இந்தச் சக்தியின் ஒரு சிறிய அளவு. பூமியின் காற்று மண்டலத்தை ஊடுருவி உயிர் தழைக்கத் தேவையான ஒளி மற்றும் வெப்பத்தை வழங்குகிறது.

எரியும் வாயுக் கோளமான சூரியனின் விட்டம் 13.92.000 கி.மீ. ஆகும். இதன் நிறை பூமியின் நிறையைப் போல 3,30,000 மடங்கு ஆகும் சூரியனின் மையப் பகுதி வெப்பநிலை சுமார் 15 கோடி டிகிரி செல்சியஸ் ஆகும்; மேற்பரப்பு வெப்ப நிலை 6 ஆயிரம் டிகிரி செல்சியஸ் ஆகும்.

(Celsius நூற்றின் அளவையாகப் பகுக்கப்பட்ட வெப்பமானி) நிறமாலை வரிசையில் C வகை மஞ்சள் நிற நட்சத்திரமான சூரியன், பிரதான வரிசை நட்சத்திரமாக இருந்தும் கூட மிகச் சராசரியான பண்புகளையே கொண்டதாகும்.

சூரியன் தன்னைத்தானே ஒருமுறை சுற்றிக்கொள்ள துருவப் பகுதியில் 36 நாட்களும், மத்தியப் பகுதியில் 25 நாட்களும் ஆகின்றன.

சூரியன் புவிமீது ஏற்படுத்தும் விளைவுகளில் விண்ணொளிகள், ரேடியோ தொலைத் தொடர்பு மற்றும் மின்கடத்தல் பாதைகளில் இடையூறுகள் ஆகியவை அடங்கும். அதன் செயல்பாடுகள் ஒருபுறம் இருந்தாலும் பல்லாண்டுகளாகச் சூரியன். எந்த மாற்றமுமில்லாமல் இருப்பதாகவே தெரிகிறது.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 244**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துஷ் ஷம்ஸ் - சூரியன் 2 )**

وَالشَّمْسِ وَضُحٰىهَا ۙ

சூரியன் மீதும், அதன் பிரகாசத்தின் மீதும் சத்தியமாக-(குர்ஆன் : 91:1)

وَالْقَمَرِ اِذَا تَلٰىهَا ۙ

(பின்) அதனைத் தொடர்ந்து வரும் சந்திரன் மீதும் சத்தியமாக-

(குர்ஆன் : 91:2)

சூரியன், சந்திரன் இவைகளுக்குள்ள விஞ்ஞான ரீதியான தொடர்பு:-

ஆதாவது சூரியன் மற்றும் சந்திரனின் உதயத்திற்கும் இரண்டின் மறைவுக்கும் நேரத்தில் வித்தியாசம் உண்டு.

உதாரணமாக 2019 ஜனவரி மாதத்தில், முதல் ஐந்து தேதிகளில் சந்திரன் இரவில் முறையோ 02:23, 03:13, 04:04, 04:55, 05:46 தோன்றி, பகலில் முறையே 14:31, 15:17: 18:04: 16:53: 17:42 மறைகிறது.

சூரியன் பகலில் முறையே 06:32:06:32:06:32:06:33:06:33 தோன்றி இரவில் முறையே 18:10, 18:10, 18:11: 18:11 18:12 மறைகிறது. 6 ஆம் தேதி இரண்டும் கிட்டத்தட்ட ஒரே நேரத்தில் தோன்றி ஒரே நேரத்தில் மறைகின்றன. (சூரியன்: 06:34 18:12 சந்திரன் 06:36: 18:32)

இதையடுத்து சில நாட்கள் சூரியனும் சந்திரனும் பகலில் தோன்றி இரவில் மறையும் என்றாலும், நேரம் வேறுபடும். உதாரணமாக, 7ஆம் தேதி சூரிய உதயம்: 06:34; மறைவு 18:13; சந்திரன்: 07:24: 19:24. இவ்வாறு ஒன்றை ஒன்று முந்தியும் பிந்தியுமாகவே தோன்றும்;மறையும்.

உலகின் இந்த 5 நாடுகளில் இரவிலும் சூரியன் மறையாது உங்களுக்கு தெரியுமா?

பொதுவாக நாட்டில் பகல் 12 மணி நேரம், இரவு 12 மணி நேரம் தான் இயல்பு. பகல் முடிந்ததும், சூரியன் மறைந்து சந்திரன் உதயமாகிறது. மறுபடியும் அடுத்த நாள் காலை சூரியன் உதயமாகிறது. இப்படிதான் பூமி சுழன்று கொண்டிருக்கிறது. ஆனால் சில நாடுகளில் பகல், இரவு என்பது தனித்தனியாக இல்லை என்பது உங்களை ஆச்சரியப்படுத்தும்.

நார்வே – இங்கு மே மாத இறுதியில் இருந்து ஜூலை வரை 76 நாட்களுக்கு சூரியன் மறைவதில்லை. அதனால்தான் ஆர்க்டிக் வட்டத்தில் அமைந்துள்ள நார்வே நள்ளிரவு சூரியனின் நாடு என்று அழைக்கப்படுகிறது. நார்வேயின் ஸ்வால்பார்டில், ஏப்ரல் 10 முதல் ஆகஸ்ட் 23 வரை சூரியன் இரவும் பகலும் பிரகாசிக்கிறது.

நுனாவுட், கனடா - ஆர்க்டிக் வட்டத்திற்கு மேலே சுமார் இரண்டு டிகிரி, நுனாவுட் கனடாவின் வடமேற்கு பிரதேசங்களில் அமைந்துள்ளது. இங்கு கிட்டத்தட்ட இரண்டு மாதங்களுக்கு 24 மணி நேரமும் சூரிய ஒளி இருக்கிறது. மறுபுறம், குளிர்காலத்தில், இந்த இடம் தொடர்ந்து 30 நாட்களுக்கு முற்றிலும் இருட்டாக இருக்கும்.

ஐஸ்லாந்து - கோடையில் ஐஸ்லாந்து இருட்டாக இருக்கும், ஜூன் மாதத்தில் சூரியன் மறையாததால் வெளிச்சமாகவே இருக்கும்.

பாரோ, அலாஸ்கா - மே மாத இறுதியில் இருந்து ஜூலை இறுதி வரை சூரியன் இங்கு மறைவதில்லை. நவம்பர் தொடக்கத்தில் இருந்து அடுத்த 30 நாட்களுக்கு இங்கு மீண்டும் சூரியன் உதிக்காது. இது போலார் நைட் என்று அழைக்கப்படுகிறது. குளிர்காலம் முழுவதும் நாடு முழுவதும் இருளில் மூழ்கிவிடும்.

ஸ்வீடன் - ஸ்வீடனில் மே மாத தொடக்கத்தில் இருந்து ஆகஸ்ட் இறுதி வரை சூரியன் நள்ளிரவில் மறைந்து அதிகாலை 4 மணியளவில் உதயமாகும். இங்கு தொடர்ந்து 6 மாதங்கள் சூரியன் மறைவதில்லை. பகல் மட்டுமே இருக்கும்.

சூரியன், சந்திரன் இவைகளுக்குள்ள மெஞ்ஞான ரீதியான தொடர்பு:-

சூரியன். அதன் ஒளி பூரணமாக உலகுக்கு அளிக்கப்படுகிற நேரத்திற்கு லுஹா என்று பெயர். அதாவது பகலை 5 பங்காக பிரித்தால் இரண்டாவது பங்கில் உள்ள நேரத்தில் லுஹா என்று பெயர்.

இந்த லுஹாநேரத்தில் உலகுக்கு சூரிய ஒளி பூரணமாகக் கிடைக்கும். அதிக உஷ்ணமும் இராது. எவ்விதச் சிரமமுமில்லாமல் தங்கள் தங்கள் அலுவல்களைக் கவனிப்பர். எனவே, மனிதர்களுக்கு இது மிகப் பிரியமான நேரமாகும்.

சூரியன் தன் கதிர்களை உலகுக்குப் பூரணமாக அளித்து, இவ்வுலகை உயிருள்ளது போலாக்கி இருப்பது போல, ஆன்மாவாகிய சூரியன், ஸ்தூலமாகிய உலகுக்குத் தனது பிரகாசத்தை அளித்து ஸ்தூலத்தை ஜீவிக்கச் செய்து கொண்டிருப்பது இதில் சமிக்ஞை செய்யப்பட்டிருக்கிறது.

தவிர, சூரிய அஸ்தமனத்துக்குப் பிறகு அதனைத் தொடர்ந்து சந்திரன் உதயமாகி, பூமிக்குத் தனது தண்(மிதமான குளிர்) கதிர்களை அளிக்கிறது. சந்திரன் தனது ஒளியை சூரியனிலிருந்து எடுத்துக் கொண்டு, சூரியன் அஸ்தமித்தவுடன் உலகுக்கு வெளிச்சத்தைக் கொடுப்பதானது, ஒரு அரசன் மரணித்தவுடன் அவனுக்குப் பதிலாக அவனது இளவரசன் அந்த ஸ்தானத்துக்கு வருவதை ஒத்திருக்கிறது. ரிலே தொடர் ஓட்டப் பந்தயத்தில் குச்சியை வாங்கிக் ஓடுவதை ஒத்திருக்கிறது.

நிற்க, சூரியன் என்பது பரிபூரணமான - மிகப் பரிபூரணமான தெய்வீக அகமியத்துக்கு ( ஹக்கீக்கத்துல் இலாஹிய்யத்துல் கமாலிய்யத்துல் அக்மலிப்பாவுக்கு) அத்தாட்சியாகவும், அதனை சமிக்ஞை செய்வதாகவும் இருக்கிறது.

சந்திரன் என்பது பரிபூரணமான - மிகப் பரிபூரணமான மனிதத்துவத்தின் அகமிய்யத்துக்கு (ஹக்கீக்கத்துல் இன்ஸானிய்யத்துல் கமாலிய்யத்துல் அக்மலிய்யாவுக்கு) அடையாளமாகவும் சமிக்ஞையாகவும் இருக்கிறது.

சந்திரனை இறைவன் சிருஷ்டித்த காலம் முதல் கியாமத்து நாள் வரை சூரியனது பிரகாசத்தை வாங்கி உலகுக்கு அளிப்பதன் மூலம் சந்திரன் சூரியப்பிரகாசம் வெளியாகுமிடமாக (மல்ஹராக)வும், இரவில் செல்வோருக்கு அவர்களது பாதையை அறிவித்துக் கொடுப்பதற்காக அது இரவிலேயே தோன்றுவதாகவும் இருக்கிறது.

இதுபோல, ஹக்கீக்கத்துல் இன்ஸானிய்யத்துல் கமாலிய்யத்துல் அக்மலிய்யாவை இறைவன் சிருஷ்டித்த கால முதல் ஊழுழி காலத்துக்கு ஹக்கீக்கத்துல் இலாஹிய்யத்துல் கமாலிய்யத்துல் அக்மலிய்யாவின் பிரகாசம் தஜல்லியாவதற்கு (சோபிப்பதற்கு) மல்ஹராக இருந்து வருகிறது. ஹக்கீக்கத்துல் இன்ஸானிய்யா இவ்வகிலத்தில் வெளியாவதானது, அதனைக் கொண்டு இவ்வகிலத்தார் பரமார்த்திகத் துறையில் மெஞ்ஞான வழி நடப்போருக்கு வழி காட்டியாக இருப்பதற்காகவே யாகும்.

தவிர, சந்திரன் சூரியனது பிரகாசத்தால் முற்றிலும் மறைந்து விடுவது போல (பகலில் சந்திரன் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து விடுவது போல) ஹக்கீகத்துல் இன்ஸானிய்யத்துல் கமாலிய்யத்துல் அக்மலிய்யாவானாது ஹக்கீக்கத்துல் இலாஹிய்யத்துல் கமாலிய்யத்துல் அக்மலிய்யாவில் பரிபூரணமாக அழிந்து இல்லாமலாகி முற்றிலும் ஒழிந்து விடுகிறது.

உதய சந்திரன் நாளுக்கு நாள் வளர்ந்து பரிபூரண சந்திரனாகிப் பின்னர் நாளடைவில் தேய்ந்து இறுதியில் அடியுடன் இல்லாதொழிந்து போவது போல, இன்ஸானே காமிலிலானவர் தம்முடைய பரிபூரண நிலையை கொஞ்சங் கொஞ்சமாக நாளடைவில் அடைந்து அப்புறம் கொஞ்சங் கொஞ்சமாக தன்னை நிக்கிரஹம் செய்து இறுதியில் பரிபூரணமாக அவனில் அழிந்து போகிறார் என்பதாக அகப்பொருள் கூறப்படுகிறது. இதனைக் குறித்த விரிவான பொருளை காண்க. அல்லாயிஹாத்துல் பர்க்கிய்யாத்து என்னும் கிரந்தத்தில் காண்க.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 245**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துஷ் ஷம்ஸ் - சூரியன் 3 )**

وَالۡقَمَرِ اِذَا تَلٰٮهَا ۙ

(பின்) அதனைத் தொடர்ந்து வரும் சந்திரன் மீதும் சத்தியமாக-

(அல்குர்ஆன் : 91:2)

சந்திரன் மீது இறைவன் சத்தியம் செய்தது ஏன் ? விஞ்சான ரீதியில்...

பூமிக்கும் அதன் குடிமக்களுக்கும் நன்மை செய்யும் பல முக்கிய பாத்திரங்களை சந்திரன் வகிக்கிறது. சந்திரனின் சில முக்கிய பயன்கள் மற்றும் நன்மைகள் பூமிக்கு பின்வருவனவற்றை உள்ளடக்குகின்றன:

சந்திரன் எப்படி தோன்றியது?

நம்மில் அனைவருக்கும் பொதுவாக இருக்கும் ஒரு சந்தேகம் இது. இதற்கான தெளிவான பதில் என்பது கிடையாது. நிலாவின் தோற்றம் தொடர்பாக பல்வேறு கோட்பாடுகள் நிலவுகின்றன. ஆனால் அனைத்துமே ஒரே கருத்தையே கூறுகின்றன.

சூரிய குடும்பம் உருவான நேரத்தில், சுமார் 4.5 பில்லியன் ஆண்டுகளுக்கு முன்பு, செவ்வாய் கிரகம் அளவில் உள்ள ஒரு பொருள் அல்லது பல பொருட்கள் பூமியின் மீது மோதியதாகவும் அதில் தோன்றிய குப்பைகள் எல்லாம் விண்வெளிக்கு சென்று நிலவாக மாறியது என்பது பரவலாக அனைவராலும் ஏற்றுகொள்ளப்பட்ட கோட்பாடு.

நிலா இல்லையென்றால் பூமிக்கு என்ன ஆகும்?

சந்திரனே இல்லாமல் சூரிய சந்திர கிரகணங்கள் ஏற்படாமல் போய்விடும்.

சந்திரன் சிறுகோள்கள் மற்றும் விண்கற்களில் இருந்து நம்மைக் காப்பாற்ற உதவுகிறது. ஏனெனில் அதன் ஈர்ப்பு விசை பூமியை நோக்கிச் செல்லும் பொருட்களை ஈர்க்கும் அல்லது திசை திருப்பவும் முடியும். இவ்வாறு பூமி சந்திரனால் பாதுகாக்கப்படுகிறது.

நிலாவின் புவியீர்ப்பு விசைதான் பூமியை அதன் அச்சில் வைத்திருக்க பெரிதும் உதவுகிறது. ஒருவேளை நிலா இல்லையென்றால், அது பூமியின் கடல் அலைகள் உயரத்தில் மாறுபாட்டை ஏற்படுத்தும். ஓதங்களில் (Tides) மாறுபாடு ஏற்படும். ஏன், ஒரு நாளின் காலத்தின் நீளம் கூட மாறலாம் .

பூமியில் சந்திரனின் மிகவும் நன்கு அறியப்பட்ட தாக்கம் கடல்களில் அலைகளை உருவாக்குவதில் அதன் பங்கு ஆகும். சந்திரனின் ஈர்ப்பு விசையால் கடல்களில் உள்ள நீர் பெருக்கெடுத்து, அதிக அலைகளை உருவாக்குகிறது.

கடலோர சுற்றுச்சூழல் அமைப்புகளை ஒழுங்குபடுத்துவதற்கும், கடல் வாழ்க்கை சுழற்சிகளில் செல்வாக்கு செலுத்துவதற்கும், பாதிப்பை ஏற்படுத்துவதற்கும் இந்த அலை நடவடிக்கை முக்கியமானது.

பூமியின் சுழற்சியின் அச்சு செங்குத்தாக இருந்து 23.5 டிகிரி கோணத்தில் சாய்ந்து, சூரியனைச் சுற்றியுள்ள நமது கிரகத்தின் சுற்றுப்பாதையின் விமானத்திற்கு செங்குத்தாக உள்ளது. பூமியின் அச்சின் இந்த சாய்வு மிகவும் முக்கியமானது. அது சூரியனின் ஆற்றலின் வெப்பமயமாதல் வலிமையை நிர்வகிக்கிறது.

சந்திரனின் ஈர்ப்பு விசை பூமியை நிலைநிறுத்த உதவுகிறது என்பதை நாம் அறிவோம். சந்திரன் இல்லாவிட்டால், பூமி அச்சின் சாய்வில் ஏற்ற இறக்கம் மிகவும் பெரியதாக இருக்கும். நிலவு இல்லாவிட்டால், பூமியின் சாய்வு 45° வரை அதிகரிக்கும் என நிபுணர்கள் மதிப்பிட்டுள்ளனர்.

சந்திரனின் ஈர்ப்பு விசை காரணமாக பூமியின் அச்சின் சாய்வு வெகுவாக கட்டுப்படுத்தப் படுகிறது. அதாவது, குறைந்த பட்சம் 22.1° முதல் அதிக பட்சம் 24.5° க்குள் நிலையாக உள்ளது.

சந்திரன் இல்லாமல் பூமி யுரேனஸ் கிரகம் போல அதன் பக்கத்தில் சுழன்று கொண்டிருக்கலாம். இது பூமியில் வாழ்வில் அளவில்லா தாக்கத்தை ஏற்படுத்தும்.

சந்திரனின் ஈர்ப்பு ஏற்படுத்தும் தடை இயக்கம் இல்லாமல், பூமி வேகமாகச் சுழல்வதன் விளைவாக குறுகிய நாட்கள், 6 மணிநேரம் வரை கூட இருக்கும். மற்றும் ஒவ்வொரு நாளும் ஒரு சில மணிநேர பகல் மற்றும் இருளுடன், மிகவும் வித்தியாசமான பரிணாம பாதையைப் பின்பற்றியிருக்கலாம். பூமியின் வளிமண்டலம் மிகவும் கொந்தளிப்பான நிலைக்கு செல்லும்.

சந்திரனின் ஈர்ப்பு விசை கடல் அலைகளை கட்டுப்படுத்துகிறது. சந்திரன் இல்லாமல் கடல் அலைகள் உயரமாக எழும்பாது. மிக சிறிய அலைகள் மட்டுமே எழும்பும்.

பூமியின் ஈர்ப்பும் சந்திரனை இழுத்துச் செல்கிறது. இது ஒரு மாதத்திற்கு ஒரு முறை மட்டுமே சுழலும்படி கட்டாயப்படுத்துகிறது. இதனால் அது பூமிக்கு ஒரு முகத்தை மட்டுமே காட்டுகிறது. இது பூமியின் சுழற்சியை படிப்படியாக ஒரு நாள் என நாம் அறியும் 24 மணிநேர காலத்திற்கு குறைக்கிறது.

சந்திரன் பூமியின் சாய்வை நிலைப்படுத்தாமல், பூமியின் சாய்வு பெருமளவில் மாறுபட்டால் அது சாய்வு இல்லாத நிலையிலிருந்து ஒரு பெரிய சாய்வுக்கு நகர நேரும். அதனால் பூமியில் பருவங்கள் ஏற்படாமல் இருக்கலாம் அல்லது தீவிர வானிலை மற்றும் பனி யுகங்கள் கூட ஏற்படலாம்.

பூமியில் இருந்து எவ்வளவு தூரத்தில் நிலா இருக்கிறது?

தற்போதைய கணக்குபடி, பூமியில் இருந்து 3,84,400 கிலோ மீட்டர் தொலைவில் நிலா இருக்கிறது. ஆனால், 3.2 பில்லியன் ஆண்டுகளுக்கு முன்பு பூமியில் இருந்து 2,70,000 கிலோ மீட்டர் தொலைவில் நிலா இருந்ததாக சமீபத்திய ஆய்வு ஒன்று பரிந்துரைத்தது.

அதாவது, தற்போது உள்ள தூரத்தோடு ஒப்பிடும்போது, 100க்கு 70% தூரத்தில் நிலா இருந்ததாக அந்த ஆய்வு கூறுகிறது. அப்போது பூமி வேகமாக சுழன்றதால் ஒரு நாளுக்கான காலம் குறைவாக இருந்தது.

நிலாவில் என்ன இருக்கிறது?

பள்ளங்கள், மலைகள், பள்ளத்தாக்குகள் மற்றும் மரியா எனப்படும் பெரிய, தட்டையான கடல் போன்ற அதேவேளையில் நீரற்ற பகுதிகள் நிலாவில் உள்ளன.பாறைகள் மற்றும் தாதுக்களால் ஆனது முக்கியமாக சிலிகேட்டுகளால் ஆனது. வளி (காற்று)மண்டலம் கிடையாது.

அதன் மேற்பரப்பு அம்சங்களில் எரிகல் பொழிவு தாக்கி பள்ளங்கள், மலைகள், பள்ளத்தாக்குகள் மற்றும் மரியா எனப்படும் பெரிய, தட்டையான கடல் போன்ற அதேவேளையில் நீரற்ற பகுதிகள் உள்ளன

இதேபோல் பன்னெடுங்காலம் முன்னர் தோன்றிய எரிமலையின் வாயில்களும் நிலாவில் உள்ளன.

நிலா பிரகாசமாக மின்னுவது எப்படி?

பௌர்ணமி நாட்களில் நிலா பிரகாசமாக மின்னுவதை நாம் பார்த்து வியந்திருப்போம். ஆனால், அது நிலவொளி அல்ல சூரிய ஒளி என்று சொன்னால் உங்களால் நம்ப முடியுமா?

ஆனால், அதுதான் உண்மை. தனக்கான ஒளியை நிலாவால் உருவாக்க முடியாது. தன் மீது விழும் சூரிய ஒளியையே நிலா பிரதிபலிக்கிறது.

நிலா என்ன நிறத்தில் இருக்கும்?

நாம் பூமியில் இருந்து பார்க்கும்போது நிலா பிரகாசமாக தோன்றும். அதை பார்த்து நிலா வெள்ளை நிறத்தில் இருப்பதாக நம்மில் பலர் நினைத்திருப்போம்.

ஆனால், நிலா உண்மையில் வெள்ளை நிறத்தில் இருப்பதில்லை. சூரியனின் வெளிச்சத்தை பிரதிபலிப்பதாலேயே நிலா பிரகாசமாக இருக்கிறது என்று நாம் ஏற்கனவே பார்த்தோம். நிலாவின் அருகில் சென்று பார்க்கும்போது அது அடர் சாம்பல் நிறத்தில் உள்ளது.

நிலாவில் மனிதர்களின் எடை குறைவது ஏன்?

பூமியில் உள்ள ஒரு பொருள், நிலவில் அதே எடையில் இருப்பதில்லை

எடுத்துக்காட்டாக, ஒரு நபரின் எடை 80 கிலோ என்று வைத்துக் கொள்வோம். நிலவில் அவரது எடை 13.3 கிலோவாகதான இருக்கும்.

இதற்கு காரணம் நிலவின் ஈர்ப்பு விசை. பூமியின் ஈர்ப்பு விசையுடன் ஒப்பிடும்போது நிலவின் ஈர்ப்பு விசை 6 ல் ஒரு பங்கு மட்டுமே இருக்கும். இதனால்தான் நிலவில் எடை குறைவு ஏற்படுகிறது . அதே நேரத்தில் உங்கள் நிறை (Mass) பூமியில் எப்படி உள்ளதோ அப்படியே தான் இருக்கும்

மதி இல்லையேல், பூமியின் கதி அதோகதிதான்

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 246**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துஷ் ஷம்ஸ் - சூரியன் 4 )**

وَالنَّهَارِ اِذَا جَلّٰىهَا ۙ

(சூரியனால்) பகல் வெளியாகும்போது, அதன் மீதும் சத்தியமாக-

(குர்ஆன் : 91:3)

பகலின் மீது இறைவன் செய்யும் சத்தியத்திற்குரிய காரணங்கள் :-

பொது வழக்கில் சூரிய ஒளி பூமியின் ஒரு குறிப்பிட்ட பகுதியில் இருக்கும் காலப்பகுதி அவ்விடத்தில் பகல் (daylight) எனலாம். கிழக்குத் திசையில் சூரியன் உதிக்கின்ற நேரம் முதல் மேற்கில் மறையும் நேரம் வரையான காலப்பகுதியே இது.

ஒரு பகலும், ஓர் இரவும் சேர்ந்தது ஒரு நாள். பகல் நேரம் எப்பொழுதும் ஒரே அளவாக இருப்பதில்லை. ஓர் ஆண்டின் வெவ்வேறு காலங்களில் பகல் நேரத்தின் அளவு வெவ்வேறாக இருக்கின்றது. அத்துடன் புவி மையக் கோட்டுக்குத் தொலைவிலுள்ள இடங்களில் இவ்வேறுபாடு அதிகமாக இருக்கும்.

பூமி தன்னுடைய அச்சில் தன்னைத் தானே சுற்றுவதனாலேயே பகலும் இரவும் உருவாகின்றன. பூமியின் ஒரு குறிப்பிட்ட நிலையில் அரைப் பகுதி சூரியனை நோக்கியிருக்க, மற்றப்பகுதி சூரியனுக்கு எதிர்ப்

பக்கத்தில் இருக்கும். சூரியனை நோக்கியிருக்கும் பகுதியில் சூரிய ஒளி விழுவதனால் அப்பகுதி பகலாக இருக்கும்.

சந்திரனின் இரவு பகல் என்பது ரொம்பவும் வியப்புக்குரிய விஷயம்

நிலவு தன்னைத்தானே சுற்றி புவியையும் சுற்றுவதால், அதன் ஒரு பாதியில் சூரியனின் ஒளி பதினான்கு நாட்களும், அப்போது அதன் மறுபாதி அவ்வமயம் இரவாகவும் இருக்கும்.

நிலவின் மறுபாதி மீது பகலவன் படுக்கையில் அது பதினான்கு நாட்கள் பகலாகவும், அப்போது முதல் பாதி பதினான்கு நாட்கள் இரவாகவும் இருக்கும் விந்தை நிகழும்!

பூமியில் ஓர் இரவும் பகலும் சேர்ந்தால், ஒரு நாள். இந்த அடிப்படையில் சந்திரனின் ஓர் இரவும் ஒரு பகலும் சேர்ந்தால் ஒரு நாள். அதே சமயம் அந்த ஒரு நாள் = ஒரு வருடம்.

இரண்டும் சமம்

பிரபஞ்சத்தில் சூரியன்தான் எல்லாவற்றையும் இயக்குகிறது. பூமிப் பந்து ஒரு பக்கமாக, அதாவது 23.45° டிகிரி சாய்ந்த அச்சில் சூரியனைச் சுற்றிக் கொண்டிருக்கிறது. அதனால் பூமியின் ஒரு பகுதியில் அதிகச் சூரிய ஒளி படும், மறுபுறம் குறைவாகப் படும். சூரிய ஒளி படுவதைப் பொறுத்துப் பகலும் இரவும் நீண்டும், குறுகியும் அமைகின்றன.

இருந்தாலும் வருடத்துக்கு இரண்டு முறை மட்டும் இரவும் பகலும் கிட்டத்தட்ட சமமான அளவுக்கு இருக்கும். அதில் ஒரு நாள் செப்டம்பர் 22/23. மற்றொன்று மார்ச் 20. ஆண்டுதோறும் நடக்கும் முக்கிய வானியல் நிகழ்வுகளில் இவையும் ஒன்று. இந்த நாட்கள் சம இரவுபகல் நாள் (Equinox) எனப்படுகின்றன.

இந்த இரண்டு நாட்களில் மட்டுமே உலகிலுள்ள அனைத்து நாடுகளிலும் இரவும் பகலும் ஒரே அளவுக்கு இருக்கும். செப்டம்பர் 22/23க்குப் பிறகு இந்தியாவில் பகல் நேரம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்துகொண்டே வரும்.

குறுகிய பகல்

பூமிப் பந்து சூரியனுக்கு எதிர்பக்கமாக அதிகமாகத் திரும்பியுள்ள நிலை ஆங்கிலத்தில் குளிர்காலத் திருப்புநிலை (Winter solstice) எனப்படுகிறது. அந்த நாள் டிசம்பர் 21/22. அன்றைக்குப் பூமிப் பந்தின் தெற்கு மூலையில் சூரியன் இருக்கும், அதனால் சூரிய ஒளி நீண்ட நேரம் தெரியாததால் ஆண்டிலேயே குறுகிய பகலாக இருக்கும்.

அதற்குப் பிறகு பகல் நேரம் கொஞ்சம் கொஞ்சமாக அதிகரிக்கத் தொடங்கும். பிறகு மீண்டும் மார்ச் 20-ம் தேதி பகலும் இரவும் சமமாக இருக்கும்.

நீண்ட பகல்

பூமி சூரியனின் பக்கமாக அதிகமாகத் திரும்பியுள்ள நிலை ஆங்கிலத்தில் கோடை திருப்புநிலை (summer solstice) எனப்படுகிறது. அது ஜூன் 20/21-ம் தேதி வருகிறது. அன்றைக்குப் பூமிப் பந்தின் வடக்கு மூலையில் சூரியன் இருப்பதால், நீண்ட நேரம் சூரிய ஒளி தெரியும் அன்றைய தினத்தின் பகல் ஆண்டிலேயே நீண்டதாக இருக்கும்.

இப்போது தினசரி கவனித்துக் கொண்டே வந்தால், செப்டம்பர் 22/23க்குப் பிறகு பகல் குறுகிக்கொண்டே போவதைக் கவனிக்கலாம். அதுபோல அடுத்தடுத்து வரும் வானியல் நிகழ்வுகளையும் குறிச்சு வச்சுப் பாருங்க. ஒவ்வொண்ணையும் வருஷத்துக்கு ஒரு தடவைதான் பார்க்க முடியும்.

சீன, ஆஸ்திரேலியக் கொண்டாட்டம்

ஆங்கிலத்தில் equinox என்ற சொல், equinoxium என்ற லத்தீன் சொல்லில் இருந்து உருவானது. இதற்கு பகலும் இரவும் சமம் என்று அர்த்தம்.

கிரேக்க நம்பிக்கைபடி, முந்தைய மாதங்களின் வெற்றி, தோல்விகளை திரும்பிப் பார்ப்பதற்கான நாள்தான் சம இரவுபகல் நாள்.

ஆஸ்திரேலியாவில் உள்ள பழங்குடிகளுக்கு செப்டம்பர் மாத சம இரவுபகல் நாள் மிகவும் முக்கியமானது. ஏனென்றால், அதற்குப் பிறகுதான் ஆஸ்திரேலியாவில் வசந்த காலம் தொடங்கும்.

சீனாவில் இலையுதிர் காலத்துக்கு இடையில் வரும் சம இரவு பகல் நாள் நிலா விழாவாகக் கொண்டாடப்படுகிறது. அப்போது, கோடை கால அறுவடையைக் கொண்டாடும் வகையில் தாமரை, எள், முட்டை, உலர் பழங்கள் சேர்க்கப்பட்ட மூன் கேக் செய்வது வழக்கம்.

ஒரு ஆண்டின் மிக நீண்ட மற்றும் மிக குறைந்த பகல் பொழுதைக் கொண்ட நாள் நீண்ட பகல்- இரவு நாள் (Solstices) எனப்படும்.

வட துருவத்தில் ஒரு ஆண்டில் ஒரு நாளில் குறைந்த பகல் பொழுது காணப்படுகிறது. இது குளிர் கால நீண்ட இரவு நாள் எனப்படும் (Winter solstice).

தென் துருவத்தில் ஒரு ஆண்டில் ஒரு நாளில் நீண்ட பகல் பொழுது காணப்படுகிறது. இது கோடைக் கால நீண்ட பகல் நாள் எனப்படும் (Summer Solstice).

ஜூன் 21 ஆம் தேதி இந்த நிலைகள் தலைகீழாக மாறுகின்றன. அதாவது அந்த நாள் வட துருவத்தில் கோடைக் கால நீண்ட பகல் நாளாகவும் தென் துருவத்தில் குளிர் கால நீண்ட இரவு நாளாகவும் இருக்கும்.

இது பூமியின் சாய்வு மற்றும் சூரியனைச் சுற்றி அதன் நீள்வட்டப்பாதை ஆகியவற்றின் மூலம் ஏற்படுகிறது.

படம்: புவியின் ஆசியப் பகுதியில் பகலும் மற்றொரு பகுதியில் இரவும் உள்ளதை விளக்கும் காட்சி

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 247**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துஷ் ஷம்ஸ் - சூரியன் 5 )**

وَالَّيْلِ اِذَا يَغْشٰىهَا ۙ

(அப்பகலை) மூடிக்கொள்ளும் இரவின் மீதும் சத்தியமாக- (குர்ஆன் : 91:4)

இரவு என்பது உண்மையில் பூமியில் நிழல்தான். சூரியனை அது உண்மையில் மூடுவதில்லை. ஆனால் சூரியனது ஒளி மனித கண்ணுக்குத் தெரியாமல் முற்றிலும் மறைந்து விடுகிறது.

எனினும் பார்வைக்கு இருள் சூரிய ஒளியை மூடுவது போல தோன்றுவதால், நேரடியாக யாருக்கும் தெரிந்த ஒரு விஷயத்தை இறைவன் கூறி சத்தியம் செய்துள்ளான். இறைவனது வல்லமையை அறிவிப்பதற்கு இதுவும் ஒரு அத்தாட்சியாக இருப்பதால் இறைவன் இதனை சுட்டிக்காட்டி உள்ளான்

இரவு நேரம் வரும்போது என் மகத்தான படைப்பாகிய என் அடியார்கள் இருளால் மூடப்பட்டு விட்டார்கள். அப்போது இரவு இருட்டு என்று அஞ்சப்படுகிறது. ஆனால் அந்த இரவை படைத்தவனே அஞ்சப்படுவதற்கு மிகவும் பொருத்தமானவன் என்று கூறுகின்றான்.

( தஃப்சீர் இப்னு அபீஹாத்திம் )

புவியின் குறிப்பிட்ட ஓர் இடத்தில் சூரிய ஒளி இல்லாதிருக்கும் காலப்பகுதி இரவு அல்லது இருட்சூழ்வு

இருள் சூழ்ந்திருக்கும் நேரமே இரவு. இது சூரியன் மறைவுக்கும், அடுத்த சூரியோதயத்துக்கும் இடைப்பட்ட காலமாகும். ஓர் இரவும் ஒரு பகலும் கொண்டது ஒரு நாள்

பூமி தனது அச்சில் சுழலும்போது ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒரு பாதி சூரியனுக்கு எதிர்ப்பக்கத்தில் இருப்பதனால், அப்பக்கத்துக்கு சூரிய ஒளி கிடைப்பதில்லை. இதன் காரணமாக அப்பகுதி இருட்டாக இருக்கும். அத்தகைய பகுதிகளில் அந்த நேரம் இரவாக இருக்கும் என்கிறது விஞ்ஞானம்.

ஆனால் ஆன்மிகம் இரவைப் பற்றி...

وَهُوَ الَّذِىْ جَعَلَ لَـكُمُ الَّيْلَ لِبَاسًا وَّالنَّوْمَ سُبَاتًا وَّجَعَلَ النَّهَارَ نُشُوْرًا

அவன்தான் உங்களுக்கு இரவை ஆடையாகவும், நித்திரையை இளைப்பாறுதலாகவும் ஆக்கியிருக்கின்றான்; இன்னும், அவனே பகலை உழைப்பிற்கு ஏற்றவாறு ஆக்கியிருக்கிறான்.(குர்ஆன் : 25:47)

ஆடை மனிதரது அங்கங்களை மறைப்பது போல் உடலை மறைப்பதால், மறைத்தல் என்ற தன்மை இருளுக்கும் இருக்கிறது என்பதைக் கவனித்து இருளுக்கு ' ஆடை' எனக் கூறப்பட்டிருக்கிறது.

மேலே ஏறுகிற நீராவியின் ஈரத்தால் மூளையின் நரம்புகள் தளர்ச்சியடைவதுதான் தூக்கம். வேலையில்லாமல் ஒய்ந்திருப்பதற்கு 'ஸப்து' என்று பெயர். ஆகவே, தூங்கும் பொழுது மனிதன் வேலையற்று ஓய்ந்திருப்பதால் "தூக்கத்தை சுகம்" என்று கூறப்பட்டது.

அடுத்து , சூரிய மண்டலத்தில் நமக்கு இரு வகை இயக்கங்கள் உள்ளன. பூமியில் இருந்து கொண்டு பூமியோடு சூரியனைச் சுற்றுகிறோம் : அதே நேரத்தில் பூமியின் அச்சை மையமாகக் கொண்டு பூமி தன்னைத்தானே சுழல்வதால் அந்த சுழற்சியிலும் சுழல்கிறோம் .

இவ்விரு இயக்கங்களும் சேர்வதன் விளைவாக நாம் வெளிச்சமான பகல் பகுதியை விட இருளான இரவுப் பகுதியில் வேகமாக செல்கிறோம் . எவ்வளவு வேகம் ?

பூமியின் மத்திய ரேகை உள்ள எந்த இடமும் விநாடிக்கு அரை கி.மீ நகர்கிறோம் . நடுப்பகல் வேகத்திற்கும் நடு இரவு வேகத்திற்கும் உள்ள வித்தியாசம் விநாடிக்கு ஒரு முழு கிலோ மீட்டர் கிடைக்கிறது .

அதனால்தான் நபி (ஸல்) அவர்கள் "பகலை விட இரவுப் பயணத்தில் பூமி சுருக்கி கொடுக்கப்பட்டுள்ளது" ( பார்க்க படம் ) இதனால்தான் இரவில் குறைவாக செய்யப்படும் வணக்க வழிபாடுகள் அதிகமான பலனைத் தருகிறது.

பனூ இஸ்ராயீலைச் சார்ந்த ஒரு மனிதர் இரவு முழுவதும் நின்று வணங்குவார். காலை உதயமானதும் மாலை வரை எதிரியைச் சந்திக்க போர்க்களம் சென்று போராடுவார். இவ்வாறு அவர் ஆயிரம் மாதங்கள் ஈடுபட்டார்' என முஜாஹித் (ரஹ்) கூறுகிறார்.

ஒரு தடவை நபி (ஸல்) அவர்கள் கூறும் போது, 'பனூ இஸ்ரவேலர்களைச் சார்ந்த நபிமார்களான அய்யூப் (அலை), ஸகரிய்யா (அலை), ஹிஸ்கீல் (அலை), யூஷஃபின்நூன் (அலை) ஆகிய நால்வரும், 80 வருடங்கள் கண்ணிமைக்கும் நேரம் கூட இறைவனுக்கு மாறு செய்யாத வண்ணம் இறைவணக்கம் புரிந்து வந்தார்கள்' என்று தெரிவித்தார்கள்.

இதைக் கேள்விப்பட்ட நபித்தோழர்கள் ஆச்சரியத்தில் உறைந்து போனார்கள்.

உடனே வானவர் ஜிப்ரீல் (அலை) நபிகளாரிடம் இறங்கிவந்து 'உங்களது சமுதாயம் இந்த நால்வரைக் கண்டு ஆச்சரியப்படுகிறார்கள் எனவே இதைவிட சிறந்த ஒரு பாக்கியத்தை இறைவன் இறக்கி அருள்பாலித்திருக்கிறான்' என்று கூறி,

பின்வரும் லைலத்துல் கத்ர் என்கிற மகத்தான ஓர் இரவு சம்பந்தமான அத்தியாயத்தை கூறினார்கள். அறிவிப்பாளர்: அலி பின் உர்வா (ரஹ்)

“நிச்சயமாக நாம் அதை (திருக்குர்ஆனை) கண்ணியமிக்க (லைலத்துல்கத்ர்) இரவில் இறக்கினோம்.

மேலும் கண்ணியமிக்க இரவு என்ன என்பதை உமக்கு அறிவித்தது எது? கண்ணியமிக்க (அந்த) இரவு ஆயிரம் மாதங்களை விட மிக மேலானதாகும்.

அதில் வானவர்களும், ஆன்மா எனும் (ஜிப்ரீலும்) தம் இறைவனின் கட்டளையின்படி (நடைபெற வேண்டிய) சகல காரியங்களுடன் இறங்குகின்றனர். சாந்தி (நிலவியிருக்கும்); அது விடியற்காலை உதயமாகும் வரை இருக்கும் " (குர்ஆன் 97:1-5)

பனூ இஸ்ராயீலைச் சார்ந்த ஒரு மனிதர் இரவு முழுவதும் நின்று வணங்குவார். இவ்வாறே 1000 மாதங்கள் ஈடுபட்டதையும் (83 வருடங்கள் ) பனூ இஸ்ரவேலர்களைச் சார்ந்த நபிமார்கள் 80 வருடங்கள் கண்ணிமைக்கும் நேரம் கூட இறைவனுக்கு மாறு செய்யாத வண்ணம் இறைவணக்கம் புரிந்ததையும் இணைத்து லைலத்துல்கத்ர் வசனங்கள் அருளப்பட்டிருக்கிறது.

"மூடிக்கொள்ளும் இரவின் மீதும் சத்தியமாக" - (குர்ஆன் : 91:4) என்று இறைவன் இரவு மீது சத்தியம் செய்ததன் விளக்கம் புரிகிறதா ?

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 248**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துஷ் ஷம்ஸ் - சூரியன் 6 )**

وَالسَّمَآءِ وَمَا بَنٰٮهَا ۙ

வானத்தின் மீதும், அதை(ஒழுங்குற) அமைத்திருப்பதின் மீதும் சத்தியமாக- (குர்ஆன் : 91:5)

பிரபஞ்சம் தோன்றியது எவ்வாறு?

எந்த ஒரு பொருளானாலும் அதற்கு ஒரு ஆரம்பமும், ஒரு முடிவும் இருப்பது நியதி. இது பொருட்களுக்கு மட்டுமல்லாது உயிரினங்களுக்கும் உள்ள பொதுவான நியதி. இவ்வனைத்தின் உருவாக்கத்திற்கும் படைப்பாளன் ஒருவன் கட்டாயம் இருந்தே ஆக வேண்டும்.

அப் படைப்பாளனுக்கு தொடக்கமும், முடிவும் இருக்கவே கூடாது. அப்படி இருந்தால் படைப்பாளனுக்கு படைப்பாளன், படைப்பாளனுக்கு படைப்பாளன், படைப்பாளனுக்கு படைப்பாளன் என்று அர்த்தமில்லாத முடிவிலி ஆன ஒரு சங்கிலித் தொடர் ஏற்படும்.

எனவே, இதிலிருந்து நிச்சயமாக ஒரு படைப்பாளன் இருக்கின்றான் என்று எந்தவித சந்தேகமும் இன்றி புலனாகின்றது.

இப்பொழுது அவனை எவ்வாறு அறிந்து கொள்வது என்ற கேள்வி நம்மில் எழும். படைப்பாளனுக்கு மட்டும் தான் அவனது படைப்பினங்களைப் பற்றியும், அதன் உருவாக்கங்கள் பற்றியும், அப் படைப்பினங்களின் இயக்கங்கள் எவ்வாறு இருக்கும், எவ்வாறு இருக்க வேண்டும் என்ற முழு அறிவும் இருக்கும்.

அல்குர்ஆன் படைப்பாளனைப் பற்றி என்ன கூறுகின்றது?

முஸ்லிம்களால் இறைவேதம் என்று நம்பப்படும் அல்குர்ஆனில் பல்வேறு இடங்களில் அண்டங்கள் அனைத்தையும் படைத்த படைப்பாளனாகிய இறைவன் தன் படைப்பினங்களைப் பற்றியும், அதன் உருவாக்கம் பற்றியும், அதன் செயற்பாடுகள் பற்றியும் மிகத் தெளிவாக அனைவரும் புரிந்து கொள்ளும் விதமாக பேசுகின்றான்.

அல்லாஹ்வே முதலில் படைத்தான், மீண்டும் அவன் படைப்பான், பின்னர் அவனிடம் நீங்கள் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்!(குர்ஆன் 30:11)

அல்லாஹ் தான் ஒன்றுமே இல்லாதிருந்த நிலையில் இப் பிரபஞ்சத்தை படைத்தவன் என்பது இந்த குர்ஆன் வசனத்திலிருந்து தெளிவாகின்றது. அல்லாஹ் இப் பிரபஞ்சத்தின் ஆரம்பத்தை குர்ஆனில் குறிப்பிடும்போது,

(அவன்) வானங்களையும், பூமியையும் முன்மாதிரியின்றி படைத்தவன். ஒரு காரியத்தை அவன் முடிவு செய்யும் போது அது குறித்து "ஆகு' என்றே கூறுவான். உடனே அது ஆகி விடும். (அல்குர்ஆன் 2:117)

இந்த குர்ஆன் வசனத்திலிருந்து அல்லாஹ் வானங்களையும், பூமியையும் எந்தவித முன்மாதிரி இன்றி படைத்ததாக குறிப்பிடுகின்றான். மனிதனால் சுற்றுப்புறச் சூழலை அறிந்து கொள்வதன் மூலம் வெறும் கருதுகோள்களையும், கோட்பாடுகளையும் மாத்திரமே உருவாக்க முடியும்.

வானங்களையும், பூமியையும் ஆறு நாட்களில் படைத்ததாக படைப்பாளனாகிய அல்லாஹ் திருமறைக் குர்ஆனிலே குறிப்பிடுகின்றான்.

"பூமியை இரண்டு நாட்களில் படைத்தவனையா மறுக்கிறீர்கள்? மேலும் அவனுக்கு நிகரானவர்களைக் கற்பனை செய்கிறீர்கள், அவனே அகிலத்தின் அதிபதியாவான்" என்று கூறுவீராக!

நான்கு நாட்களில் அதன் மேலே முளைகளை ஏற்படுத்தினான். அதில் பாக்கியம் செய்தான். அதன் உணவுகளை அதில் நிர்ணயம் செய்தான். கேள்வி கேட்போருக்குச் சரியான விடை இதுவே.

பின்னர் வானம் புகையாக இருந்த போது அதை நாடினான். "விரும்பியோ, விரும்பாமலோ நீங்கள் கட்டுப்பட்டு நடக்க வேண்டும்" என்று அதற்கும், பூமிக்கும் கூறினான். "விரும்பியே கட்டுப்பட்டோம்' என்று அவை கூறின.

இரண்டு நாட்களில் ஏழு வானங்களை அமைத்தான். ஒவ்வொரு வானத்திலும் அதற்குரிய கட்டளையை அறிவித்தான். கீழ் வானத்தை விளக்குகளால் அலங்கரித்தோம். (அவற்றை) பாதுகாக்கப்பட்டதாக (ஆக்கினோம்). இது அறிந்தவனாகிய மிகைத்தவனின் ஏற்பாடாகும். (குர்ஆன் 41: 9,10,11,12)

உங்கள் இறைவனாகிய அல்லாஹ்வே வானங்களையும், பூமியையும் ஆறு நாட்களில் படைத்தான், பின்னர் அர்ஷின் மீது அமர்ந்தான். இரவைப் பகலால் அவன் மூடுகிறான். பகல், இரவை வேகமாகத் தொடர்கிறது. சூரியனையும், சந்திரனையும், நட்சத்திரங்களையும் தனது கட்டளையால் கட்டுப்படுத்தினான். கவனத்தில் கொள்க! படைத்தலும், கட்டளையும் அவனுக்கே உரியன. அகிலத்தின் இறைவனாகிய அல்லாஹ் பாக்கியம் பொருந்தியவன்.(குர்ஆன் 7:54)

வானங்கள், பூமி மட்டுமல்லாது அவ்விரண்டுக்கும் இடைப்பட்டவைகளையும் சேர்த்து ஆறு நாட்களில் படைத்ததாக அல்லாஹ் கூறுகின்றான்.

வானங்களையும், பூமியையும், அவற்றுக்கு இடைப்பட்டதையும் ஆறு நாட்களில் படைத்தோம், நமக்கு எந்தக்களைப்பும் ஏற்படவில்லை. (அல்குர்ஆன் 50:38)

அல்குர்ஆன் வசனங்களின் படி பூமியைப் படைக்க இரு நாட்கள், அதில் மனிதன் வாழத் தேவையான ஏற்பாடுகள் செய்ய இரண்டு நாட்கள், வானங்களைப் படைக்க இரு நாட்கள் என ஆறு நாட்களில் அனைத்தையும் அல்லாஹ் படைத்தான், கீழுள்ள அல்குர்ஆன் வசனங்களும் இதற்கு ஆதாரமாக உள்ளன. (எண்கள் 10: 3, 11: 7, 41: 9, 10, 41:12, 25:59, 32: 4, 57: 4)

பிரபஞ்சம் தானாக உருவாகியதா?

சில விஞ்ஞானிகள் இப் பிரபஞ்சம் தானாக உருவாகியது என்ற கோட்பாட்டில் உள்ளனர். மேலும், கடவுள் என்று ஒருவன் இல்லை என்றும் இப் பிரபஞ்சத்தின் எல்லா நிகழ்வுகளும் இயற்கையின் நிமித்தமே நிகழ்கின்றது என்றும் வாதிடுகின்றனர்.

அல்குர்ஆன் இறைவேதம் என்பதற்கு ஏராளமான இறை வசனங்கள் சான்று பகர்கின்றன. அல்குர்ஆனிலுள்ள அறிவியல் வசனங்களை தற்போதைய விஞ்ஞான கண்டுபிடிப்புக்கள் உண்மைப்படுத்தி அல்குர்ஆன் இறைவேதம் தான் எனவும் இறைவன் ஒருவன் இருக்கின்றான் எனவும் எந்தவித சந்தேகமும் இன்றி தெளிவாக எடுத்தியம்பகின்றன.

அவர்களுக்கு உண்மை தெளிவாக வேண்டும் என்பதற்காகப் பல பாகங்களிலும், அவர்களுக்கு உள்ளேயும் நமது சான்றுகளை அவர்களுக்குக் காட்டுவோம். உமது இறைவன் ஒவ்வொரு பொருளையும் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பது போதுமானதாக இல்லையா? (அல்குர்ஆன் 41:53)

எப்பொருளும் இன்றி அவர்கள் படைக்கப்பட்டார்களா? அல்லது அவர்களே படைக்கக் கூடியவர்களா? அல்லது வானங்களையும், பூமியையும் அவர்களே படைத்தார்களா? அவ்வாறில்லை! அவர்கள் உறுதியாக நம்ப மாட்டார்கள். (அல்குர்ஆன் 52: 35,36)

படைத்த இறைவன் ஒருவன் இருக்கின்றான் என்பதற்கு அல்குர்ஆனில் நிறைய அறிவியல் சான்றுகள் காணப்படுகின்றன. இன்றைய விஞ்ஞான கண்டுபிடிப்புகளையும் அச் சான்றுகள் உண்மைபடுத்துகின்றன.

அவற்றில் நவீன விஞ்ஞான கண்டுபிடிப்புகளான இப்பிரபஞ்சத்தின் தோற்றம் பற்றிய பெரு வெடிப்புக் கொள்கை (Big bang theory) பற்றியும், விரிவடையும் பிரபஞ்சம் பற்றியும் அல்குர்ஆன் 1400 வருடங்களுக்கு முன்பே அறிவிக்கின்றது.

அல்குர்ஆன் இப் பிரபஞ்சத்தின் தோற்றம், விரிவு பற்றி என்ன கூறுகின்றது?

"பின்னர் வானம் புகையாக இருந்த போது அதை நாடினான். 'விரும்பியோ, விரும்பாமலோ நீங்கள் கட்டுப்பட்டு நடக்க வேண்டும்" என்று அதற்கும், பூமிக்கும் கூறினான். "விரும்பியே கட்டுப்பட்டோம்' என்று அவை கூறின." (அல்குர்ஆன் 41:11)

"வானங்களும், பூமியும் இணைந்திருந்தன என்பதையும், அவ்விரண்டையும் நாமே பிரித்தோம் என்பதையும், உயிருள்ள ஒவ்வொரு பொருளையும் தண்ணீரிலிருந்து அமைத்தோம் என்பதையும் (நம்மை) மறுப்போர் சிந்திக்க வேண்டாமா? அவர்கள் நம்பிக்கை கொள்ள வேண்டாமா?" (அல்குர்ஆன் 21:30)

மேலுள்ள அல்குர்ஆன் வசனங்களின் படி வானங்கள், பூமி முன்னர் ஒரே பொருளாக இணைந்திருந்தன எனவும் அவை பிரிக்கப்படுவதற்கு முன் புகை மண்டலமாக இருந்து அதைத் தொடர்ந்து வானங்கள், பூமி, கோள்கள் உருவாக்கப்பட்டன என்றும் கூறப்படுகின்றது.

(நமது) வலிமையால் வானத்தைப் படைத்தோம். மேலும் (அதை) நாம் விரிவுபடுத்துவோராவோம். (அல்குர்ஆன் 51:47)

அல்குர்ஆன் இப் பிரபஞ்சத்தின் தோற்றம் பற்றி மட்டும் கூறாமல் அது விரிவாகிக்கொண்டே செல்கின்றது என்ற உண்மையையும் 1400 வருடங்களுக்கு முன்பே அறிவித்து விட்டது.

விஞ்ஞானம் இப் பிரபஞ்சத்தின் தோற்றம், விரிவு பற்றி என்ன கூறுகின்றது?

நவீன விஞ்ஞான அறிக்கைகளின் படி இப் பிரபஞ்சம் ஆரம்பமாவதற்கு முன்னர் ஒரு கட்டத்தில் இப் பிரபஞ்சமானது வெறும் புகை மண்டலமாகக் காணப்பட்டது. அதாவது இப் புகை மண்டலமானது ஒளி ஊடுருவ முடியாத, அடர்த்தியான வெப்ப வாயுக் கலவையாகும்.

இது விஞ்ஞானத்தின் பிரபஞ்சத்தின் பிறப்பு பற்றிய மறுக்க முடியாத உறுதியான நம்பிக்கையாகும். தற்போது விஞ்ஞானிகளின் அவதானிப்பின் படி மீதமுள்ள புகை மண்டலத்தின் மூலம் புதிய நட்சத்திரங்கள் உருவாகின்றன.

பூமியினதும், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், கோள்கள், பால்வெளிகள் ஆகியவற்றை உள்ளடக்கிய வானத்தினதும் உருவாக்கத்திற்கு புகை மண்டலமே காரணம் எனவும் மேலும், இவை எல்லாம் ஒன்றாக ஒரு பொருளாக இருந்து வெடித்து சிதறி புகை மண்டலமாகி ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்கப்பட்டு உருவாகின என்று நவீன விஞ்ஞானம் கூறுகின்றது.

Dr. Alfred Kroner என்பவர் புகழ்பெற்ற புவியியலாளர்களில் ஒருவர் இவர் புவியியற் துறை பேராசிரியரும், ஜெர்மனியில் உள்ள புவியியற் துறை நிறுவனத்தின் தலைவரும் ஆவார். இவர் கருத்து தெரிவிக்கையில்....

"முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இப் பிரபஞ்சத்தின் ஆரம்பம் பற்றி தெரிந்திருக்க வாய்ப்பே இல்லை. காரணம், விஞ்ஞானிகள் கடந்த காலங்களில் தான் இதனை மிகவும் முன்னேறிய தொழில் நுட்ப உதவியுடன் கண்டறிந்தனர்".

மேலும் அவர் தெரிவிக்கையில் "1400 வருடங்களுக்கு முன்னர் அணு இயற்பியல் பற்றி சிறிதளவேனும் தெரிந்திருக்க வாய்ப்பே இல்லை. முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வாழ்ந்த காலத்தைப் பொருத்தவரை இது அவரது சொந்த கருத்தாக இருப்பதற்கு வாய்ப்பே இல்லை.

உதாரணமாக வானங்கள், பூமி ஆகியவற்றின் ஆரம்பம் பற்றிய அறிவு எந்த மனிதனுக்கும் அறவே இல்லாத காலம் அது" என்று கூறுகின்றார்.

California Mount Wilson ஐச் சேர்ந்த அமெரிக்க வான சாஸ்திரியான Edwin Hubble என்பவர் 1929ம் ஆண்டில் வானியல் வரலாற்றில் சிறந்த கண்டுபிடிப்புகளைக் கண்டறிந்தவர். அவரது கண்டுபிடிப்புகளில் பிரபஞ்சத்தின் விரிவடைதல்' மிக பிரபல்யமான ஒன்று.

இவர் மிகப் பெரிய தொலைநோக்கி மூலம் வானத்தை அவதானிக்கையில் நட்சத்திரங்களும், பால்வெளிகளும் நம்மிலிருந்து மட்டும் விலகிச் செல்லாமல் அவை தனக்குத் தானே ஒவ்வொன்றிலிருந்தும் விலகிச் செல்வதை அவதானித்தார்.

இதிலிருந்து அவர் பெற்ற முடிவு இப் பிரபஞ்சத்தின் அனைத்திலுமுள்ள அனைத்தும் ஒன்றிலிருந்து ஒன்று விலகிச் செல்வதால் இப் பிரபஞ்சமானது தொடர்ந்து விரிவடைந்து கொண்டே செல்கின்றது.

இப் பிரபஞ்சம் விரிவடைதலைக் குறிப்பாக சொல்வதானால் ஒருவர் நேரத்தை நோக்கி பின்னோக்கியதாக நகர்ந்தால் அவர் இந்த பிரபஞ்சம் ஒற்றைப் புள்ளியில் (single point) உருவாக்கப்பட்டதை உணர்வார். கணக்கெடுப்புகளின் படி இந்த ஒற்றைப் புள்ளியானது இப் பிரபஞ்சத்திலுள்ள அத்தனை அம்சங்களினதும் பூஜ்ஜியத் தொகுதியையும் (zero volume)> முடிவிலா அடர்த்தியையும் (infinite desity) உள்ளடக்கி உள்ளது.

இப் பிரபஞ்சம் ஆனது இப் பூஜ்ஜயத் தொகுதியின் ஒற்றைப் புள்ளியிலிருந்து வெடிப்புக்குள்ளாகி தோன்றியது. இப் பிரபஞ்சத்தின் ஆரம்பத்திற்கான இம் மாபெரும் வெடிப்பானது 'Big Bang' எனும் பெரு வெடிப்புக் கொள்கையாக விஞ்ஞானிகளால் பெயர் சூட்டப்பட்டுள்ளது.

விளக்க நோக்கங்களுக்காகவே இத் தத்துவார்த்த வெளிப்பாடானது பூஜ்ஜியத் தொகுதி என்று அழைக்கப்படுகின்றது. அதாவது விஞ்ஞானத்தில் இந் நிலை மனித அறிவுக்கு ஒன்றும் இல்லாத நிலை (Nothingness) என்பதற்காகவே பூஜ்ஜயத் தொகுதி என்று அழைக்கப்படுகின்றது.

'Big Bang' பெரு வெடிப்புக் கொள்கையின் படி பிரபஞ்சமானது ஒரு பொருளிலிருந்து வெடிப்புக்குள்ளாகி பல பொருட்கள் உருவாகின என்பதாகும். இக் கொள்கை 20ம் நூற்றாண்டிலேயே அறிமுகப்படுத்தப்பட்டது. ஆனால் அல்குர்ஆன் இதை 1400 வருடங்களுக்கு முன்பே அறிவித்து விட்டது. அல்குர்ஆன் இறைவேதம் என்பதற்கு இந்த சான்று ஒன்றே போதுமானது.

வானத்தின் மீதும், அதை(ஒழுங்குற) அமைத்திருப்பதின் மீதும் சத்தியமாக- (குர்ஆன் : 91:5)

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 249**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துஷ் ஷம்ஸ் - சூரியன் 7 )**

وَالْاَرْضِ وَمَا طَحٰىهَا ۙ‏

பூமியின் மீதும், இன்னும் அதை விரித்ததின் மீதும் சத்தியமாக-

(குர்ஆன் : 91:6)

இந்த வசனம் பூமி தட்டையாக இருப்பதாகவும் இது போன்று மற்ற வசனங்களும் பூமி தட்டையாக இருப்பதாக கூறும் குர்ஆன் (15:19), ( 20:53), (43:10), ( 50:7), (51:48), (71:19 ), (79:30), ( 88:20 ) ஆகிய வசனங்கள் கூறுவதாக சிலர் கருத்து தெரிவித்துள்ளனர்.

வானங்களிலும் பூமியிலும் இருப்பவை அனைத்தும் (அவை) விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் அல்லாஹ்வுக்குச் சிரம் பணிந்து வழிபட்டே தீரும். காலையிலும் மாலையிலும் அவற்றின் நிழல்களும் (அவனுடைய கட்டளைக்கு வழிப்பட்டே முன் பின் செல்கின்றன).(குர்ஆன் : 13:15)

இந்த வசனம் ஈர்ப்பாற்றலை முன்வைக்கிறது. குர்ஆனில் ஈர்ப்பாற்றலைப் பற்றி ஆய்வு...

1) பூமி ஏன் உருண்டையாக உள்ளது ?

“கவளம்” கேள்விப்பட்டிருப்பீர்கள். யானைக் கவளம் பெரிய உருண்டையாக இருக்கும். உள்ளங்கை நிறைய சோறு எடுத்து அதை கவனமாக கவளமாக்கி ( உருண்டையாக்கி) உண்ணும் பழக்கம் இன்றும் உள்ளது.

கவளமாக்க என்ன செய்கிறோம்? நான்கு திசையிலும் இல்லை பத்து திசையிலிருந்தும் , இல்லை எல்லா திசையிலிருந்தும் உருண்டையின் மையத்தை நோக்கி அழுத்துகிறோம்.

பூமி உருண்டையும் அவ்வாறே உருவாக்கப்பட்டுள்ளது. ஒரே ஒரு வேறுபாடு. நியூட்டன் அவர்கள் , “ஒவ்வொரு பொருளும், இன்னொரு பொருளை ஈர்க்கும் பண்புடையவை” என்றார்.

அதன்படி , பூமியில் உள்ள ஒவ்வொரு பொருளும் ஒன்றை ஒன்று ஈர்க்கிறது.கவளம் உருவாக்க வெளிப்புறத்தில் இருந்து அழுத்தம் தருகிறோம்.

ஆனால் பூமியில் எல்லா பொருள்களும் ஒரு மையத்தை நோக்கி ஈர்ப்பு விசையால் உள் இழுக்கப்பட்டு கோளம் உருவாகியது. அதாவது பூமி உருண்டையாக உள்ளது.

யானை முதல் பூனை வரை நாம எல்லாரும் எப்படி நிலத்தில் நிலையாக நிற்கிறோம்? நடக்கிறோம்?

உலகம் உருண்டை. அது சுற்றிக்கொண்டிருப்பதாக இருந்தும் எப்படி நாம கீழே விழாமல் நிலையாக இருக்க முடிகிறது? பூமியை விட்டு வெளியே பறந்து போய்விடாமல் எப்படியிருக்கிறோம்?

நிலா எப்படி பூமியைச் சரியாக 28 நாள்களில் சுற்றி வருகிறது? இது எல்லாவற்றுக்கும் ஒரே பதில் புவியீர்ப்பு விசை.

ஒரு பொருள் இன்னொரு பொருளை தன்னகத்தே தக்கவைக்க ஒரு சக்தியைப் பயன்படுத்தும். அதற்குப் பெயர்தான் விசை. ஒரு காந்தம் இரும்பு மேல் செலுத்தும் விசையைக் காந்த விசை என்று சொல்லுவோம். அதே இந்தப் பூமி அதன் மேலே இருக்கும் பொருள்கள் மேல் ஏற்படுத்தினால் அதற்குப் பெயர் புவிஈர்ப்பு விசை. அவ்வளவுதான்.

பூமிக்கு ஈர்ப்பு விசை இயற்கையிலேயே உள்ளது.எல்லா பொருட்களையும் தன்னை நோக்கி இழுக்கும். அதனால்தான் வானத்தை நோக்கிக் ஒரு பொருளைப் போட்டால்,அது பூமியில் விழுகிறது.

இன்னும் சற்று விவரமாக சொல்றேன்

பரப்பு விசையால் (surface tension) நீர்த்துளிகள் கோள வடிவம் எடுப்பதைப் பார்த்திருப்பீர்கள்.

அதே கோள நீர்க்குமிழியில், மற்றொரு நீர்க்குமிழியை உண்டாக்கினால், (சோப்பு நீரில் செய்து பாருங்கள் ) அவை இணையும் இடத்தில், அறுகோணம் (hexagon) உண்டாவதைக் காணலாம்.

இக்குறிப்பிட்ட வடிவங்கள் , வெளிப்புற விசைகளையும், உட்புற விசைகளையும் சமப்படுத்தி பொருட்களைச் சமநிலையில் வைத்திருக்கின்றன.(Equilibrium)

இயற்கை எப்பொழுதுமே , சமநிலையையே விரும்புகிறது. சமநிலையில், எல்லாம் சம்மனமாக(ஓய்வு/அசைவற்று) இருக்கும். அதாவது, சுழி நிலையாற்றல் நிலையை அடைகிறது.(Zero potential energy).

இப்பேரண்டமே, பெருவெடிப்பின் முன்னர் சமநிலையில் இருந்திருக்கக் கூடும். பின்னர் அச்சமநிலை குலைந்து, பெருவெடிப்பு ஒன்று நிகழ்ந்து, இவ்வண்டம் விரிந்து பரந்து கொண்டே இருக்கிறது.

இச்செயலில், வெப்பம் தணிந்து கொண்டே வந்து , எப்பொழுது முழுவதுமாக குளிர்கிறதோ, மீண்டும் சமநிலையை அடையும். அப்போது, இப்பேரண்டம் இறந்ததாக பொருள்.

ஒன்று புலனாகிறது. எல்லா செயல்களும், சமநிலையை அடைவதற்கே நிகழ்கின்றன. இதுவே, சிதறம்(Entropy) எனப்படுகிறது. நேரமும் முன்னோகி பயணிப்பதை மட்டுமே காண்கிறோம். இதற்கும் சிதறம்தான் காரணம் என்கின்றனர்.

கேள்விக்கு வருவோம். தன்னுடைய ஈர்ப்பு ஆற்றலினால், கோள்கள் தம்மை சமநிலை உடைய வடிவத்திற்கு வளைத்துக் கொள்கின்றன. அதனால் தான் அவைகளைக் 'கோள்கள் ' என்கிறோம் போலும்.

மேலும் பூமிக்கு ஈர்ப்பு சக்தி இருப்பது போன்று சூரியனுக்கும் உள்ளது ஏனைய கிரகங்களுக்கும் உள்ளது அதனால் தான் வானவெளியில் ஒவ்வொரு கிரகங்களும் தத்தம் பாதையை விட்டு விலகாமல் ஒழுங்கான நிலையில் சூரியனைச் சுற்றி வருகின்றன.

اَلشَّمْسُ وَالْقَمَرُ بِحُسْبَانٍ

சூரியனும் சந்திரனும் (அவைகளுக்கு இறைவன் ஏற்படுத்திய) கணக்கின்படியே (செல்கின்றன).
(அல்குர்ஆன் : 55:5)



2. பூமி சுற்றுகிற போது, விமானங்கள் ஏன் பறக்கின்றன ? மேலே நின்றுவிட்டு இடம் வந்தவுடன் கீழே இறங்கலாமே.

அப்படி பார்த்தால் நீங்கள் ஒரு பலூன் கயிற்றில் மூன்று மணி நேரம் தொங்கினால் சிங்கப்பூர் வந்துவிடும். டபக் என்று குதித்து விடலாம். இன்னும் ஒரு நாள் தொங்கினால் போதும், அமெரிக்காவே வந்துவிடும். இலவசமாக அமெரிக்கா போகலாம்.

Tarzan அலம் விழுதை பிடித்துக் கொண்டு, காட்டில் தாவுவது போல், அங்கே இருந்து கயிற்றில் தொங்கிக்கொண்டே இருந்து, நம்மூர் வந்ததும் கீழே குதித்து விடலாமே இது சாத்தியமா என்றால் ?

அது சாத்தியமில்லை!

அறிவியலில் இப்படி எல்லாம் நடக்காது. காரணம் :

GRAVITY, என்ற புவியீர்ப்பு சக்தி! அது மொத்தமாக உங்களையும் உங்கள் ஊரையே தூக்கி கொண்டு சுற்றுகிறது! மீனம்பாக்கம் அங்கு உள்ள விமானம், விமானம் பறக்கும் காற்று, விமானம் உள்ளே உள்ள பணிப்பெண், எல்லோரும் எல்லாமே பூமியில் அட்டை போல் ஒட்டிக் கொள்ள வைத்துள்ளது புவி ஈர்ப்பு சக்தி !

புவியீர்ப்பு சக்தி என்பது ஒரு பசை மாதிரி. இப்படி அப்படி போகலாம்.

பூமி சுற்ற விட்டு, நாம் அப்படியே நிற்க வேண்டும் என்றால், நீங்கள் புவியீர்ப்பு படலம் விட்டு வெளியே எவ்வளவு உயரம் சென்றாலும் புவியீர்ப்பு அது குறையும், ஆனால் முற்றிலும் விலகாது.

Space shuttle கூட விமானம் போல் தான் சக்தி ஒன்றை பயன்படுத்தி பறக்க முடியும். விண்வெளியில் ரொம்ப தூரம் பறக்க, அணுசக்தியை பயன்படுத்துகிறார்கள். ஒரு இடத்தில் "பொத்" என்று கீழே விழலாம், நான் நீங்கள் சொல்வது போல் மிதக்க முடியாது!

புவியீர்ப்பு என்பது முடிவிலியை( infinity ) தவிர பூஜ்ஜியமாக மாற முடியாது.

பூமியின் மேற்பரப்பிலிருந்து நாம் விலகி விலகிச் செல்லும்போது அது பலவீனமடைகிறதே தவிர ஆனால் அது பூஜ்ஜியமாக மாறாது.

புவி ஈர்ப்பாற்றல் சக்தியைக் கணக்கிட :

பூமியின் விட்டம் 6400 கிலோ மீட்டர் பூமியின் ஆரம் 3200 கி மீ பூமியிலிருந்து மேலே செல்ல செல்ல பூமியின் ஈர்ப்பாற்றல் குறைகிறது

ஒரு கிலோ கிராம் 1000 கிராம் எடை பூமியிலிருந்து 6400 கிமீ உயரத்தில் அதாவது பூமியின் ஆரத்தைப் இரு மடங்கு 3200 * 2= 6400 கிமீ உயரத்தில் வைத்து எடை போட்டால்

ஈர்ப்பாற்றல் 2 ன் மடங்கு = 4 அதாவது 1000 /4 =250 கிராம் எடை கொண்டதாக இருக்கும்

பூமியின் ஆரத்தைப் போல் 3 மடங்கு உயரத்தில் 3200 * 3 =9600 கி மீ உயரத்தில் வைத்து எடை போட்டால்

1கிலோ = 1000/ 3ன் மடங்கு 1000 /9 =111 கிராம்தான் இருக்கும்

பூமியின் ஆரத்தைப் போல் 4 மடங்கு உயரத்தில் 12800 கிமீ உயரத்தில் 62.5கிராம் எடை இருக்கும்

பூமியின் ஈர்ப்பாற்றல் பூமியிலிருந்து மேலே செல்ல செல்ல குறைகிறது என்பதை குர்ஆனில் அல்லாஹ்

"அவனே வானத்தை உயர்த்தினான் மேலும் தராசை அமைத்தான். ( குர்ஆன் 55 : 07)

இந்த வசனத்தில் தராசு என்பது புவி ஈர்ப்பாற்றலின் மாறுபாட்டின் சுருக்கமான சொல்லாடலாக இருக்கிறது என்பதை விளங்கிக் கொள்ள வேண்டும்

இந்த பூமி என்பது நீங்கள் என்று வைத்துக் கொண்டால், உங்கள் தலையில் இருக்கும் தலை முடி போல் காற்று மண்டலம் உள்ளது. தலைமுடி atmosphere காற்று மண்டலம் உங்கள் மீது ஒட்டியுள்ளது

அதில் வசிக்கும் ஒரு கண்ணுக்கு தெரியாத பூச்சி தான் ஒரு ஆகாய விமானம். அந்த பூச்சி தலைமுடி விட்டு வெளியே வர முடியாது.

உங்கள் மேல் உள்ள பூச்சி உங்களை நகர விட்டு உங்கள் தலையில் இருந்து காலுக்கு குதிக்க முடியாது. அதுவாக பறந்து தான் நகர வேண்டும்.

தலைமுடி atmosphere காற்று மண்டலம் உங்கள் மீது ஒட்டியுள்ளது. விமானம் பூச்சி விட சின்னதாக முடியில் ஒட்டிக்கொண்டு நகரும். பூமி நம் தலை சைசுக்கு இருந்தால், விமானம் பூச்சி கூட கிடையாது. உங்கள் தலை சுற்றுவது அந்த பூச்சிக்கு தெரியாது. முடியுடன் சேர்ந்து தலையில் உள்ள எல்லாமே சுற்றும்!! எனவே பூமி சுற்ற விட்டு Tarzan போல் தாவுவது அல்லது குதிப்பது சாத்தியமில்லை!

இப்போ சொல்லுங்கள் குர்ஆன் பூமியை உருண்ட வடிவம் என்று தானே சொல்கிறது .

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 250**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துஷ் ஷம்ஸ் - சூரியன் 8 ) பகுதி- 1**

وَنَفْسٍ وَّمَا سَوّٰىهَا ۙ

ஆத்மாவின் மீதும், அதை ஒழுங்குபடுத்தியவன் மீதும் சத்தியமாக-

(குர்ஆன் : 91:7)

فَاَلْهَمَهَا فُجُوْرَهَا وَتَقْوٰىهَا ۙ

அப்பால், அவன் (அல்லாஹ்) அதற்கு அதன் தீமையையும், அதன் நன்மையையும் உணர்த்தினான்.(குர்ஆன் : 91:8)

قَدْ اَفْلَحَ مَنْ زَكّٰىهَا ۙ

அதை (ஆத்மாவை)ப் பரிசுத்தமாக்கியவர் திடமாக வெற்றியடைந்தார்.

(குர்ஆன் : 91:9)

وَقَدْ خَابَ مَنْ دَسّٰىهَا

ஆனால் எவன் அதை(ப் பாவத்தில்) புகுத்தினானோ அவன் திட்டமாகத் தோல்வி அடைந்தான். (குர்ஆன் : 91:10)

அல்லாஹ் ஆன்மாவை நேரானதாகவும், நேர்த்தியானதாகவும், செம்மையான இயற்கையோடும் படைத்தான். இதையே மற்றொரு வசனத்தில்

ஆகவே, நீர் உம்முகத்தை தூய (இஸ்லாமிய) மார்க்கத்தின் பக்கமே முற்றிலும் திருப்பி நிலைநிறுத்துவீராக! எ(ந்த மார்க்கத்)தில் அல்லாஹ் மனிதர்களைப் படைத்தானோ அதுவே அவனுடைய (நிலையான) இயற்கை மார்க்கமாகும்; அல்லாஹ்வின் படைத்தலில் மாற்றம் இல்லை; அதுவே நிலையான மார்க்கமாகும். ஆனால் மனிதரில் பெரும்பாலோர் (இதை) அறியமாட்டார்கள். (குர்ஆன் : 30:30)

நபி (ஸல்) அவர்கள் எல்லாக் குழந்தைகளும் இயற்கையி(ன் மார்க்கத்தி)ல் தான் பிறக்கின்றன என்று கூறியுள்ளார்கள்.( புகாரி 1358)

அல்லாஹ் கூறுகின்றான்: "நான் என் அடியார்கள் அனைவரையும் (இயற்கையிலேயே) உண்மை வழியில் நின்றவர்களாகவே படைத்தேன். (ஆயினும் ) அவர்களிடம் ஷைத்தான்கள் வந்து அவர்களின் இயற்கை நெறியிலிருந்து அவர்களைப் பிறழச் செய்து விட்டனர். (முஸ்லிம் 5498)

இம்ரான் பின் ஹுஸைன் (ரலி) அவர்கள் கூறியதாவது:

'முஸைனா' அல்லது 'ஜுஹைனா குலத்தைச் சேர்ந்த ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, "அல்லாஹ்வின் தூதரே! மனிதர்கள் இன்று நற்செயல் புரிவதும், அதற்காக முனைந்து செயல்படுவதும் ஏற்கெனவே அவர்கள் மீது தீர்மானிக்கப்பட்ட விதியின் அடிப்படையிலா?

அல்லது அவர்களுக்கெதிரான சான்றை உறுதிப்படுத்தும் வகையில், அவர்களுடைய இறைத்தூதர்கள் அவர்களிடம் கொண்டு வந்துள்ளவற்றை ஏற்றுச் செயல்படுவதைப் பொறுத்தா?'' என்று கேட்டார்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "இல்லை; ஏற்கெனவே அவர்கள் மீது தீர்மானிக்கப்பட்டுவிட்ட (விதியின்) அடிப்படையில்தான்" என்று பதிலளித்தார்கள்.

அப்போது அந்த மனிதர், "அவ்வாறாயின் நாங்கள் ஏன் நல்லறங்கள் புரிய வேண்டும்?" என்று வினவினார்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அல்லாஹ் ஒருவரை (சொர்க்கம், நரகம் எனும்) இரு நிலைகளில் ஒன்றுக்காகப் படைத்திருந்தால், அந்த நிலைக்கு அவரைத் தயார்படுத்துவான். இதை உண்மைப்படுத்தும் அம்சம் உயர்ந்தோன் அல்லாஹ்வின் வேதத்தில் இடம்பெற்றுள்ளது" என்று கூறிவிட்டு,

ஆன்மா மீதும் அதை சீரமைத்தவன் மீதும் ஆணையாக ! பின்னர் அதன் பாவம் குறித்தும் அதன் இறையச்சம் குறித்தும் அதற்கு அறிவித்தானே அதன் மீதும் ஆணையாக ! என்னும் மேற்கண்ட வசனங்களை ஓதி காட்டினார்கள் ( முஸ்லிம் 5154 )

وَيَسْـــَٔلُوْنَكَ عَنِ الرُّوْحِ قُلِ الرُّوْحُ مِنْ اَمْرِ رَبِّىْ وَمَاۤ اُوْتِيْتُمْ مِّنَ الْعِلْمِ اِلَّا قَلِيْلًا

(நபியே!) ரூஹைப் பற்றி (யூதர்களாகிய) அவர்கள் உங்களிடம் கேட்கிறார்கள். அதற்கு நீங்கள் "அது எனது இறைவனின் கட்டளையால் ஏற்பட்டது. (அதைப் பற்றி) வெகு சொற்ப ஞானமேயன்றி உங்களுக்குக் கொடுக்கப்படவில்லை. (ஆதலால், அதன் நுட்பங்களை நீங்கள் அறிந்துகொள்ள முடியாது)" என்று கூறுங்கள். (அல்குர்ஆன் : 17:85)

மேற்கண்ட வசனத்தில் ஆன்மா என்பது இறைவனுடைய கட்டளையின் நின்றுமுள்ள ஒன்றென்பதாக நமக்கு எடுத்து காட்டப்படுவதால், இறைவனுடைய கட்டளையை தாங்கிய "திருக்குர்ஆன் " என்னும் வேதம் எவ்வாறு ஒரு சிருஷ்டின் (படைப்பின்) நிலைக்கு உட்படுத்தப்பட முடியாதோ அவ்வாறே, "ஆன்மா " என்பதும் இறைவனுடைய கட்டளையை சார்ந்த ஒன்றாக இருப்பதால், ஆன்மாவையும் சிருஷ்டியின் நிலைக்குள் உட்படுத்த முடியாது என்பதாக முதலில் நாம் விளங்கிக் கொள்ள வேண்டும்.

ஆன்மாவின் வெளிப்பாட்டை குறித்து நமக்கு ஆன்மீகவாதிகள் விளக்கித் தரும்போது, இது நினைவுக்குள் இருந்து முதன்முதலாக வெளிப்பட்ட ஒன்றென்பதாகக் கூறுகின்றனர்.

யாருடைய நினவுக்குள் இருந்து ?

ஆம் . நினைவு என்பது பரம்பொருளாகிய இறைவனுக்குள் இருந்து முதன்முதலில் வெளிப்பட்டபோது ,அந்த நினைவுக்குள்ளிருந்து (இறைத்தனத்திலிருந்து ) " நான் என்பது முதன் முதலில் தோன்றியது. அந்த நான் என்பதுதான் ஆன்மாவாகும் " என்பதாக கூறுகின்றனர். உதாரணமாக,

கடலில் உள்ள நீருக்கும் அக்கடலில் மூழ்கிய ஒரு சிறு குடத்தினுள் உள்ள நீருக்கும் இடையே என்ன வேறுபாடோ அதுதான் பரமாத்மாவுக்கும், ஜீவாத்மாவுக்கும் இடையேயான வேறுபாடு.

உண்மையில் குடத்தின் உள்ளே உள்ள நீருக்கும் வெளியிலுள்ள நீருக்கும் எந்த வேறுபாடும் கிடையாது, ஆனால் அந்தக் குடத்தினாலேயே உள்ளே உள்ள நீருக்கு ஒரு தனி அடையாளம் கிடைக்கிறது.

'நான்', 'எனது' - என்ற மமதையே அந்தக் குடம். உண்மையில் கொஞ்சம் ஆராய்ந்து பார்த்தோமானால் 'நான்', 'எனது' என்பது போன்ற எண்ணங்கள் வெறும் மாயையே என்பது புலப்படும்.

அந்தக் குடம் உடைந்தால் அந்தப் பொய்யான வேறுபாடு அகல்கிறது. அது போல் 'நான்', 'எனது' என்பது போன்ற எண்ணங்கள் மாயை என உணர்ந்த ஜீவாத்மா, மமதையால் ஆட்கொள்ளப்படாத ஜீவாத்மாவே பரமாத்மாவால் ஆசீர்வதிக்கப்படுகிறது என்பதாக இறை ஞானிகள் கூறுகின்றனர்.

"ஆனால் எவன் அதை(ப் பாவத்தில்) புகுத்தினானோ அவன் திட்டமாகத் தோல்வி அடைந்தான்" (குர்ஆன் : 91:10)

அதாவது யார் தமது ஆன்மாவை இறைவனுக்குக் கீழ்படிவதன் மூலம் தூய்மைப்படுத்துவதுடன் , கீழ்த்தரமான குணங்களிலிருந்தும் இழிவான பண்புகளிலிருந்தும் அதைத் தூய்மைப்படுத்திக் கொள்கிறாரோ அவர் நிச்சயமாக வெற்றி பெற்றுவிட்டார்.

قَدْ اَفْلَحَ مَنْ تَزَكّٰىۙ

தூய்மையடைந்தவன், திட்டமாக வெற்றி பெறுகிறான்.(குர்ஆன் : 87:14)

وَذَكَرَ اسْمَ رَبِّهٖ فَصَلّٰى

மேலும், அவன் தன் இறைவனுடைய நாமத்தைத் துதித்துக் கொண்டும், தொழுது கொண்டும் இருப்பான். (குர்ஆன் : 87:15)

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 251**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துஷ் ஷம்ஸ் - சூரியன் 9) - பகுதி 2**

وَنَفْسٍ وَّمَا سَوّٰٮهَا ۙ

ஆத்மாவின் மீதும், அதை ஒழுங்குபடுத்தியவன் மீதும் சத்தியமாக-

(குர்ஆன் : 91:7)

சூரா யாஸீனில்,

فَالْيَوْمَ لَا تُظْلَمُ نَفْسٌ شَيْـًٔا وَّلَا تُجْزَوْنَ اِلَّا مَا كُنْتُمْ تَعْمَلُوْنَ

"அன்றியும், அந்நாளில் எந்த ஓர் ஆத்மாவுக்கும் ஏதும் அநியாயம் செய்யப்பட மாட்டாது; இன்னும், நீங்கள் செய்தவற்றிற்கேயன்றி (வேறு எதற்கும்) கூலி கொடுக்கப்பட மாட்டீர்கள்" (குர்ஆன் : 36:54)

நபி (ஸல்) அவர்கள் மிஹ்ராஜ் என்னும் விண்வெளி பயணத்தின் போது, இரத்தம்,தசை,எலும்புகளாலான மனித உடல், அந்த உடலுக்கு உயிரூட்டும் இதயமானது மாபெரும் தொலை தூர பயணத்தில் சுருங்கி மாற்றமடைய நேரிடும்,

ஆகவே அந்த பயணத்தை தாங்கக்கூடிய சக்தியை இதயத்திற்கு கொடுப்பதற்காகத்தான் நபி (ஸல்) அவர்களின் இதயம் பிளக்கப்பட்டு அதில் நுண்ணறிவாலும் (High Intelligence Technology) இறை நம்பிக்கையாலும் (Devine Inspirations) நிரப்பப்பட்டு தயார் செய்யப்பட்டது என்பதை (முஸ்லிம் 260) -ல் ஹதீஸின் மூலம் அறிய முடிகிறது.

நுண்ணறிவு,என்கிற காரணி மனித மூளைக்குரிய விஷயமாக விளங்கியுள்ளோம். அதெப்படி இதயத்திற்குள் அதனை நிரப்ப முடியும் ? என்பதாக என்னிடம் கேட்கப்பட்டது. இதயம் (கல்ப் ), ஆன்மா (ரூஹ்) வைப் பற்றி தெரிந்து கொள்வோமே.

உடலை விட்டு வெளியேறும் ஆத்மாவைப் பற்றி விஞ்ஞானம் கூறுவதை சற்று உற்று நோக்கினால் இதற்குரிய விடை கிடைக்கலாம்.

மரண விளிம்பு அனுபவங்கள் மூலம் அல்லாமலேயே சிலர் உடலை விட்டு வெளியே சென்று காணக் கூடிய சக்தி பெற்றிருந்தார்கள். அவை Out of body experiences (OBE) என்ற பெயரில் பல்வேறு நாடுகளில் ஆராயப்பட்டு இன்றும் வருகின்றன.

முதலில் 1960 களில் டாக்டர் சார்லஸ் டார்ட் (Dr. Chares Tart) என்பவர் இது குறித்து நம்பத்தகுந்த ஆராய்ச்சிகள் செய்து சிலருக்கு அந்த சக்தி உள்ளது என்பதை ஒப்புக் கொண்டிருக்கிறார்.

இது போன்ற சக்திகள் இன்றைக்கு நம்மைத் திகைக்க வைத்தாலும் பல பழம்பெரும் கலாச்சாரங்களில் இவை பரிபூரணமாக நம்பப்பட்டன.

டீன் ஷீல்ஸ் (Dean Sheils) என்ற தொல்பொருள் ஆராய்ச்சியாளர் 60 பழம் கலாச்சாரங்களை ஆராய்ந்து அறுபதில் மூன்று கலாச்சாரங்களில் மட்டும் உடலை விட்டு வெளியே செல்லும் அனுபவங்கள் பற்றிய நம்பிக்கைகள் இருக்கவில்லை என்றும் மற்ற 57 கலாச்சாரங்களில் அதீத நம்பிக்கையிலிருந்து ஓரளவு நம்பிக்கை வரை இருந்திருக்கிறது என்று சொல்கிறார்.

சென்ற நூற்றாண்டில் இந்த மரண விளிம்பு அனுபவமல்லாத உடலை விட்டு வெளியேறும் அனுபவங்களை ஆராய்ந்ததில் சில சக்தி படைத்தவர்களிடம் மட்டும் இந்த ஆராய்ச்சிகள் சந்தேகத்திற்கு இடமில்லாமல் நிரூபணம் ஆகி உள்ளது.

மற்ற பெரும்பாலான ஆராய்ச்சிகள் அந்த அனுபவங்களை அடைந்தவர்களாக தாங்களாக சொல்லிக் கொண்ட ஆட்களைத் திரட்டி நடத்தப்பட்டன. அப்படி சொல்லிக் கொண்டு வந்தவர்களில் பெரும்பாலானோர் தாங்களாக கற்பனை செய்து கொண்டும், அந்த கற்பனையையே உறுதியாக நிஜம் என்று நம்பிக்கொண்டும் வந்தவர்கள் என்பது ஆராய்ச்சிகளில் தெரிந்தது.

பலரை ஒரு அறையில் உள்ளே இருத்தி சற்று தொலைவில் வேறு அறையில் சில பொருள்களை வைத்து அல்லது சில எண்களை கரும்பலகையில் எழுதி வைத்து அதை கண்டுபிடித்துச் சொல்லச் சொன்னார்கள். பெரும்பாலானோர் யூகத்தின் பேரில் சம்பந்தம் இல்லாத பதில்களையே சொன்னார்கள் என்று ஆராய்ச்சிகள் சொல்கின்றன.

உண்மையாக உடலை விட்டு வெளியே சென்றதாக நம்பப்பட்ட மனிதர்களின் அனுபவங்களைக் கேட்ட போது பலரும் மூன்று விஷயங்களை ஒருமித்து சொன்னார்கள். உடலை விட்டு வெளியேறிய பின்பும் ஏதோ ஒரு அபூர்வ சக்தியையும், சில அதிர்வலைகளயும் தாங்கள் உணர்ந்ததாகச் சொன்னார்கள். விசித்திரமான பலத்த சத்தங்களைக் கேட்டதாகச் சொன்னார்கள். தங்கள் உடல்களையும் மற்றவர்களையும் தெளிவாகக் காண முடிந்ததாகச் சொன்னார்கள்.

ஆதாரபூர்வமான மரண விளிம்பு அனுபவ ஆராய்ச்சிகளின் மூலம் உடலை விட்டு வெளியேறியவுடன் மனிதனால் கண்களின் உதவியில்லாமலேயே காண முடிகிறது, காதுகளின் உதவியில்லாமலேயே கேட்க முடிகிறது, மொழியின் உதவியில்லாமலேயே பேச முடிகிறது என்பதை தெளிவாக நாம் அறிந்தோம்.

அந்த ஆராய்ச்சிகளில் பங்கு கொண்ட மனிதர்கள் மகான்கள் அல்ல, அபூர்வ சக்தியாளர்கள் அல்ல, வாழ்ந்த காலத்தில் ஆழ்மன சக்திகளில் நாட்டம் கொண்டவர்களும் அல்ல. நாம் நம் வாழ்க்கையில் அடிக்கடி சந்திக்க முடிந்த சாதாரண மனிதர்கள். ஆனாலும் அவர்களால் கூட உடலை விட்டுப் பிரிந்த பின்னர், காண, கேட்க, பேச, புரிந்து கொள்ள முடிகிறது என்பது தான் நாம் கவனிக்க வேண்டிய முக்கிய செய்தி.

ஆழ்மன சக்திகள் மனிதனுக்கு இயல்பானவை. மேல்மட்ட மன நிலையிலேயே மேற்போக்காய் வாழ்ந்து பழகிய மனிதன் ஆழத்தில் புதைந்து இருக்கும் தன் இயல்பான சக்திகளை அறியாமலேயே வாழ்கின்றான். ஐம்புலன்கள் வழியாகவே எதையும் அறிந்து பழகி விட்ட அவனுக்கு பயன்படுத்தாமல் இருக்கின்ற ஆழ்மன சக்திகள் மேல்மட்ட மனநிலைக்கு அற்புதங்களாகவே தெரிகின்றன.

ஆழ்மன சக்தியைப் பயன்படுத்தி நோய்களைக் குணமாக்க முடியும், தூரத்தில் இருப்பவர்களுக்கு செய்தியை அனுப்பவும் பெறவும் முடியும், தொடாமலேயே பொருள்களைப் பாதிக்க முடியும், உடல் மீது முழுக் கட்டுப்பாடு வைத்துக் கொள்ள முடியும், மற்றவர்கள் எண்ணங்களில் ஆதிக்கம் செலுத்த முடியும், கடந்த கால, நிகழ் கால, எதிர் கால நிகழ்ச்சிகளை அறிய முடியும், உடலை விட்டு வெளியேறி சஞ்சரிக்க முடியும்.

ஆழ்மன சக்தியை அடையத் தடையாக இருப்பவை அவநம்பிக்கையும், அவசரமும், அமைதியின்மையும். அவற்றை விலக்கினால் ஒழிய ஆழ்மன சக்திகள் சாத்தியப்படுவது கஷ்டம்.

ஆழ்மன சக்திகள் கைகூடுவது மேல்மன சலசலப்புகள் குறைந்து ஆழ்மன எல்லைக்குள் நுழையும் போது தான். கிட்டத்தட்ட எல்லா ஆழமன சாதனையாளர்களும் அப்படிச் சென்றே அற்புத சக்திகளைக் காட்டி இருக்கிறார்கள்.

மேல் மனதின் பரபரப்பும், சலசலப்பும் குறைந்து ஆழ்மன எல்லைக்குச் செல்ல தியானம் மிகவும் உதவுகிறது. தியானத்தில் மனதை லயிக்கச் செய்து பழக்குவது ஆழ்மன சக்தியை உணரவும், பயன்படுத்தவும் மிக முக்கிய பயிற்சியாகும்.

தியானத்தின் மூலம் ஆல்ஃபா, பீட்டா அலைகள் கொண்ட அமைதியான மனநிலைக்குச் சென்றால் எல்லா உண்மைகளை உணரவும் முடியும், சக்திகளைப் பெறவும் முடியும் என்கிறது விஞ்ஞானம்

வெளியேறும் ஆன்மாவிற்கு விளங்கிக் கொள்ளும் மூளையின் செயல்பாடுகள் எங்கிருந்து வந்ததோ அங்கேதான் நுண்ணறிவும் (High Intelligence Technology) இறை நம்பிக்கையும் (Devine Inspirations) நிரப்பப்பட்டது.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 252**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துஷ் ஷம்ஸ் - சூரியன் 10)**

فَاَلْهَمَهَا فُجُوْرَهَا وَتَقْوٰىهَا ۙ

அப்பால், அவன் (அல்லாஹ்) அதற்கு அதன் தீமையையும், அதன் நன்மையையும் உணர்த்தினான். (குர்ஆன் : 91:8)

قَدْ اَفْلَحَ مَنْ زَكّٰىهَا ۙ

அதை (ஆத்மாவை)ப் பரிசுத்தமாக்கியவர் திடமாக வெற்றியடைந்தார்.

(குர்ஆன் : 91:9)

وَقَدْ خَابَ مَنْ دَسّٰىهَا

ஆனால் எவன் அதை(ப் பாவத்தில்) புகுத்தினானோ அவன் திட்டமாகத் தோல்வி அடைந்தான். (குர்ஆன் : 91:10)

அப்துர் ரஹ்மான் பின் ஸைத் (ரஹ்) அவர்கள், "அல்லாஹ் அந்த ஆன்மாவுக்குள் அதன் தீமையும், அதன் இறை அச்சத்தையும் அறிவித்தான் என்றும் அமைத்தான் என்றும் மேற்கண்ட வசனத்திற்கு விளக்கம் கூறியுள்ளார்கள்

அல்லாஹுதஆலாவால் அல்லது மேலுலகிலிருந்து மனிதனது உள்ளத்தில் உதிப்பு ஒன்றை உண்டாக்குதல் இதுவே இல்ஹாம்.

இல்ஹாம் என்கிற உள்ளுணர்வு :-

இல்ஹாம் என்பது நல்ல காரியத்தைத் தவிர தீய காரியத்தில் ஏற்படாது அல்லாஹுதஆலா எனக்கு இன்னின்ன விதமாக தீய காரியத்தில் (இல்ஹாம்) உதிக்கச் செய்தான் என்று கூறலாகாது என்று பெரியோர்கள் கூறுகிறார்கள்.

எனவே, ஆன்மாவின் தீமையையும் நலனையும் அதற்கு அறிவித்தான் என்று இறைவன் இவ் வசனத்தில் கூறியுள்ளான். தீய காரியங்கள் இன்னின்னவை என்றும் அவற்றை செய்வது தகாது என்பதும் நன்மையான காரியங்கள் இன்னின்னவை என்றும் அவற்றைச் செய்ய வேண்டும் என்பதும் இவ்வாசனத்தின் கருத்து

நம் எல்லாருக்கும் எதிர்காலம் குறித்த ஓர் உள்ளுணர்வு இருக்கிறது. அது உள்ளே ஒரு குரலாக ஒலித்துக் கொண்டிருக்கிறது. ஆங்கிலத்தில் இன்னர் வாய்ஸ் (Inner voice) என்று அழைக்கப்படுகின்ற மனத்தின் குரலை, உள்ளுணர்வின் ஒலியைத் தெளிவாகக் அது நம்மை வழி நடத்துவதைக் காணலாம்.

சில நேரங்களில் நம்முடைய ஆழ்ந்த உள்ளுணர்வில் படிந்த படிமங்களையும், பிம்பங்களையும் நாம் உள்ளுணர்வின் குரலாகக் கருதிக் கொள்கிறோம்.

எந்தவிதமான வலிமையான பழைய பதிவுகளும் இல்லாமல், சலனமற்ற அலைகளற்ற கடலாக நாம் காத்திருந்தால், நம் உள்ளுணர்வு கூறும் மெல்லிய ஓசைகள் துல்லியமாக ஒலிக்கும்.

நாம் குழந்தைகளாக இருந்தபோது பெற்றோர்களிடமிருந்தும், மற்றோர்களிடமிருந்தும் நமக்குச் சொல்லப்பட்ட வரிகள் நம் மனத்தில் ஆழமாகப் பதிந்து விடுகின்றன. அவை நம்மைப் பல நேரங்களில் சுய சிந்தனையற்றுச் செய்து விடுகின்றன !

உள்ளே உள்ள குரலைக் கேட்க முடிந்தவர்கள் தூய்மையானவர்களாக இருக்கிறார்கள். சமூகத்தின் ஒழுக்க நெறிகளையும் மீறி அவர்கள் நேர்மை பட்டொளி வீசிப் பறக்கிறது.

அவர்கள் யாருக்காகவும் தங்களை மாற்றிக் கொள்ளாமல் தங்களுடைய உள்ளுணர்வுக்காகவே தங்களைப் பட்டை தீட்டிக் கொள்கிறார்கள்.

உள்ளே உள்ள குரல் முன்கூட்டியே சில நிகழ்வுகளை நமக்குத் தெரியப்படுத்தும். நாம் உஷாராகி விடலாம். கடைசி நேரத்தில் சில செயல்களை நாம் மாற்றியமைப்போம். திடீரென்று பயணம் போகவேண்டாம் என்று தோன்றும்.

பின்னர் வீட்டில் இருந்தது நல்லது என்று தெரியும். கடைசி நிமிடத்தில் ஒரு நிறுவனத்தில் பணம் போட வேண்டாம் என முடிவு செய்வோம். அது மோசடி நிறுவனம் எனத் தெரிய வரும் 'நல்லவேளை! ஏமாறவில்லை' என்று திருப்திப்படுவோம்.

இஸ்லாம் உள்ளுணர்வை, இல்ஹாம் - உள்மனத்தூண்டல் என்கிறது.

"இல்ஹாம் உள்ள ஒருவன் அறிவை வைத்துக் கொண்டு செயல்பட்டால் (அது தொடர்பான) புரியாத அறிவுகளையும் அல்லாஹ் சொல்லிக்கொடுப்பான். இது நபிகளாரின் வாக்கு.

ஒருவன் எதைப்பற்றி சிந்திக்கிறானோ, அந்த சிந்தனை அடிமனத்தில் இறங்கி அவனுக்குத் தேவையான செய்தியை தேடிக்கொண்டிருக்கும். எப்போது accurate thought ஏற்படுகிறதோ அப்போது divine force அங்கு கலக்கும்,

அப்படி கலந்த பிறகு எதற்கான விடையைத் தேடிக் கொண்டிருக்கிறானோ அந்த விடை அவன் உள்ளத்திலிருந்து வெளிவரும். இதற்கு “இல்ஹாம்” – இறை உதிப்பு என்று பெயர்.

மேலும் அவன் எந்த மொழியில் சிந்திக்கிறானோ அந்த மொழியிலேயே வரும், மாறுபட்ட மொழியில் வராது. எதைப் பற்றி சிந்திக்கிறானோ அதைப் பற்றிய செய்தி வரும். அதற்கு மாறுபட்ட வேறொன்று வராது என்கிறார்கள் தத்துவவாதிகள்.

ஆனால் சூஃபி ஞானிகளோ, " அகவிழிப்பு ‘கஷ்ஃப்’ என்றும், உள்ளுணர்வு ‘இல்ஹாம்’ என்றும் சொல்லப்படும் விஷயங்களுக்கான பயிற்சிகளையே சூஃபித்துவம் வழங்குகின்றது " என்கிறார்கள்

சிந்தனைப் பயிற்சி என்பது அதில் முக்கியத்துவம் உடையது அல்ல. ஏனெனில் உள்ளுணர்வின் அனுபவத்தால் அடையப்படும் மெய்ஞ்ஞானத்தை நீங்கள் ஒருபோதும் சிந்தனை செய்வதால் அடைய முடியாது.

எவ்வளவு சிந்திக்கிறீர்கள் என்பது ஒரு பொருட்டே அல்ல. முராக்கபா என்னும் தியானமும், முஷாஹதா என்னும் அகவிழிப்புமே மோட்சத்திற்குரிய ஆதாரங்களாகும்.

நபிமார்கள்கள் " வஹீ " மூலம் இறைவனிடமிருந்து ஆன்மீக அறிவைப் பெற்றனரோ அதைப்போன்று வலிமார்களாகிய இவர்களும்" இல்ஹாம்" என்னும் மன உதிப்பு மூலம் இறைவனிடம் இருந்து ஆன்மீக அறிவைப் பெற்றனர்

பாயஸீத் பிஸ்தாமீ (ரஹ்) அவர்களும் "நீங்களெல்லாம் இறக்கக் கூடிய மனிதர்களிடமிருந்து அறிவைப் பெறுகின்றீர்கள் நாங்களோ பிறப்பு இறப்பு இல்லாத இறைவனிடம் இருந்து அறிவை (இல்ஹாமை)ப் பெறுகின்றோம் " என்று கூறுகிறார்கள்.

சுஃப்யான் தௌரீ ( கிபி 715 - 778) வாழ்ந்த மாபெரும் சூஃபி மஹான்.

தௌரீ என்பது இட்ட பெயரல்ல , திட்டிய பெயர் . ஆமாம், ஒருநாள் பள்ளிவாசலுக்குள் மறதியாக இவர் இடது காலை முன் வைத்து உள்ளே போக, " மாடே ( யா..தௌரீ ) என்று ஒரு அசரீரி கேட்டது.

உடனே சுஃப்யான் மயங்கி கீழே விழுந்து விட்டார் .பின் எழுந்த இவர் தன்னைத் தானே, "தௌரீ ...தௌரீ ...(ஓ.. மாடே ., .மாடே ) என்ன காரியம் செய்து விட்டாய் !"என்று தன்னைத் தானே கடிந்து கொண்டார். அன்றிலிருந்து இவருக்கு "தௌரீ " என்ற பெயர் புகழ்பட ஆயிற்று. அந்த சூஃபி ஞானியும் ' மாடு' என்று தன்னைச் சொல்லிக் கொள்வதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறார்கள்.

இப்படித்தான் சூஃபியாக்கள் தங்களின் நடவடிக்கைகள் அனைத்தையுமே அகவிழிப்பு- ‘கஷ்ஃப்’ என்றும், உள்ளுணர்வு- ‘இல்ஹாம்’ என்றும் சொல்லப்படும் கட்டளைக்காகவே கட்டுண்டு காத்திருக்கிறார்கள். அதன்படி செய்கிறார்கள். ஜெயம் பெறுகிறார்கள்.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 253**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துஷ் ஷம்ஸ் - சூரியன் 11)**

كَذَّبَتْ ثَمُوْدُ بِطَغْوٰٮهَآ ۙ

“ஸமூது” (கூட்டத்தினர்) தங்கள் அக்கிரமத்தினால் (ஸாலிஹ் நபியைப்) பொய்ப்பித்தனர். (குர்ஆன் : 91:11)

اِذِ انْۢبَعَثَ اَشْقٰٮهَا ۙ

அவர்களில் கேடுகெட்ட ஒருவன் விரைந்து முன் வந்தபோது,

(குர்ஆன் : 91:12)

فَقَالَ لَهُمْ رَسُوْلُ اللّٰهِ نَاقَةَ اللّٰهِ وَسُقْيٰهَا

அல்லாஹ்வின் தூதர் (ஸாலிஹ்) அவர்களை நோக்கி: “இப் பெண் ஒட்டகம் அல்லாஹ்வுடையது; இது தண்ணீர் அருந்த(த் தடை செய்யாது) விட்டு விடுங்கள்” என்று கூறினார். (குர்ஆன் : 91:13)

فَكَذَّبُوْهُ فَعَقَرُوْهَا ۙ فَدَمْدَمَ عَلَيْهِمْ رَبُّهُمْ بِذَنْۢبِهِمْ فَسَوّٰٮهَا ۙ

ஆனால், அவர்கள் அவரைப் பொய்ப்பித்து, அதன் கால் நரம்பைத் தறித்து விட்டனர் - ஆகவே, அவர்களின் இந்தப் பாவத்தின் காரணமாக அவர்களுடைய இறைவன் அவர்கள் மீது வேதனையை இறக்கி, அவர்கள் யாவரையும் (அழித்துச்) சரியாக்கி விட்டான். (குர்ஆன் : 91:14)

وَلَا يَخَافُ عُقْبٰهَا

அதன் முடிவைப் பற்றி அவன் பயப்படவில்லை. (குர்ஆன் : 91:15)



ஹிஜ்ர் என்றால் பாறை குர்ஆனில் 15வது அத்தியாயம் ஹிஜ்ர் (கவனிக்கவும் மலைப்பாறை)

ஆரம்ப காலங்களில் இந்நகரை " செலா" என்றழைத்தனர் . செலா என்றால் பாறை நவீன காலத்தில் கிரேக்கர் இந்நகரை பெட்ரா (petra) என்றனர் பெட்ரா என்றாலும் பாறை . ஆக குர்ஆன் சொன்ன ஹிஜ்ர்யை மாற்றி மாற்றி பாறையின் பொருள்பட எல்லோரும் பெயரிட்டனர்.(கவனிக்கவும் பாறை)

இந்தகரை கி.மு 312 ல் ஹூது (அலை) சமூத்தவரான ஆது மக்கள் (எடோனாமட்ஸ் ) வடிவமைத்தனர்.பின் ஸாலிஹ் (அலை) சமூகத்தவர்களான ஸமூது மக்களால் (நபாட்டியன்கள்) கலை அம்சத்தோடு பொலிவு பெற்றது ஹிஜ்ர் நகர். இதையே குர்ஆன்

"ஆது மக்களுக்குப் பின்னர் அவர்களுடைய பூமியில் உங்களைச் குடியேறச் செய்து அதன் சமவெளியில் மாளிகைகளைக் கட்டியும் , மலைகளைக் குடைந்து வீடுகளை அமைத்துக் கொள்கின்றீர்கள் ." குர்ஆன் ( 7 : 74)

ஸமூது மக்கள் சுமார் 600 வருடங்கள் ஹிஜ்ர் யை ஆட்சி செய்து ,தங்கள் வாழ்க்கை முழுவதும் பாறையாலும், ஒட்டகைகளாலும் சூழப்பட்டது .

அயல் நாட்டு வணிகர்களிடம் நுழைவு வரி , வியாபார வரி (உலகில் வியாபார வரி முதன்முதலாக ) விதித்து அதன் மூலம் வருமானத்தை பெருக்கி உள்ளனர்

ஸமூது மக்களின் வாழ்க்கையை ஆய்வு செய்தால், பெண் , பாறை , ஒட்டகம் , பேரீச்சம் பழம் , நீர் (நீரின் சுவை அலாதியானது) கிரேக்க சரித்திர ஆய்வாளர்கள் தாஸ்டட்வரிஸ் , இஸ்ட்ராபூ போன்றவர்கள் பாறையின் சிறப்பங்களை வியந்தாலும்,மேற் சொல்லப்பட்ட இந்த ஐந்து விஷயங்களின் ஸமூதுகளின் வாழ்க்கை உயர்ந்தையும் , அதன் மூலமாகவே தாழ்ந்தையும் குறிப்பிடுகின்றனர் .

ஹிஜ்ரை சுற்றி பலமான மலைகள் தக்க பாதுகாப்போடு இயற்கையாகவே அமையப் பெற்றதால் , எதிரிகளைப் பற்றி பயப்படவே இல்லை.

அழகிய சிற்பங்களை செய்து அதனை வணங்கினர் தலைமை பூசாரி காபூக் பின் உபைது . அவரது கனவில் " ஸமூது மக்களின் அழிவு நெருங்கி விட்டது காபூக்கின் மகனார் ஸாலிஹ்யால் மக்கள் நேர்வழி பெறுவர் "என்பதை அவர் கனவாக கண்டார் .

விடியலில் கோயிலுக்குப் போனார் சிலைகள் யாவும் தலைக்குப்புற வீழ்ந்து கிடக்க பூசாரி தூய்மையற்ற செயலை கோவிலுக்குள் செய்திருப்பார் எனவே அவருக்கு மரண தண்டனையை மன்னர் வழங்க ,

காபூக் இறைவனை வேண்ட , ஒரு மலைப் பாறையினுள் யாருக்கும் தெரியாமல் 40 வருடம் மறைத்தான் , (கவனிக்கவும் மலைப் பாறை) பின் வெளியே வரும் போது அந்த மன்னர் போய் வேறு மன்னர் இருந்தார் . பின் ஸாலிஹ் நபியைப் பெற்றார் .

ஏகத்துவ கொள்கையை மக்களிடம் நபி ஸாலிஹ் (அலை) எடுத்துரைக்க இவருக்கும் மரண தண்டனை , இறைவன் இவர்களையும் ஒரு மலைப்பாறையில் 40 வருடம் உறங்க வைத்தான் (கவனிக்கவும் மலைப்பாறை) .

மீண்டும் பிரச்சாரத்தை தொடங்க , மன்னன் ஜுன்தாஹ் ," ஸாலிஹே ! அதோ உயர்ந்த அல்காத்திபா மலைப்பாறையில் இருந்து (கவனிக்கவும் மலை பாறை) சூல் கொண்ட நிறைமாத ஒட்டகம் வெளிவர வேண்டும். வந்ததும் கன்றை ஈன வேண்டும் .அப்படி நீர் செய்தால் சொல்வதை கேட்போம் .

"அதெப்படி உயிரற்ற மலைப் பாறை உயிருள்ள ஒட்டகத்தை எப்படி ஈனும் ? சரி, வெளிவந்த ஒட்டகம் ஆண் துணை இல்லாமல் எப்படி கன்றை ஈனும் ? ஸாலிஹ் அதிர்ச்சியுற்றார்கள் .

இறைவன், "ஸாலிஹே ! 4000 வருடங்களுக்கு முன்பே அப்படி ஒரு ஒட்டகத்தை அந்த அல்காத்திபா மலைப்பாறையில் மறைத்து வைத்துள்ளேன் " என்று கூற, மலைப்பாறை முணுமுணுக்க , பாறை பிளந்து ஒட்டகம் ஓடோடி வந்து இவர்களின் கண் முன்னே கன்றையும் ஈன்றது. (கவனிக்கவும் மலைப்பாறை)

இறைவனின் ஒட்டகத்தின் மேய்ச்சல் இடத்தையும்,கிணற்று தண்ணீர் பங்கீட்டுப் பற்றியும் முறை செய்யப்பட்டது இது பற்றி குர்ஆன் (54 : 28 ) வர்ணிக்கிறது .

இறைவனின் ஒட்டகத்தை கொல்லக் கூடியவன் இம்மாதம் பிறப்பதாக ஸாலிஹ் நபிக்கு வஹி வந்தது . உடனே ஸமூது மக்களிடம் கூற , இம்மாதம் பிறந்த 9 ஆண் மக்களை ஸமூது கொன்றனர் 10 வது பிறந்த " குதார்" (இவன் விபச்சாரத்தில் பிறந்தவன் ) என்பவனின் தகப்பனார் ஸாலூஃப் ஸமூதுகளின் தலைவர் எனவே அவனை கொல்லவில்லை . பிரச்சனை ஆரம்பம்

குதார் எந்த பிரச்சனை இல்லாமல் நன்கு வளர்ந்தான் . இப்படிதானே தம் மகன்களும் வளர்ந்திருப்பார்கள் என்று 9 பெற்றோர்கள் குமுற நபி ஸாலிஹை கொல்வதற்கு மலைப்பாறையில் மறைந்திருக்க (கவனிக்க மலைப்பாறை) அந்த மலைப்பாறை இடிந்து 9 பேர்களும் மாண்டனர் .

ஸாலிஹ் நபி குனியக்காரர் எனவேதான் ஸமூது 9 பேர்கள் இறந்தனர் மேலும் இவர் சூனியத்தால் மலைப்பாறையில் இருந்தது வெளிவந்த ஒட்டகமும் சூனியம் தான் எனவே அதனையும் அதன் கன்றையும் கொல்ல முடிவு எடுத்தனர் .

"உனைஷா " என்ற பெரும் பணக்காரி யின் ஒட்டகங்களுக்கு மேய்ச்சல் கிடைக்காமல் ஸாலிஹ் ஒட்டகம் இருந்ததால் , அந்த ஒட்டகத்தை கொல்ல வாலிபனாக இருந்த குதாருக்கு தன் இரு மகள்களில் ஒருத்தியை தாரை வார்த்தாள்.

"ஸ்தூப் " என்ற பேரழகி தன் கணவரை ஸாலிஹ் நபி தன் மதத்திலிருந்து பிரித்து அவர் ஏகத்துவத்தை ஏற்றுக் கொள்ள செய்ததால், ஸாலிஹ் நபியை கொல்வதற்கு , பெரும் செல்வத்தையும் அதற்கு முன் பெண்சுகமாக தன்னையும் தருவதாக "மஸ்தஹ் " என்பவனை அவள் ஏற்பாடு செய்து , தன்னை அவனுக்கு விருந்தாக்கினாள் .

ரபியுல் ஆகிர் 16 ஆம் நாள் புதன்கிழமை உலக வரலாற்றில் துர்க்குறியான நாள். குதாரும் , மஸ்தஹும் மேலும் ஸமூதுகளில் கீழ்த்தரமான 7 பேர்களையும் சேர்த்துக் கொண்டு மது அருந்தி விட்டு , ஒட்டகம்

நீரருந்தி விட்டு திரும்பும் வழியில் காத்திருந்தனர் ஆக இந்த ஒன்பது பேரை குர்ஆன் (27 : 48 ) விவரிக்கிறது ,

குதார் ஒரு மலைப் பாறையின் அடியிலும் மஸ்தஹ் அதற்கு எதிர்பாறையின் அடியிலும் மறைந்திருந்தனர் (கவனிக்கவும் மலைப்பாறை)

மஸ்தஹ் வின் அருகில் ஒட்டகம் வந்ததும் அவன் அம்பு எய்தான் அது ஒட்டகத்தின் கால் தசையிதுள்ள நரம்பை துண்டித்தது .

உடனே உனைஷா தன் மகள்களுக்கு கட்டளைப் பிறப்பிக்க அந்த கும்பல்களுக்கு தங்களது முகத்தை திறந்து காட்டினார்கள் . எப்பா..என்ன அழகு !

உடனே குதார் தனது வாளால் ஒட்டகத்தின் பின்னங் காலை பலமாக தாக்கினான் . தாய் ஒட்டகம் மிகப் பெரிய மூன்று பேரொலியை எழுப்பி தரையில் சாய்ந்தது அதன் கன்று அதே அல்காத்திபா மலைப் பாறையினுள் சென்று மறைந்தது (கவனிக்கவும் மலைப்பாறை). இந்த ஒட்டகக் கன்று தான் கியாமத் நாளின் போது வெளியாகும் அதுதான் "தாப்பத்துல் அர்ளு " என்று சொல்லப்படுகிறது .

பின் அந்த ஒன்பது பேர் கும்பல் நபியவர்களை கொல்ல திட்டம் தீட்டி குர்ஆன் (27 : 49,50 ) மலைப்பாறையினுள் பதுங்கினார்கள் அந்த மலைப்பாறையும் சரிந்து (கவனிக்கவும் மலைப்பாறை ) அவர்களுடைய சமூகத்தினர் அழிவதற்கு முன்பே இந்த 9 பேர்களும் மாண்டனர்,

ஒட்டகம் 3 பேரொளியை எழுப்பியதால் 3 நாட்கள் கெடு ஆரம்பமானது ஸமூது மக்கள் மரணத்திலிருந்து தப்பிக்க மலைப் பாறையின் அடியில் சுரங்கம் தோண்டி (கவனிக்கவும் மலைப்பாறை) காதில் பஞ்சை வைத்து அடைத்துக் கொண்டு பதுங்கி இருந்தனர் நான்காம் காலை பொழுது புலர்ந்தது ஒரே ஒரு இடி சப்தம்தான் .

"அவர்கள் செய்து கொண்டிருந்த அநியாயங்களின் காரணமாக அழிந்து போன அவர்களுடைய வீடுகள் இதோ பாழடைந்து கிடக்கின்றன. அறியக்கூடிய மக்களுக்கு நிச்சயமாக இதில் ஒரு நல்ல படிப்பினை இருக்கிறது " குர்ஆன் (27 : 52)

ஸமூத் மக்களைப் பற்றி குர்ஆனின் 15 வது அத்தியாயத்தில் குறிப்பிடுகிறது பெயர் " அல் ஹிஜ்ர் " ஹிஜ்ர் என்றால் மலைப்பாறை (கவனிக்கவும் மலைப்பாறை)

படம் :- பாறைக்கு நடுவில் பிளந்து கொண்டு எல்லா மக்களும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே சினையுற்ற வெள்ளை ஒட்டகம் வெளியே வந்தது. வெளியே வந்ததும் அது குட்டி போட்டது.

குறிப்பு : - விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துஷ் ஷம்ஸ் - சூரியன் நிறைவு பெறுகிறது

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 254**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துல் லைல் - இரவு 1 ( பகுதி -1)**

وَالَّيْلِ اِذَا يَغْشٰىۙ

(இருளால்) தன்னை மூடிக்கொள்ளும் இரவின் மீது சத்தியமாக- (குர்ஆன் : 92:1)

இரவின் மீது இறைவனின் சத்தியம் பாக்கியமானது. நம் சூரிய மண்டலத்தில் பூமியைப் போன்றுள்ள மற்ற கோள்களில் ஒரு நாளில் பாதி ' இரவு ' என்று கணக்கிட்டால், அவை மிகவும் விநோதமாக இருக்கின்றன. இறைவன் இரவின் மீது சத்தியம் செய்திருப்பதன் அவசியம் நமக்கு புரியவரும்

இறைவன் குர்ஆனில் சத்தியம் செய்யும் 92 சொற்களில் இரவும் ஒன்றாகும். இறைவனே சத்தியம் என்று ஆணையிட்டுக் கூறுவதென்றால் அதன் மதிப்பைப் பார்த்துக் கொள்ளுங்கள்.

பூமி தன்னைத்தானே சுற்றிவர 23 மணி 56 நிமிடங்கள் 4 வினாடிகள் எடுத்துக்கொள்கிறது. பூமியின் சுற்றளவில் 15 டிகிரி நகரும் போது ஒரு மணி நேரமாகும். இதில் பூமி 12 மணி நேரம் சூரியனை நோக்கி இருக்கும் பகுதி பகல். மற்ற பகுதி ஒளியின்மையால் 12 மணி நேரம் இரவு.

12 மணி நேரம் பகல், 12 மணி நேரம் இரவை சேர்த்து ஒரு நாள். நமது அன்றாட வாழ்க்கை முறைக்காக மாலை 6 மணி முதல் மறுநாள் காலை 6 மணி வரை இரவு என்றும். காலை 6 மணி முதல் மாலை 6 மணி வரை பகல் என்றும் வாழ்கிறோம்.

இந்த நாள் கணக்கு என்பது ஒவ்வொரு கோளின் விட்டம், நிறை, அது தன்னைத்தானே சுற்றிவர எடுத்துக்கொள்ளும் நேரம், வேகம், சூரியனிடமிருந்து இருக்கும் தூரம் பொருத்து மாறுபடும்.

விஞ்ஞானிகள் இந்த பிரபஞ்சத்தில் உள்ள மற்ற கிரகங்கள் மற்றும் வானியல் பொருட்களின் நாட்களை அளவிடும் போது அதன் கால அளவை எப்படி குறிப்பது என்ற குழப்பம் ஏற்பட்ட போது, அதை பொதுவாக பூமியின் நாளை வைத்து குறிக்கும் தரநிலை பயன்படுத்தப்படுகிறது .

சந்திரன் 29.5 நாட்களுக்கு ஒருமுறை அதன் அச்சில் சுழல்கிறது.

புதன் கிரகம் அதன் அச்சில் ஒரு முறை சுற்ற 58.6 பூமி நாட்கள் எடுத்துக் கொள்கிறது. இது நீண்டதாகத் தோன்றலாம், ஆனால் அந்த கிரகத்தின் 1 வருடம் , அதாவது சூரியனை முழுதாக சுற்றி வர 88 பூமி நாட்கள் மட்டுமே ஆகும்.அது சூரியனைச் சுற்றி வரும் ஒவ்வொரு இரண்டு முறையும் அதன் அச்சில் மூன்று முறை சுழலும்.

வெள்ளி கிரகம் அதன் அச்சில் மிகவும் மெதுவாக சுழல்கிறது, கிரகத்தில் ஒரு நாள் கிட்டத்தட்ட 243 பூமி நாட்கள் நீடிக்கும். ஆனால் கிரகத்தின் ஒரு ஆண்டு 225 நாட்கள் மட்டுமே . எனவே, நாள் உண்மையில் ஒரு வருடத்தை விட நீண்டது. அதே போல இங்கு மேற்கில் சூரியன் உதித்து கிழக்கில் மறையும்.

செவ்வாய் கிரகத்தின் நாளின் நீளம் பூமியுடன் மிகவும் ஒத்திருக்கிறது, அதாவது 24 மணி 37 நிமிடங்கள், 22 வினாடிகள். பூமிக்கு இரட்டையர் என்று கருதப்படுவதற்கான காரணங்களில் இதுவும் ஒன்றாகும். சூரியனிலிருந்து பூமியை விட தொலைவில் இருப்பதால், அதன் ஆண்டு பூமியின் 687 பூமி நாட்களை கொண்டுள்ளது.

ராட்சத வாயு நிறைந்த வியாழன் போன்ற கோள்களின் "நாள் நீளத்தை" தீர்மானிப்பது மிகவும் கடினமான விஷயம். வியாழனின் நாள் நீளம் அதன் காந்தப்புலத்தின் சுழற்சி விகிதத்தால் தீர்மானிக்கப்படுகிறது, இது ஒன்பது மணிநேரம், 55 நிமிடங்களில் ஒரு சுழற்சியை முடிக்கிறது.

காசினி விண்கலம் மூலம் வாயு ராட்சத சனியின் பல்வேறு பகுதிகளை (அதன் மேக அடுக்குகள் மற்றும் காந்தப்புலம் உட்பட) அளவீடுகளின் அடிப்படையில் , கிரக விஞ்ஞானிகள் சனியின் நாளின் அதிகாரப்பூர்வ நீளம் பத்து மணி நேரம் 33 நிமிடங்கள் என்று தீர்மானித்தனர்.

யுரேனஸ் மற்ற கோள்களை போல கொஞ்சம் சாய்ந்து இல்லாமல் மொத்தமாக பக்கவாட்டில் படுத்து சூரியனை சுற்றி உருளுகிறது. 17 மணி 14 நிமிடங்களுக்கு ஒருமுறை அதன் அச்சில் சுற்றுகிறது. நாளின் நீளம் மற்றும் யுரேனிய ஆண்டின் நீளம் மற்றும் விசித்திரமான அச்சு சாய்வு அனைத்தும் இணைந்து இந்த கிரகத்தில் ஒரு பருவம் போன்ற ஒரு நாளை உருவாக்குகின்றன.

வாயு ராட்சத கிரகமான நெப்டியூன் ஒரு நாள் நீளம் தோராயமாக 15 மணி நேரம். இந்த வாயு ராட்சதத்தின் சுழற்சி விகிதத்தை கணக்கிட விஞ்ஞானிகளுக்கு பல ஆண்டுகள் தேவைப்பட்டன. கிரகத்தின் வளிமண்டலத்தில் சுழலும் அம்சங்கள் போன்ற படங்களைப் படிப்பதன் மூலம் அவர்கள் பணியை நிறைவேற்றினர்.

நம் பூமியின் இரவு மீது இறைவனின் சத்தியம் எவ்வளவு பாக்கியமானது என்பதை உங்களால் உணர முடிகிறதா ?

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 254**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துல் லைல் - இரவு 2 ( பகுதி -2)**

சூரத்துல் லைல் அத்தியாயத்தின் சாரம்சம் :-

பொருளை நல்வழியில் செலவு செய்து பக்தியுடன் இருந்து நற்கருமங்கள் செய்து வருகிறவனுக்கு சுசுமான வாழ்க்கை கொடுக்கப்படும். உலோபியாயிருந்து தன்னைத் தேவை அற்றவனாக கருதித் தற்பெருமை கொண்டு நல்வழியைப் பொய்ப்பிப்பவனுக்குக் கஷ்ட வாழ்க்கை கொடுக்கப்படும். அவன் வீழ்ச்சியடையும் போது அவனுடைய பொருள் அவனுக்கு உபயோகப்படாது.

அல்லாஹ்வுடைய பொருத்தத்தையே கருதி வேறு பிரதி உபகாரத்தைக் கருதாமல் தன் பொருளைக் கொடுப்பவன் சந்தோஷமடைவான்.

இவ் அத்தியாயம் இறக்கியருளப்பட்ட காரணச் சுருக்கம் :-

திருமக்காவில் இரு பெரிய செல்வந்தர்கள் இருந்தனர். ஒருவர் ஹள்ரத் அபூபக்கர் "ஸித்தீக்" (ரலி) அவர்கள், மற்றவர் உமய்யா பின் கலப் என்பவர். இவ்விருவரும் தங்களது பொருட்களைச் செலவு செய்யும் துறைகள் வெவ்வேறாக இருந்தன.

உமய்யா என்பவருக்குப் பல அடிமைகளிருந்தனர். சகல வகையான செல்வங்கள் அவரிடமிருந்தும், அல்லாஹ்வின் பாதையில் ஒரு காசுக் கூட அவர் செலவு செய்ததில்லை. ''மறுமையின் நற்பலனை உத்தேசித்து ஏதாவது நன்மைகளைச் செய்" என யாராவது அவரிடம் கூறினால்,...

'மறுஉலகு" என ஒன்றில்லையென்றும் அப்படி இருந்த போதிலும் அங்கு ஏதாவது கஷ்டங்கள் நேரிட்டால் இந்தச் செல்வத்தாலும், அடிமைகளாலும் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியுமென்றும், முஹம்மத் கூறும் சுவர்க்கம் பற்றி தனக்கு அக்கறையில்லை என்றும் அவர் ஏழை எளியோருக்கு அத்தகைய வீண் ஆசைகளைக் காட்டி தன்னைப் பின் தொடரச் செய்கிறார் என்றும் கூறிக் கொண்டிருப்பது அவர் வழக்கமாக இருந்தது.

உமய்யாவின் அடிமைகளில் ஹள்ரத் பிலால் (ரலி) அவர்களும் ஒருவராவார். ஹள்ரத் பிலால் (ரலி) இஸ்லாத்தைத் தழுவிய செய்தி உமைய்யாவின் செவிக்கு எட்டியபொழுது, பிலால் அவர்களிடம் அதை விட்டுவிடும்படி அவர் எவ்வளவு கூறியும் பிலால் (ரலி) அவர்கள் மறுத்து விட்டதால் பல வகையாலும் அவர்களைத் துன்புறுத்த ஆரம்பித்தார்.

அவர்களுடைய சரீரத்தில் முட்களாலும், ஊசிகளாலும் குத்தும்படிச் செய்தார். கடுமையான வெயில் நேரத்தில் சரீரத்தில் ஆடையில்லாமல் மணலில் ஹள்ரத் பிலால் (ரலி) அவர்களை முதுகுப் பக்கமாய்க் கிடத்தி அவர்கள் நெஞ்சின் மீது பாரமான கற்களை வைப்பார்.

ஒட்டகத் தோலினால் அவர்களின் சரீரத்தைப் பொதிந்து கட்டி அது கிழிந்து போகும் வரை அவர்களை அடிப்பார். இன்னும் பல வகையான இம்சைகள் செய்து வந்தார். இவ்வளவு கடுமையான துன்பங்களுக்குள்ளாக்கப்பட்டும் ஹன்ரத் பிலால் (ரலி) அவர்கள், "அஹத்" "அஹத்" (ஏகன் ஏகன்) என்ற வார்த்தையைத் தவிர்த்து வேறொன்றையும் தங்கள் நாவினால் மொழியவில்லை; இஸ்லாத்தை விடவுமில்லை. இத்தகைய கஷ்டங்களைக் கண்டு மனந்தளரவும் இல்லை.

ஒரு தினம் ஹள்ரத் அபூபக்கர் "ஸித்தீக்" (ரலி) அவர்கள் அவ்வழியே வரும்பொழுது ஹள்ரத் பிலால் (ரலி) அவர்கள் துன்புறுத்தப்படுவதைக் கண்டார்கள். இஸ்லாத்தைத் தழுவியதற்காக இத்துணைக் கஷ்டத்தை அனுபவிக்கும் ஹள்ரத் பிலால் (ரலி) அவர்கள் மீது ஹள்ரத் ஸித்தீக் (ரலி) அவர்களுக்கு இரக்கம் பிறந்தது.

அக்கணமே உமய்யாவிடம் சென்று, "அல்லாஹ்வுக்கு பயப்படு; நிராதரவான ஓர் ஏழையை ஏன் இத்துணைத் துன்பத்துக்குள்ளாக்குகிறாய்?" எனக் கேட்டார்கள்.

அதற்கு அவன், "அல்லாஹ்வுக்குப் பயந்து இஸ்லாத்தைப் பாதுகாக்கக் கூடியவராக நீர் இருப்பீராயின், அவ்வடிமையை நீரே விலை கொடுத்து வாங்கிக் கொள்ளலாமே!" என கர்வத்தோடு பதில் சொன்னார்.

"அப்படியே செய்கிறேன்" என வாக்களித்த ஹள்ரத் ஸித்தீக் (ரலி) அவர்கள், தமது 'ரூமி' அடிமையொருவரையும் அன்று வரை அவர்களிடம் சேர்ந்திருந்த இரண்டாயிரம் தீனாரையும் ஹள்ரத் பிலாலின் விலையாக உமய்யாவிடம் கொடுத்துவிட்டு ஹள்ரத் பிலால் (ரலி) அவர்களை அழைத்துக் கொண்டு நபி பெருமான் (ஸல்) அவர்கள் சமூகம் வந்து அவர்களை சுதந்திரப் புருஷராக ஆக்கிவிட்டார்கள்.

ஹள்ரத் ஸித்தீக் (ரலி) அவர்கள், பிலால் (ரலி) அவர்களைப் போன்று இஸ்லாத்தைத் தழுவிய அநேக ஆண், பெண் அடிமைகளுக்கு அவர்களது எஜமானர்களால் இழைக்கப்பட்டு வந்த துன்பங்களைக் கண்டு சகியாமல் அதிகமான செல்வங்களை விலையாகக் கொடுத்து வாங்கி விடுதலை செய்) ருக்கிறார்கள்.

அத்தகைய அடிமைகளில் "ஜின்னீரா" என்னும் பெண்மணியும் ஒருவர். இவ்வம்மையாரை "ஸித்தீக்" (ரலி) விலை கொடுத்து வாங்கி விடுதலை செய்த பின்பு அப்பெண்ணின் கண் பார்வை போய்விட்டது. இதனைக் கண்ணுற்ற எதிரிகள், ''எமது லாத் உஜ்ஜா என்ற தெய்வங்களின் மகிமையை இப்பொழுதாவது தெரிந்து கொண்டாயா? அவைகளுக்குத் துரோகம் செய்துவிட்டு, இஸ்லாத்தைத் தழுவியதால் கோபமுள்ள அத்தெய்வங்கள் உனது கண்களைக் குருடாக்கி விட்டன" என்று அப்பெண்ணிடம் கூறினர்.

அதற்கு அப்பெண்மணி, ''எனது இறைவன் ஒருவனேயாவான்; அவனே கண்பார்வையை இழக்கச் செய்கிறான்; அவனே கண் பார்வையையும் அளிக்கிறான்" என்று மிகவும் ஆக்ரோஷத்துடன் பதிலளித்தார்கள். என்னே அவர்களின் உறுதி! பின்னர் இவ்வம்மையாருக்கு அல்லாஹ்வின் அருளினால் கண்பார்வை திரும்பவும் கிடைத்தது.

ஹள்ரத் "ஸித்தீக்" (ரலி) அவர்கள் மக்காவிலிருந்த பொழுது நாற்பதினாயிரம் திர்ஹங்கள் அவர்கள் வசமிருந்தன. அவைகளில் பெரும்பாலானவற்றை நபிகள் பிரான் (ஸல்) அவர்களுக்காகவும், முஸ்லிம்களுக்காகவும் செலவு செய்தார்கள். எஞ்சியுள்ளதையும் மதீனாவிற்கு வந்த பின்பு இஸ்லாத்திற்காகவே செலவு செய்தார்கள். அவர்களின் பொருளிலிருந்து தான் தற்பொழுது நிர்மாணிக்கப்பட்டிருக்கும் மஸ்ஜிதுன் நபி என்ற பள்ளிவாசலின் பூமியும் வாங்கப்பட்டது.

இவ்விரு நபர்களையும் அதாவது முன் கூறப்பட்ட உமய்யா பின் கலபையும் , ஹள்ரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களையும் ஒப்பிட்டுக் காட்டியே இவ்வத்தியாயத்தை இறைவன் இறக்கினான். (காஜின், தப்ஸீர் ஹக்காளீ)

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 255**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துல் லைல் - இரவு 3**

وَالنَّهَارِ اِذَا تَجَلّٰىۙ

பிரகாசம் வெளிப்படும் பகலின் மீதும் சத்தியமாக- (குர்ஆன் : 92:2)

சூரியன் உதித்ததிலிருந்து மறைகிறவரை உள்ள நேரம் கோடைக் காலங்களில் பகல்பொழுது அதிகமாகவும் இரவுப்பொழுது குறைவாகவும் இருக்கும்.

அதிகாலைப் பொழுதின் அருளும் , அழிவும்

அருள் :-

அல்லாஹ்விடமிருந்து பரக்கத்துகள் இறங்குகிற,அல்லாஹ்விடமிருந்து அருள் வளங்கள் கொட்டப்படுகின்ற, நமக்கு தேவையான நற்பாக்கியங்கள் வாரி இறைக்கப்படுகின்ற அருமையான நேரம் அதிகாலைப்பொழுது.

ஆனால் இன்று நம்மில் பலருக்கு தூக்கத்தின் உச்சமாக இருப்பது அந்த அதிகாலைப் பொழுது தான்.

(வரக்கூடிய) ஐந்துக்கு முன்பு (இப்போது இருக்கிற) ஐந்தை நீ பயன்படுத்திக் கொள்.

1, வயோதிகத்திற்கு முன்பு வாலிபத்தை.

2,நோயிக்கு முன்பு ஆரோக்கியத்தை.

3,ஏழ்மைக்கு முன்பு செல்வத்தை.

4,வேலைக்கு முன்பு ஓய்வை.

5,மரணத்திற்கு முன்பு வாழ்க்கையை என்றார்கள் நபி ﷺ அவர்கள். (ஷுஃபுல் ஈமான் ; 7/3319)

இந்த ஹதீஸிலும் கூறப்பட்ட அனைத்தும் நிஃமத்துகள் தான். ஆனால் அவைகளில் எதுவும் நம் பார்வைக்கு நிஃமத்தாக தெரிவதில்லை. அவ்வாறு தெரியாத காரணத்தினால் தான் வாலிபத்தை சீரழிக்கிறோம், ஆரோக்கியத்தை பாழ்படுத்துகிறோம், நேரத்தை வீணடிக்கிறோம், வாழ்க்கையை தொலைத்து விடுகிறோம்.

இப்படி நிஃமத் என்று புரியாத எண்ணற்ற விஷயங்கள் நம் வாழ்வில் குவிந்து கிடக்கிறது.அதிலே ஒன்று தான் இந்த காலைப் பொழுது.அதை நாம் விளங்க வில்லை.அதை நாம் சரியாக பயன்படுத்த வில்லை.எனவே தான் நாம் எதிர்பார்க்கிற பரக்கத்துகளும் நமக்கு கிடைப்பதில்லை.

யா அல்லாஹ் என் சமூகத்திற்கு அதிகாலையில் பரக்கத் செய்வாயாக என்று நபி ஸல் அவர்கள் துஆ செய்துள்ளார்கள்.எதாவது சிறு கூட்டத்தையோ ஒரு படையையோ அனுப்புவதாக இருந்தால் பகலின் ஆரம்ப நேரத்தில் தான் அனுப்புவார்கள். (திர்மிதி ; 1212)

அன்னை ஃபாத்திமா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் ; நான் அதிகாலை வேளையில் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தேன்.அப்போது நபி ﷺ அவர்கள் என்னை எழுப்பி அருமை மகளே! எழுந்திரு. அல்லாஹ்வின் அருள்வாதாரங்கள் இறங்குகிற நேரமிது. அதில் நீ கலந்து கொள்.அதை அலட்சியப்படுத்தியவர்களில் நீ ஆகிவிடாதே. ஃபஜ்ருடைய நேரத்திற்கும் சூரிய உதயத்திற்கும் மத்தியில் தான் அல்லாஹ் ரிஜ்கை பங்கு வைக்கிறான் என்று கூறினார்கள்.{ஷுஃபுல் ஈமான் ; 4/1708}

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அவருடைய மகன்களில் ஒருவர் அதிகாலைப் பொழுதில் உறங்குவதைப் பார்த்தார்கள். எழுந்திரு அல்லாஹ்வின் ரிஸ்க் பகிர்ந்தளிக்கப்படும் நேரத்தில் தூங்குகிறாயா? என்று கேட்டார்கள். (ஷிஃபா : பக்கம் ; 49)

இன்றைக்கு நமக்கு ரிஸ்க் தடை செய்யப்படுவதற்கும், பரக்கத்துகளை இழந்து தவிப்பதற்கும், விசாலமான வீடு இருந்தும் நிம்மதி காணாமல் போனதற்கும், வியாபாரம் நடந்தும் அதில் திருப்தி இல்லாமல் போனதற்கும், நிறைய செல்வங்கள் இருந்தும் மனநிறைவு இல்லாமல் ஆனதற்கும், காரணம் இந்த அதிகாலை தூக்கம் தான்.எனவே பரக்கத்தை எதிர் பார்ப்பவர்கள் அதிகாலை நேரத்தை தவற விடக் கூடாது.

உண்மையில் அந்த நேரம் தான் நம் வாழ்க்கையில் அதிக லாபத்தைப் பெற்றுத்தரும்.

நபி ﷺ அவர்கள் நஜ்தை நோக்கி ஒரு படையை அனுப்பி வைத்தார்கள். அந்தப்படை அதிக கனீமத் பொருட்களோடு சீக்கிரமே திரும்பியது. அப்போது ஒரு ஸஹாபி இதைப்போன்று அதிக கனீமத் பொருட்களோடு வெகு சீக்கிரத்தில் திரும்பிய வேறு எந்தப்படையும் நாங்கள் இதுவரை கண்டதில்லை என்று கூறினார்.

அப்போது நபி ﷺ அவர்கள் இதை விட விரைவாக அதிக லாபத்தைப் பெறக்கூடிய ஒரு கூட்டத்தை நான் உங்களுக்கு அறிவிக்கவா! என்று கேட்டு விட்டு, எந்த மக்கள் சுபுஹு தொழுது விட்டு சூரியன்

உதயமாகும் வரை அதே இடத்தில் அமர்ந்து திக்ர் செய்கிறார்களோ அந்த மக்கள் தான் உண்மையில் அதிகம் லாபத்தைப் பெறக் கூடியவர்கள் என்று கூறினார்கள். (திர்மிதி ; 3561)

இன்றைக்குள்ள அறிவியல்,ஆராய்ச்சி,மருத்துவம் சார்ந்த அறிஞர்கள் கூட இந்த அதிகாலைப் பொழுதில் எண்ணற்ற நன்மைகள் இருப்பதாக கூறுகிறார்கள்.

கடந்த காலங்களை விட இந்த 21 ம் நூற்றாண்டில் குழந்தையின் பிறப்பு சதவீதம் குறைந்து வருவதை நாம் அறிவோம்.அதற்கு பல காரணங்கள் கூறப்பட்டாலும் அதற்கு மிக முக்கியமான காரணம் இந்த அதிகாலைப் பொழுதை தவற விடுதல் என்று கூறலாம்.

பெண்களின் வயிற்றில் கரு உருவாகக் காரணமான சினை முட்டை உற்பத்தி அவர்களின் உடலில் வெப்ப நிலை சீராக இருப்பதின் மூலமாகவே ஏற்படுகிறது. அதிகாலை நேரத்தில் அவர்களின் உடம்பில் ஒழு அல்லது குளிப்பின் மூலம் தண்ணீர் படும்போது பெண்களின் உடலில் வெப்ப நிலை சீராக இருப்பதாக விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

எனவே ஒரு பெண் அதிகாலையில் எழுந்து ஒழு செய்து சுபுஹு தொழுவதால் அவர்களின் உடம்பில் வெப்ப நிலை சமச்சீராக இருக்கும், குழந்தைப் பேரும் ஏற்படும்.

மற்ற நேரங்களில் வாகனங்களின் புகை,தொழிற்சாலைகளின் புகை, மனிதர்களின் புகை இப்படி பல்வேறு வகையான மாசுக்கள் காற்றில் கலந்து அசுத்தமான காற்றைத்தான் சுவாசிக்கிறோம்.ஆனால் அதிகாலையில் அதிகமான வாகனங்கள், மிஷின்கள் இயங்காததனால் காற்று ஆரோக்கியமாக இருக்கும் அதை சுவாசித்து, நாம் அந்த நாளை தொடங்கினால் ஆரோக்கியம் கிடைக்கும்.

உடம்பில் வெளி உறுப்புகள் இருப்பதைப் போன்று உள் உறுப்புகளும் இருக்கின்றது.அதில் ஒவ்வொன்றும் இரண்டு மணி நேரம் இயங்குகிறது. சளி பிரச்சனை மூச்சி பிரச்சனை உள்ளவர்கள் காலையில் எழுந்து மூச்சிப்பயிற்சி செய்தால் குணம் பெறலாம். ஏனெனில் அதிகாலை 3 மணியிலிருந்து 5 மணி வரை தான் நுரையீரல் இயங்குகிறது.

ஆனால் அந்த பயிறசி தஹஜ்ஜத்திலும் சுபுஹுவிலும் நமக்கு கிடைக்கிறது. இன்னும் காலை 5 மணியிலிருந்து 7 மணி வரை பெருங்குடல் இயங்குகிறது.அந்த நேரத்தில் பாத்ரூம் போய் பழக வில்லையென்றால் நமக்கு மோஷன் பிரச்சனை வரும். சுபுஹு தொழுது விட்டால் அந்த பிரச்சனை இருக்காது.

நரம்பியல் துறை நிபுணர்கள் மனித மூளையின் ஆற்றலை நவீன கருவிகளைக் கொண்டு ஆய்வு செய்தார்கள். மூளையின் ஆற்றல் முழுமையாக அறியப்படவில்லையென்றாலும் அவர்கள் கண்டு பிடித்த வரை சராசரியாக மனித மூளையின் ஆற்றல் 30 முதல் 40 சதவீதமாக இருக்கும்.ஆனால் அதிகாலை சூரிய உதயத்திற்கு முன்பாக மனித மூளையின் ஆற்றல் 70 சதவீதமாக இருக்கும் என்று கூறுகிறார்கள்.

இந்த பாக்கியங்கள் அனைத்தும் காலைப் பொழுதில் அடங்கியிருக்கிற காரணத்தினால் தான் ஒரு விஞ்ஞானி பொறாமையோடு கூறிய வார்த்தை முஸ்லிம்கள் பிறக்கும் போதே வாயில் வெள்ளிக் கரண்டியோடு பிறந்தவர்கள். muslims are born with silver spoon in their mouth. அதாவது [பாக்கியசாலிகள்]. காரணம் மூளையின் ஆற்றல் உச்சத்தில் இருக்கும் போது சுபுஹு தொழுகையைத் தொழுது விட்டு, தங்கள் வேலைகளை துவங்கும் படி ஏவப்பட்டுள்ளார்கள்.

இந்த அளவு அபரிவிதமான நன்மைகளும், பயன்களும் இருக்கிற காரணத்தினால் தான் அந்த பாக்கியங்கள் அனைத்தும் தன் சமூகத்திற்கு கிடைக்க வேண்டும் என்ற நன்நோக்கில் நபி ﷺ அவர்கள் மற்ற தொழுகைகளுக்கு கொடுக்காத முக்கியத்துவத்தை இந்த சுபுஹு தொழுகைக்கு கொடுத்திருக்கிறார்கள்.

நபி ﷺ அவர்கள் ஒரு நாள் சுபுஹுக்கு பிறகு இவர் வந்தாரா? அவர் வந்தாரா? என்று கேட்டார்கள். இல்லையென்று சொன்னபோது சுபுஹும் இஷாவும் முனாஃபிக்களுக்குத் தான் பாரமாக இருக்கும். இதன் நன்மையை புரிந்து கொண்டால் தவழ்ந்தாவது வந்து விடுவார்கள் என்று கூறினார்கள். (அஸ்ஸுனனுல் குப்ரா ; 3/68)

அழிவு :-

யூதப் பெண் அமைச்சரின் பதில் : யூதப் பெண் அமைச்சர் ஒருவரின் நேர்காணலைப் பத்திரிகையில் வெளிவந்தது. கோல்டா மேயர் என்ற அந்தப் பெண் அமைச்சரிடம் யூதப் பத்திரிகையாளர்கள் பேட்டி எடுக்கின்றனர். "கடைசி காலத்தில் யூதர்களை முஸ்லிம்கள் கல்லால் அடித்துக் கொல்லும் ஒரு நேரம் வரும் என்று முஸ்லிம்களின் நபி கூறியுள்ளாராமே.. அதைக் குறித்துத் தாங்கள் என்ன கூறுகின்றீர்..?"

அதற்கு அந்தப் பெண் அமைச்சர், "ஆம். நாம் அதனை நம்புகின்றோம்.

ஒருநாள் அவர்கள் நம்முடன் போர் புரிவார்கள்". "அப்படி என்றால் அந்த நாள் எப்போது வரும்?" என்று மீண்டும் அவர்கள் கேள்வி கேட்க,

அப்பெண்மணி கூறினார் : "ஜும்ஆ தொழுகைக்கு வருவதைப் போன்று என்றைக்கு முஸ்லிம்கள் ஸுபுஹ் தொழுகைக்கு வருகின்றார்களோ அன்று வேண்டுமென்றால் அது நடக்கலாம். அதுவரை நாம் அஞ்ச வேண்டியதில்லை."

அதிகாலைத் தொழுகைக்கு ஏன் இவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது?

மாற்றத்தின் நேரம் அதிகாலை உலகில் பெரும் மாற்றங்களை எல்லாம் அதிகாலை நேரத்திலேயேதான் அல்லாஹ் ஏற்படுத்தி உள்ளான். உலகில் அழித்து நாசமாக்கப்பட்ட சமூகங்கள் எல்லாம் அதிகாலை நேரத்தில்தான் அழித்து ஒழிக்கப்பட்டிருக்கின்றன.

ஹூத் (அலை) அவர்களின் ஆத் கூட்டத்தை அழித்ததைக் குறித்து அல்லாஹ் கூறுகின்றான்: "இறுதியில் அவர்களின் நிலைமை என்னவாயிற்று எனில், அவர்கள்வசித்த இல்லங்களைத் தவிர வேறு எதுவும் அதிகாலையில் அங்கு தென்படவில்லை." (46:25)

ஸாலிஹ் நபி (அலை) அவர்களின் சமூத் கூட்டத்தைக் குறித்து இறைவன்குறிப்பிடுகின்றான் : "திடுக்குறச் செய்கின்ற ஒரு நிலநடுக்கம் அவர்களைப் பிடித்துக் கொண்டது. அதிகாலையில் அவர்கள் தம் இல்லங்களில் முகங்குப்புற(உயிரற்றவர்களாக) வீழ்ந்து கிடந்தார்கள்" (7:91)

(இதே கருத்தை அத்தியாயம் ஹூத் வசனம் 94, அல்ஹிஜ்ர் வசனம் 83 ஆகியவற்றிலும் காணலாம்.)

லூத் (அலை) அவர்களின் சமூகத்தைக் குறித்து மிகத் தெளிவாகவே அல்லாஹ்கூறுகின்றான்: "எந்த வேதனை இம்மக்களைப் பீடிக்கப்போகிறதோ, அந்த வேதனை திண்ணமாக அவளையும் பீடிக்கப்போகிறது. இவர்களை அழிப்பதற்காக நிர்ணயிக்கப்பட்ட நேரம் அதிகாலையாகும். அதிகாலை வருவதற்கு வெகு நேரமா இருக்கிறது?" (11: 81)

ஷுஐப் (அலை) அவர்களின் கூட்டத்தைக் குறித்துக் கூறுகின்றான் :

"இறுதியில், ஒரு கடும் நிலநடுக்கம் அவர்களைப் பீடித்தது. அவர்கள் தம் வீடுகளிலேயே அதிகாலையில் குப்புற வீழ்ந்து மடிந்தார்கள்" (29:37)

இவ்வாறு ஒவ்வொன்றாக நாம் கூறிக்கொண்டே போகலாம். மண்ணோடு மண்ணாக்கப்பட்ட அத்தனை சமூகங்களும் அநேகமாக அதிகாலை நேரத்திலேயே அழிக்கப்பட்டுள்ளனர்.

ஆகவேதான், மக்கத்து சமூகமும் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் செய்தியை ஏற்றுக் கொள்ளாமல் ஏளனம் செய்தபோது அல்லாஹ்வின் எச்சரிக்கை இவ்வாறு இருந்தது: "என்ன, இவர்கள் நம்முடைய தண்டனைக்காக அவசரப்படுகின்றார்களா? அது அவர்களின் முற்றத்தில் இறங்கிவிடுமாயின், எவர்களுக்கு எச்சரிக்கை செய்யப்பட்டு விட்டதோ அவர்களுக்கு அந்நாளின் அதிகாலை மிகவும் கெட்டதொரு நாளாகிவிடும்" (37:176,177)

(இப்போது கூறப்பட்ட அத்தனை வசனங்களிலும் அதிகாலை என்பதற்கு ஸுபுஹ் எனும் அரபிச் சொல்தான் பயன்படுத்தப்பட்டுள்ளது.)

பண்டைய காலத்தில்தான் இவ்வாறு அதிகாலை என்பது அழிவிற்கான நேரமாக இருந்ததும் என்று நாம் நிம்மதி அடைய வேண்டாம். இன்றும் அவ்வப்போது அல்லாஹ்வின் எச்சரிக்கைகள் அதிகாலை நேரத்திலேயேதான் வருகின்றன. 2004-இல் ஏற்பட்ட சுனாமி அதிகாலை நேரத்தில்தான் ஏற்பட்டது.

துருக்கி பூகம்பம், ஈரானின் நிலநடுக்கம் அனைத்தும் அதிகாலை நேரத்திலேயே நடைபெற்றன. 2009 இல் ஆப்ரிக்கா ஹெய்தியில் 3 லட்சம் பேர் பலியான பூகம்பமும் அதிகாலை நேரத்தில்தான் ஏற்பட்டது.

இன்னும் இன்னும் ஏராளம் கூறலாம். இவை அனைத்தும் அல்லாஹ்வின் வேதனை என்றோ எச்சரிக்கை என்றோ எப்படி வேண்டுமென்றாலும் நாம் எடுத்துக்கொள்ளலாம்..

மரணம் என்பது அல்லாஹ்வின் விதி, அது வந்தே தீரும். அதில் எந்த ஐயமும் எவருக்கும் இருக்க முடியாதுதான். ஆனால், துர் மரணம் என்பது...? அல்லாஹ்வின் தூதரே பாதுகாப்பு கேட்ட விஷயம் அல்லவா? மேலே கூறிய அனைத்தும் துர் மரணம் அல்லவா? அல்லாஹ் பாதுகாப்பானாக!

وَالنَّهَارِ اِذَا تَجَلّٰىۙ

பிரகாசம் வெளிப்படும் பகலின் மீதும் சத்தியமாக- (குர்ஆன் : 92:2)

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 256**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துல் லைல் - இரவு 4**

وَمَا خَلَقَ الذَّكَرَ وَالْاُنْثٰٓىۙ

ஆணையும், பெண்ணையும் (அவன்) படைத்திருப்பதின் மீதும் சத்தியமாக! (அல்குர்ஆன் : 92:3)

இறைவன் 3 பெரும் படைப்புகளைப் படைத்தான்.மனிதனை மண்ணிலிருந்தும், ஜின்களை நெருப்பிலிருந்து படைத்தான். இந்த இரண்டு படைப்புகளிலும் ஆண் / பெண் என்ற பாலினம் உண்டு. மலக்குகள் பாலினம் இல்லாத படைப்பு.

மலக்குமார்கள் என்ன பாலினம் ?

اَفَاَصْفٰٮكُمْ رَبُّكُمْ بِالْبَنِيْنَ وَ اتَّخَذَ مِنَ الْمَلٰٓٮِٕكَةِ اِنَاثًا ‌ؕ اِنَّكُمْ لَتَقُوْلُوْنَ قَوْلًا عَظِيْمًا

(மனிதர்களே!) உங்கள் இறைவன், ஆண் மக்களை உங்களுக்குச் சொந்தமாக்கி விட்டு, மலக்குகளைத் தனக்குப் பெண் மக்களாக ஆக்கிக் கொண்டானா? இவ்வாறு கூறும் நீங்கள் நிச்சயமாக மகத்தான (பொய்க்) கூற்றையே கூறுகிறீர்கள்.(குர்ஆன் : 17:40)

மக்காவிலுள்ள முஷ்ரிக்குகள் பெண் குழந்தைகள் தங்களுக்கு இருப்பதை ரொம்பவும் கேவலமாக மதிப்பதும், ஆண் மக்கள் தங்களுக்கு இருப்பதை ரொம்பவும் பெருமையாக கருதுவதுமாக இருந்தார்கள் . மேலும் மலக்குகளை பெண்களாகக் கருதி , அவர்களை இறைவனுடைய பெண் மக்கள் என்பதாக கூறி வந்தனர் .

ஒளிமயமான இறைவன் மலக்குமார்களை ஒளியில் இருந்து படைத்தான் .(ஹதீஸ் : புஹாரி ,முஸ்லீம் )

இறைவனும் ஒளிமயமானவன் . மலக்குகளும் ஒளியில் இருந்து படைக்கப்பட்டவர்கள் ஆகையால் ஒளியிலிருந்து ஒளி . கணக்கு சரி வருதா ...? மேலும் மலக்குகளுக்கு ஆண் / பெண் என்ற பாலினம் கிடையாது . இறைவனுக்கும் பாலினம் கிடையாது.மலக்குகளுக்கும் உறவுகள் கிடையாது இருந்தாலும் முஷ்ரிக்களின் கற்பனைக்கு ஏற்றவாறு இறைவனுக்கும் மலக்குகளுக்கும் தகப்பன் - மகள் என்ற உறவைக் கற்பித்து மலக்களை இறைவனின் பெண் மக்களாக சித்தரித்தனர்.

செக்ஸ் என்பது அவசியம்தானா ? உலகில் உள்ள அனைத்து உயிரினங்களும் ஆண் பெண் இனச்சேர்கை மூலம்தான் பிறக்கின்றன என்று நீங்கள் எண்ணிக் கொணடிருந்தால், அது தவறு பெரும்பாலான உயிரினங்களுக்கு செக்ஸ் என்பதே இல்லை

ஆண் பெண் வித்தியாசம் இல்லாத தாவர, விலங்கினங்கள் பலப்பல உள்ளன இவ்வகைகளில் பெற்றுக் கொள்வது எளிதானதும் கூட . என்ன, பிறப்பதெல்லாம் பெண்ணாகப் பிறக்கும் பரவாயில்லையே !

டரண்டிலியன் என்ற தாவரம் இதற்கு ஆண் கிடையாது இது மஞ்சள் பூ வைத்திருக்கிறது காற்றில் பூக்களை சும்மா பரப்பிவிடுகிறது அந்த விதைகள் பூமியில் விழுந்து ட்ரண்டிலியான் செடிகளாகின்றன சிம்பிள் ! வண்டு வருமா பூ மொட்டைத் துளைக்குமா என்று காத்திருக்க வேண்டாம்

அமேசான் மாலி மற்றும் சலமாண்டர் மீன் இனங்களில் ஆண்களே கிடையாது எல்லாமே பொம்மனாட்டிகள் . இதேபோல் அமெரிக்க பாலைவனத்தில் உள்ள சில பல்லி இனங்களில் எல்லாமே பெண் ஆண் வர்க்கமே இல்லை.

குதிரை வடிவில் இருக்கும் மீனினம் கடல் குதிரை. பெண் கடற்குதிரைகள் தங்களின் முட்டைகளை 200 ஆண் கடல் குதிரைகளின் வால் பகுதியில் உள்ள இனப்பெருக்கப் பைகளில் விட்டுவிடும்.

அந்த முட்டைகளை ஆண் கடற்குதிரைகள் கங்காரு போல நன்கு பேணி ஆறு வாரங்கள் பாதுகாத்து குஞ்சுகளாகப் பொரிக்கின்றன.

இந்த முட்டைகள் சில நாள்கள் கழித்து பொரிக்கிறது. குஞ்சுகள் பொரித்த பிறகு சிறிது காலம் இதன் பையில்தான் வளர்கின்றன.

முட்டைகள் பொரிந்து குஞ்சுகள் வெளிவரும் நேரத்தில் ஆண் கடற்குதிரைக்கு பிரசவ வலி வரும். அப்போது அது கடலுக்கடியில் உள்ள புதற்களுக்கிடையே கிடந்து மிகவும் சிரமப்படும்.

உடலை முன்னும் பின்னுமாக அசைத்து வளைக்கும். இப்படி வளையும்போது பையின் தசைகள் விரிவடையும். ஒவ்வொரு முறை வளையும்போதும் ஒவ்வொரு குஞ்சு வெளிவரும். இது 50 முதல் 100 வரை குஞ்சுகளை பொரிக்கும். பிறக்கும் குஞ்சுகளின் நீளம் சுமார் ஒரு செ.மீட்டராக இருக்கும்.

இறைவன் தன் வல்லமையை காட்ட அன்னை மரியம் ( அலை ) அவர்கள் திருமணமாகாத கன்னிப் பெண். ஆண் துணை இன்றி ஒரு ஆண் குழந்தை (நபி ஈஸா (அலை) அவர்களைப் பெற்றெடுத்தார்கள்.

நார்தன் கார்டினல்ஸ் என்று அழைக்கப்படும் இந்த பறவை இனத்தில் பாதி ஆண் மற்றும் பாதி பெண்ணாக இருக்கும் பறவை வகையும் உள்ளது. இயல்பாக ஆண் பறவைகள் சிவப்பு நிறத்திலும் பெண் பறவைகள் காக்கி நிறத்தில் இருக்கும். பாதி ஆண் மற்றும் பாதி பெண்ணாக இருக்கும் பறவையின் உடல் பாதி சிவப்பு மற்றும் பாதி காக்கி நிறத்தில் இருக்கும் என்கிறது அறிவியல் உண்மை.

ஈரிதழ் சிப்பி. இதுதான் ஒரு வருடம் ஆண்... அடுத்த ஆண்டு பெண்ணாக வாழும் ஒரே உயிரினம் ஆகும்.

blackspot angelfish என்று அழக்கப்படும் ஒரு வகை மீன், பெண்ணாக இருந்து ஆணாக மாறுகிறது!. ஆனால் இம்மாற்றம் ஒரு மீன் தான் விரும்பியவுடன் நடைபெறுவதில்லை. இந்த மாற்றங்கள் சில பிரத்யேகமானகாரணங்களுக்காக நிகழ்கிறது!

இந்த ஏஞ்சல்வகை மீன்கள் குழுக்களாக வாழும். ஒவ்வொரு குழுவிலும் ஒரு ஆண் மீனும், (நீலக் கலரில் உள்ள மீன்), மற்றும் நான்கு பெண் மீன்கள் (மஞ்சள் நிற மீன்கள்) இருக்கும்.

ஆண் ஏஞ்சல் மீன் மட்டுமே திடகாத்திரமானதும், வலிமை மிக்கதுமாக இருக்கும். ஆண் மீன்தான் அங்குள்ள மற்ற பெண் மீன்களுக்கு முழுப் பாதுகாப்பையும் வழங்குகிறது.

அதாவது அக்குழுவிற்கு காவலாளி. எப்பொழுது அந்த ஆண் மீன் இறந்து விடுகிறதோ அக்குழுவிற்கு ஒரு காவலாளி தேவைப்படுகிறார். அப்பொழுது அங்குள்ள பெண் மீன்களில் பெரிய உருவமுடைய மீன் தன்னுடைய உருவத்தை மாற்றிக்கொள்ளத் துவங்குகிறது.

முதலில் தன் உருவத்தை மிகப் பெரிதாக வளர்த்துக் கொள்ள ஆரம்பிக்கிறது. பிறகு ஒரு வாரத்தில், அப்பெண்மீன் தன் நிறத்தை மஞ்சள் கலரில் இருந்து நீலக் கலருக்கு மற்றிக் கொள்கிறது, மெதுமெதுவாக அந்தப் பெண்மீன் தன் நடவடிக்கைகளை ஆண் மீனைப்போல் மாற்றிக் கொள்கிறது.

இரண்டு வாரங்களுக்குப் பிறகு அதன் உடலில் கருப்புக் கோடுகள் உருவாகிறது. இம்மாற்றம் அந்த மீன் தற்பொழுது முழு ஆணாக மாறிவிட்டதை சுட்டிக் காட்டுகிறது.இந்த மாற்றம் hermaphroditism (இரு பாலுறுப்புகளையும் ஒருங்கே கொண்டுள்ள நிலை) என அழைக்கப்படுகிறது.

"இருபாலுயிரி (hermaphrodite) அல்லது இருபால் உடலி என உயிரியலில் விவரிக்கப்படுவது. இருபால் உறுப்புகள் ஒருங்கே/ஒரே உடலில் அமையப் பெற்ற ஓர் உயிரினம். அதாவது ஆண் பால் உறுப்பும், பெண் பால் உறுப்பும் ஒரே உடலில் இடம் பெற்றிருத்தலையே நாம் அழிதூஉ/இருபாலுடலி என விளிக்கிறோம்.

இது பெரும்பான்மையான முதுகெலும்பற்ற உயிரினங்களிலும், விதைமூடியிலித் தாவரங்களிலும் பரவலாகக் காணப்படுகின்றன. இதற்கு வழக்கில் அலி அல்லது பேடு என்றப் பிற பெயர்களாலும் அழைக்கப்படுகிறது.

இரண்டு மண்புழுக்கள் புணர்தல். மண்புழுக்கள் அழிதூஉ அல்லது இருபாலுடலி (இருபாலி) வகையைச் சேர்ந்த உயிரினம்.

நாம் பரவலாக அறிந்திருக்கூடிய மண்புழுக்களில் இப்பண்பு இடம் பெற்றுள்ளது. இவற்றிற்கென்று தனியாகப் பாலமைப்புக் காணப்படுவதில்லை. இவை இனப்பெருக்கத்தின் போது ஒரு பகுதி விந்துவைப் படைக்கும் ஆணாகவும் மற்றொன்று முட்டைகளைப் படைக்கும் பெண்ணாகவும் செயலாற்றும். எல்லா மண்புழுக்களும் முட்டையிடும் பண்பை அல்லது திறத்தைப் பெற்றவை.

மனிதர்களிலும் இந்நிலை காணப்படலாம். ஆனால் அது போலி இருபால் நிலை (pseudo hermaphroditism) ஆகும். உண்மையான இருபால் நிலை மாந்தருள் மிக மிக அரிதாகவே காணப்படும்.

திருநங்கை என்னும் அரவாணிகள் -الخنثي அவர்கள் இருவகை

1) ஆணுருப்பும் பெண்ணுறுப்பு இரண்டும் இருப்பவர்.

2) இரு உறுப்புக்களும் இருக்காது ,

ஒரு ஓட்டை மட்டுமே இருக்கும் அதிலிருந்து மூத்திரம் மட்டுமே வரும்.

(2)المخنثஅல் முஃகன்னஃத

(1)இது இரு வகை

பேச்சு,பார்வைக்கு நளினம் ,அசைவு இதுபோன்ற செயல்களில் பெண்ணுக்கு ஒப்பீடாக இருப்பவர்.இது அவரின் படைப்பே அப்படி இருந்தால் பழிப்பிற்குரிவரல்ல.

அவர் வேண்டுமென்றே பெண்ணைப் போல் நடந்துகொண்டால் அல்லாஹ்வின் சாபம் அவரின் மீது உண்டாகும்.இவர்கள் ஆண்தான் என்பது தெளிவான விடயமாகும்.

(3)அரவாணி இது இரு வகை

அவருக்கு ஆணுறுப்பு முழுமையாக இருக்கும்,அதிப்படியாக பெண்ணுறுப்பு முழுமையடையாமல் சிறியதாகவோ அதைப்போன்றோ இருக்கும் இவர் ஆணாகவே கருதப்படுவார்.

அல்லது பெண்ணுறுப்பு முழுமையாக இருக்கும்,அதிகப்படியாக முழுமையடையாத ஆணுறுப்பு வளர்ந்திருக்கும் அல்லது அது போன்றிருக்கும் இவர் பெண்ணாகவே கருதப்படுவார் இவர்களுக்கு மார்க்கத்தில் خنثي غير مشكل ஃகுன்ஃதா கைரு முஷ்கில் என்று கூறப்படும்.

ஆணுறுப்போ ,பெண்ணுறுப்போ இரண்டும் இருந்தும் முழுமையாக இருக்காது அதனால் ஆணா பெண்ணா என அறிவதில் சிறமமிருக்கும்.

அல்லது இரண்டுமில்லாமல் ஒரு ஓட்டை மட்டுமே இருக்கும் இவர்களுக்கு மார்க்கம் خنثي مشكل ஃகுன்ஃதா முகத்தில் என்று கூறுவர்.

(4) மார்க்க சட்ட அறிஞர்களில் மிகுதியானவர்கள் ஃகுன்ஃதா முஷ்கில் என்பவர் வயது வரும் முன்பு மூத்திரம் ஆணுருப்பிலிருந்து வந்தால் அவன் ஆண் என்றும் ,பெண்ணுறுப்பிலிருந்து மூத்திரம் வந்தால் பெண் என்றும் கணிக்கிறார்கள்.

வயது வந்த பின் (வயது15 ஆன பின்) பின் வரும் காரணங்களை வைத்து ஆண் பெண் என்று கணக்கிட வேண்டும்.

1)தாடி முளைத்தால்

2)ஆணுறுப்பிலிருந்து விந்து வெளி வந்தால்,

3)பெண் தேட்டம் ஏற்பட்டால்

4)பெண்களோடு சேர்ந்து திரிந்தால் ஆண் என்று கணிக்க வேண்டும்.

அதுபோன்றே வீரம்,குதிரையேற்றம்,எதிரியோடு மல்லுக்கட்டினால் ஆணின் அடையங்களாம்(இமாம் ஜலாலுத்தீன் ஸுயூதீ)

1)கொங்கை வளர்ந்து அதிலிருந்து பால் வடிந்தாலோ,

2)பெண்ணுறுப்பிலிருந்து மாதவிடாய் வந்தால்,

3)பெண்ணுறுப்பில் உடலுறவுக்கு சாத்தியப்பட்டால்

அவள் பெண்ணாக கருதப்படுவாள்.

அவளுக்கு குழந்தையும் பிறந்திடுமானால் அவள் பெண்ணென்று கருத தடையேதுமில்லை.

மேற்சொன்ன அடையாளங்கள் இல்லாத நேரங்களில் வயது வந்த பின் பெண்களோடு அதிகம் ஈடுபாடு காட்டினால் ஆண் என்றும்

ஆண்களோடு அதிகம் ஈடுபாடு காட்டினால் பெண் என்றும் கணிக்க வேண்டும்.

அல்லது இருவரிடத்திலும் அதிக ஈடுபாடு காட்டினாலோ அல்லது இருவரிடமும் ஈடுபாடு காட்டாமலிருந்தால் கண்டுபிடிப்பது சிரமமே.

முஆவியா (ரலி) அவர்கள் மதீனாவில் ஆட்சியாளராக இருக்கும் போது அரவாணியாக இருந்த நபர் தனக்குரிய சொத்தை பங்கீட்டு தர வேண்டி மனு செய்த போது ஆணுக்குரிய பங்கின் அளவா ? அல்லது பெண்ணுக்குரிய பங்கின் அளவா ? என்ற கேள்வி எழுந்தது

உடனே முஆவியா (ரலி) அவர்கள் அலீ (ரலி) அவர்களின் கருத்து ஆலோசனை கேட்டார்கள் விளக்கம் தர வேண்டினார்கள்

அலீ ரலி அவர்கள் அந்த விளக்க கடிதத்தைப் பார்த்தும் "என் கருத்துக்களில் பலவற்றில் எதிர்நிலையை எடுத்துச் செயல்படும் அதே நேரத்தில் தேர்ந்த நிர்வாகி என நபி(ஸல்) அவர்களால் பாராட்டப்பட்ட முஆவியா ரலி அவர்கள் இந்த விஷயத்தில் என் கருத்தைக் கேட்டு செயல்பட வைத்த அல்லாஹ்வுக்கு எல்லாப் புகழும் என்று கூறியவர்களாக அரவாணிக்குரிய பங்கு பிரித்துக் கொடுப்பது பற்றி நேரடி பரிசோதனையை ஒன்றை கூறினார்கள்.

மூத்திரம் ஆணுருப்பிலிருந்து வந்தால் அவன் ஆண் என்றும் ,பெண்ணுறுப்பிலிருந்து மூத்திரம் வந்தால் பெண் என்றும் கணிக்கப்படுகிறது. மேற்கண்ட வழக்கில் பெண்ணுறுப்பில் மூத்திரம் பெய்தது.

இப்போது சொல்லுங்கள் நாம் ஆண் ஆணாகவும், நம் பெண் பெண்ணாகவும் படைத்திருப்பதின் மகத்துவத்தை உணர்கிறீர்களா ?

وَمَا خَلَقَ الذَّكَرَ وَالْأُنْثَىٰ

ஆணையும், பெண்ணையும் (அவன்) படைத்திருப்பதின் மீதும் சத்தியமாக! (அல்குர்ஆன் : 92:3)

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 257**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துல் லைல் - இரவு 5**

اِنَّ سَعۡيَكُمۡ لَشَتّٰى

நிச்சயமாக உங்களுடைய முயற்சி பலவாகும். (குர்ஆன் : 92:4)(பகுதி - 1)

மனித குலத்தின் மாபெரும் முயற்சி என்பது நமது பிண்டத்தில் (உடலில்) ஜீன்கள் என்னும் மரபணுவை கண்டுபிடித்ததும், அண்டத்தில் வேற்று கிரகத்தில் கால் பதித்ததும் போன்ற சாதனைகளைச் சொல்லலாம்.

முதலில் ஜீன்கள் என்னும் மரபணுவைப் பற்றி....

மனித உடலின் ஒவ்வொரு அங்கமும் எப்படி உருவாகிறது என்ற தகவல்கள் அவனுடைய செல் என்னும் உயிரணுவில் செய்தியாக எழுதி வைக்கப்பட்டிருக்கிறது, பேப்பர் பென்சிலால் அல்ல ; குரோமோசோம்கள் என்னும் மிக நீண்ட கூட்டணு கட்டமைப்பில் அந்த ரகசியம் பொதிந்து இருக்கிறது .

இந்த உருவாக்கும் தகவல் புத்தகத்தைப் படித்தால் எப்படி இருக்கும் ? சுவாரஸ்யமில்லாத ATGCCAGGCCAGGAC இப்படியே 300 கோடி எழுத்துக்கள். இதில் இந்த தகவலை வைத்து தலைகால் புரிந்துகொண்டு,என்னத்தைக் கண்டுபிடித்து இருக்கிறார்கள் என்று நீங்கள் வியக்கலாம். இதில் ஒவ்வொரு எழுத்தும் ஒரு கூட்டணுயைக் குறிக்கிறது .

அடினைன் (A) தயோமைன் ( T) சைட்டோசைன் (C ) குவானின் (G) என்ற 4 புரோட்டீன்களால் அடுக்கப்பட்டு ஒவ்வொரு உடல் அங்கமும் படைக்கப்பட்டிருக்கிறது

டி.என்.ஏ என்பது என்ன ?

ஒரு மனிதனை படைப்பதற்கான செய்முறைக் குறிப்புகள் . அது எப்படி எழுதப்பட்டிருக்கிறது ? நான் சற்று முன் சொன்ன மாதிரி ATCG என்ற நான்கெழுத்து சரங்களாக.

இதை சற்று புரியும்படி சொல்றேன் .நம் உடம்பு ஒரு மிகப் பெரிய கட்டடம் என்று வைத்துக் கொண்டு இந்தப் படிமத்தை கொஞ்சம் தொடரலாம் .

உடம்பெனும் கட்டிடத்தில் எத்தனையோ அறைகள் இருக்கின்றன . ஒவ்வொரு அறையிலும் ஒரு புத்தக அலமாரி இருக்கிறது . அந்த புத்தக அலமாரி ஒவ்வொன்றிலும் பல பாகங்கள் கொண்ட ஒரு புத்தகம் வைக்கப்பட்டிருக்கிறது .

அந்தப் புத்தகத்தின் உள்ளடக்கம் என்ன? முழுக் கட்டடத்தை உருவாக்கும் திட்டம் , அதற்கான செயல் முறைகள் ஒவ்வொரு அறையிலும் ஒரே புத்தகத்தின் ஒரு செட் பிரதிகள் .

இதில் மனிதன் கட்டிடம், அறைகள் அவன் செல்கள் , அலமாரி ஒரு செல்லின் உட்கரு அதாவது நியூக்ளியஸ்..., புத்தகம் டி.என்.ஏ

புத்தகம் 46 பாகங்கள் கொண்டது .இந்த பாகங்களைத்தான் குரோமோசோம்கள் என்று சொல்கிறோம் மொத்தம் 23 ஜோடிகள் 46 குரோமோசோம்கள் (தாயுமிடமிருந்து 23+ தந்தையிடமிருந்து 23 = 46 ) மைக்ரோஸ்கோப் நுண்ணோக்கி வழியாகப் பார்த்தால் நீண்ட நூலேணி போல் தெரிகிறது .

மனிதன் - கட்டிடம்

செல்கள் - அறைகள்

செல்லின் உட்கரு நியூக்ளிஸ் _ அலமாரி

டி.என்.ஏ - புத்தகம்

குரோமோஸோம்கள் - புத்தகத்தின் அத்தியாயங்கள்

ஜீன்கள் - பல்லாயிரக்கணக்கான கதைகள்.

எக்ஸான் - கதையின் ஒவ்வொரு பாரா

இன்ட்ரான்கள் - கதையின் இடையே விளம்பரம்

கோடான்கள் - ஒவ்வொரு பாராவின் தடித்த எழுத்துக்கள்

பேஸ் _ எழுத்து ATCG - இந்த 4 எழுத்துக்கள்தான் திரும்ப திரும்ப வரும். ஆனால் இதில் 3 எழுத்துக்கள் சேர்ந்து ஒரு வார்த்தையாகிறது .

நமது வாழ்க்கை புத்தகம் 100 கோடி வார்த்தைகளால் எழுதப்பட்டிருக்கிறது. இதில் ஆச்சரியம் என்னவென்றால் இந்த வார்த்தைகள் தக்க சமயத்தில் தன்னைத்தானே பிரதியெடுத்துக்

கொள்ளும். தன்னைத்தானே படிக்கவும் செய்யும் .

(உ-ம்) சமையல் செய்வது எப்படி ? என்ற புத்தகம் அந்த அலமாரியில் இருப்பதாக வைத்துக்கொள்வோம் .

சமைப்பதற்குரிய சமையல் பொருட்களும் அதே அலமாரியில் வைக்கப்பட்டு தக்க சமயத்தில் அதுவாக சமைக்கப்பட்டும் விடும் ( ! )

"ஒரே புத்தகத்தின் பிரதிகளை ஒவ்வொரு அறையிலும் வைத்தவர் யார்? அந்த புத்தகத்தை எழுதியவர் யார்? " என்ற கேள்வி உடனே உங்களுக்கு எழும். இதற்கு பதில் ஸாரி ..யாரும் இல்லை அவை இயற்கையின் தேர்ந்தெடுப்பு என்கிற முறைகளின்படி மெல்ல மெல்ல உருவானதுதான் என்கிறது அதி நவீன விஞ்ஞானம் .

ஆனால் குர்ஆனில் அல்லாஹ்....

பிறகு அவனது சந்ததிகளை அற்பமான நீரின் சத்திலிருந்து உருவாக்கினான்.(குர்ஆன் 32:8)

மேற்கண்ட இந்த வசனத்தின் மூலம் நாம் அறியக்கூடிய ஆத்மீக இரகசியம் இதுதான் அற்பமான நீரின் சத்து அதாவது மரபணு ஜீன்கள் என்பதே!

எனவே ஆதம் நபி படைக்கப்பட்ட போதே உலக அழிவு நாள் வரை பிறக்கப்போகும் அனைத்து உயிர்களும் மரபணு ஜீன்கள் முதல் மனிதர் படைக்கப்படும்போதே அல்லாஹ் படைத்துவிட்டான்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: "ஆதமின் சந்ததிகளில் தலைமுறை தலைமுறையாக நான் சிறந்த தலைமுறை வழியே (மரபணுக்களில் பாதுகாக்கப்பட்டு வந்து இப்போது) நான் தோன்றியிருக்கும் (இந்தச்) சிறந்த தலைமுறையில் தோன்றி இறைத்தூதராக ஆக்கப்பட்டுள்ளேன்" என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். ஸஹீஹ் புகாரி : 3557.

இன்று ஒரு குழந்தை பிறக்கும் போது அதற்குரிய உயிரை வானவர்கள் மூலமாக கர்ப்பக் கோளரைகளில் வந்து சேர்ந்து விடுகிறது ஆதாரம் இதோ!

உங்களில் ஒருவரின் கரு தம் தாயின் வயிற்றில் நாற்பது (40 நாட்கள்) பகல் அல்லது இரவு சேமிக்கப்படுகிறது.

பிறகு அதைப் போன்றே (40 நாட்கள்) அது (அட்டைப் பூச்சி போன்று கருப்பையின் சுவரைப் பற்றிப் பிடித்துக் தொங்கும்) ஒரு கருக் கட்டியாக மாறுகிறது.

பிறகு அதைப் போன்றே (மேலும் 40 நாட்கள் மெல்லப்பட்ட சக்கை போன்று) ஒரு சதைப் பிண்டமாக மாறுகிறது.

பிறகு அதனிடம் ஒரு வானவர் அனுப்பப்படுகிறார். அந்த வானவருக்கும் நான்கு கட்டளைகள் பிறப்பிக்கப்படுகின்றன.

அவர் (கருவாக இருக்கும்) அந்த மனிதனின் வாழ்வாதாரத்தையும், அவனுடைய வாழ்நாளையும், செயல்பாட்டையும், அவன் (இறுதிக் கட்டத்தில்) துர்பாக்கியசாலியா அல்லது நற்பாக்கியசாலியா என்பதையும் (இறைவனின் கட்டளைப்படி) பதிவு செய்கிறார்.

செல்லில் தகவலாக எழுதப்பட்டிருந்த மனிதன் பின் சதைப் பிண்டமாக உருமாறி மனிதனாக சர்வ லட்சணத்தோடு இந்த பூமிக்கு வருகிறான். எல்லாமே இறைவன் எழுதி வைத்த மனித உருவாக்கத்தின் தகவல்களே !

நவீன அறிவியல் மற்றும் தொழில்நுட்பத்தில், ஜீன்கள் என்கிற மரபணுவியல் துறை சார்ந்த வளர்ச்சி தற்போது வேகமாக வளர்ந்து வருகிறது. தாவரங்களில் மரபணு மாற்றப் பயிர்களை உருவாக்கல், விலங்குகளில் மரபணு சார்ந்த பரிசோதனைகள் மேற்கொள்வது என்ற நிலைகளைத் தாண்டி, தற்போது மனிதர்களில் மரபணு பரிசோதனைகளின் அடிப்படையில் மருத்துவ சிகிச்சை செய்கிற நிலை உருவாகியுள்ளது.

ஒருவர் நோய்வாய்ப்படுவதற்கும் அல்லது ஆரோக்கியமாக இருப்பதற்கும் இந்த மரபணுக்களே பிரதான காரணிகளாக உள்ளது. உடலளவில் மட்டும் என்றில்லாமல் ஒருவரின் நல்ல குணாதிசயங்களை அல்லது தீய குணாதிசயங்களை தீர்மானிப்பதும் இந்த மரபணுக்களே!

மரபணு அளவிலேயே சில மாற்றங்களை செய்வதன் மூலம் நோயற்ற, ஒரு சிறந்த சமூகத்தை உருவாக்க முடியும் என்ற மிகப்பெரும் நம்பிக்கை இதனால் உருவாகியிருக்கிறது.

ஜீன்கள் என்பவை என்ன?

“மனித உடலினுள் எண்ணற்ற செல்கள் உள்ளன. இவற்றில் ஒரு செல்லின் உட்கருவுக்குள் மொத்தம் 46 குரோமோசோம்கள் (தாயுமிடமிருந்து 23+ தந்தையிடமிருந்து 23 = 46 ) ,அதாவது 23 ஜோடிகளாக அமைந்துள்ளது.

இந்த ஒவ்வொரு குரோமோசோமும் DNA (Deoxyribonucleic Acid) w Histon உருவாக்கப்பட்டுள்ளது. பொதுவாக உடல் வளர்ச்சி, உடல் உறுப்புகளின் செயல்பாடுகளுக்கு புரதம் மிகவும் அவசியம். இந்த புரதத்தின் உருவாக்கத்தில் DNA முக்கிய பங்கு வகிக்கிறது. இந்த DNA-வுக்குள் சுமார் 30 ஆயிரம் வரையிலான ஜீன்கள்(Genes) அல்லது மரபணுக்கள் உள்ளது. இத்தகைய DNA-வில் ஏற்படும் மாற்றம், செல்களில் உள்ள புரதத் தயாரிப்பில் மாற்றத்தை ஏற்படுத்துவதோடு, நமது உடல் அமைப்பு மற்றும் பண்புகள் சார்ந்த மாற்றங்களுக்கும் காரணமாக இருக்கிறது."

ஜீன்களின் முக்கியத்துவம் என்ன?

"குழந்தைகள் தங்களுடைய பெற்றோரில் யாராவது ஒருவரைப் போன்ற உருவம் மற்றும் குணநலன்களைப் பெற்றிருப்பதற்கு அடிப்படைக் காரணமாக இருப்பது மரபணுக்கள். ஒவ்வொரு மரபணுவும் ஒவ்வொரு விதமான மரபுப் பண்பினை பெற்றோரிடமிருந்து குழந்தைகளுக்கு எடுத்துச் செல்லும் பணியினை மேற்கொள்கிறது. இப்படி எடுத்துச் செல்லப்படும் பண்புகளே அவர்களுக்கிடையே உள்ள பலவிதமான ஒற்றுமைகளுக்கு மூலகாரணமாக இருக்கிறது.

இந்த ஒற்றுமைகளை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். முகம், உடல் உறுப்புகளின் புறத் தோற்றம், உடல் நிறம் போன்ற புறம் சார்ந்த ஒற்றுமைகள் ஒன்று. செயல்பாடுகள், பழக்க வழக்கங்கள், குணநலன்கள், நோய்கள் போன்ற அகம் சார்ந்த ஒற்றுமைகள் மற்றொன்று.

பெற்றோரின் மரபணு குறைபாடுகளால், அவர்களுக்கு இருக்கக்கூடிய நோய்களும் குழந்தைகளுக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. இப்படி உண்டாகும் நோய்களை பரம்பரை நோய்கள் என்று சொல்கிறோம்."

ஜீன் எடிட்டிங் என்பது என்ன?

“ஓர் உயிரியின் மரபணுவை நீக்குவது, மற்றொரு மரபணுவோடு சேர்ப்பது போன்ற மரபணு பகுப்பாய்வுகளை உள்ளடக்கிய தொழில்நுட்ப முறையை Gene editing அல்லது Genetic engineering என்று அழைக்கிறோம்.

நல்ல பண்புகளுக்கு காரணமாக உள்ள மரபணுக்களை ஒன்றிணைத்து ஒரு புதிய கருவை உருவாக்கவும், அந்த கருவிலிருந்து நாம் விரும்பும் பண்புகளை உடைய ஒரு புதிய உயிரியை உருவாக்கவும் மரபணுப் பொறியியல் (Genetic engineering) தொழில்நுட்பம் உதவுகிறது.

ஒரு தாவரம் அல்லது விலங்கினுடைய செல்லில் நோய் உருவாக்கத்துக்கு அல்லது தீய பண்புகளுக்குக் காரணமாக உள்ள மரபணுவை அடையாளம் கண்டு, அதை மாற்றியமைக்க ஜீன் எடிட்டிங் உதவுகிறது. இதன் மூலம் அந்த உயிரிக்கு மரபணு அடிப்படையிலான மருத்துவ சிகிச்சை மேற்கொள்ளலாம்.

இந்தத் தொழில்நுட்பமுறை மூலம் நோயினை குணப்படுத்துவது அல்லது நாம் விரும்பும்படியான பண்புகளை உடைய, மரபணு மாற்றம் செய்யப்பட்ட, ஒரு புதிய தாவரம் அல்லது விலங்கினை உருவாக்க முடிகிறது. இதுபோன்ற மாற்றங்களை ஒருசெல் நிலை அல்லது புதிய கரு உருவாக்கத்துக்கு முந்தைய நிலையில் செய்ய முடியும்.

இப்படி ஒருசெல் நிலையிலிருந்து பலசெல் நிலைக்கு வளர்கிற அனைத்து செல்களும் நல்ல பண்புகளை மட்டுமே உடையதாக இருப்பதால், நல்ல பண்புகளை உடைய ஒரு புதிய உயிரி உருவாகிறது. ஏற்கெனவே முழுவதும் வளர்ந்து, பலசெல் நிலையில் இருக்கிற மனிதன் போன்ற பிற உயிர்களில் உள்ள ஒட்டுமொத்த செல்களையும் நாம் விரும்பும் பண்புகளோடு உருவாக்குவது சாத்தியமில்லை.

உதாரணமாக சொல்ல....

“தொடர்ந்து பல தலைமுறைகளாக ஒரு குறிப்பிட்ட இனம் சார்ந்த மக்கள், தங்கள் இனத்துக்குள்ளேயே திருமணம் செய்துகொள்வதால், மரபணுக்களின் வழியே அவர்களின் சந்ததிகளுக்கு பரம்பரை நோய்கள் ஏற்படுவதற்கான வாய்ப்புகள் அதிகமாக இருப்பதை பல ஆய்வுகள் உறுதிப்படுத்தியுள்ளது. மரபணுக்களில் ஜீன் எடிட்டிங் முறையில் மேற்கொள்ளப்படும் ஆய்வு முடிவுகளைக் கொண்டு இதுபோன்ற பரம்பரை நோய்களின் சுமைகளைக் குறைக்க முடியும்.

ஒவ்வொருவருடைய தனிப்பட்ட மரபணுக்களின் அடிப்படையில், அவர்களுடைய உடல் ஏற்றுக்கொள்ளும் விதத்தில் தனிப்பட்ட மருந்துகளை பரிந்துரைத்து, துல்லியமாகவும் விரைவாகவும் நோய்களுக்கு தீர்வு காண்பதற்கு இந்தத் தொழில்நுட்பமுறை பெரிதும் உதவி செய்யும்."

என்னென்ன குறைகளைத் தடுக்க முடியும்?

“தற்போது நவீன ஜீன் எடிட்டிங் முறையில் மரபணு மூலம் பரவுகிற பரம்பரை நோய்கள், ரத்தம் சம்பந்தப்பட்ட நோய்கள், புற்றுநோய்கள், குழந்தையின்மை போன்ற பல பிரச்னைகளுக்கு தீர்வு காண்பதற்கான ஆய்வுகள் தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

எதிர்காலத்தில் இந்த மரபணுப் பொறியியல் துறை மூலம் ஆச்சரியப்பட வைக்கும் பல்வேறு அறிவியல் முன்னேற்றங்கள் மருத்துவ விஞ்ஞானத்தில் ஏற்படும். நோய்களற்ற, தீய குணங்களற்ற ஒரு மனித இனம் எதிர்காலத்தில் உருவாகும் காலம் வந்துகொண்டிருக்கிறது. அதனால், எதிர்கால மனித சமூகத்துக்கு இனி குறையொன்றுமில்லை என்று நம்பிக்கையோடு சொல்லலாம்!”.என்கிறது மருத்துவ உலகம்.

இது மனித குலத்தின் மாபெரும் முயற்சி அல்லவா ?

நிச்சயமாக உங்களுடைய முயற்சி பலவாகும். (குர்ஆன் : 92:4)

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 258**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துல் லைல் - இரவு 6**

اِنَّ سَعْيَكُمْ لَشَتّٰى

நிச்சயமாக உங்களுடைய முயற்சி பலவாகும். (குர்ஆன் : 92:4)(பகுதி - 2)

மனித குலத்தின் மாபெரும் முயற்சி என்பது நமது பிண்டத்தில் (உடலில்) ஜீன்கள் என்னும் மரபணுவை கண்டுபிடித்ததும், அண்டத்தில் வேற்று கிரகத்தில் கால் பதித்ததும் போன்ற சாதனைகளைச் சொல்லலாம்.

மனித குலம் சந்திரனில் கால் தடம் பதித்தது

1969 - ஜூலை 21 பூமியில் அமெரிக்க ஹூஸ்டன் விண்வெளி நிலையத்தில் எல்லா விஞ்ஞானிகளும் பரபரப்புடன் இருக்க,

அங்கே, பூமியிலிருந்து 2, 38, 855 மைல் தூரத்திலுள்ள சந்திரனின் மிக அருகில் கொலம்பியா விண்வெளிக்கலம் சுற்றி சுற்றி வர அந்த விண்வெளிக்கலத்தில் இருந்து "ஈகிள் " என்னும் சிறு விண்வெளிக் கப்பல் வெளிப்பட்டு சந்திரனின் தரையைத் தொட்டு நிற்கிறது .

அதிலிருந்து விண்வெளி வீரர் நீல் ஆம்ஸ்ட்ராங் வெளிப்பட்டு .நிலவில் தன் காலடியைப் பதித்து, "எனக்கு இது ஓர் அடி எடுத்து வைத்த சம்பவம் தான் , ஆனால் மனித குலத்திற்கோ மாபெரும் முன்னேற்றம் " என்று சொல்லி திகைக்கச் செய்தார். உலக மக்கள் அல்லோலப்பட்டு ஆர்ப்பரித்து சந்தோஷத்தை கொண்டாடினார்கள்

நபி (ஸல்) அவர்கள் ஹிஜ்ரத் செய்வதற்கு 5 ஆண்டுகளுக்கு முன் ஒரு நாள்...அபுஜஹில் , அல் ஆசிப், வலீது இப்னு முஹைரா, அஸ்வத் இப்னு முத்தாப், நழ்ர் இப்னு ஹாரிஸ் இவர்கள் அத்தனை பேரும் நபி (ஸல்) அவர்களின் அற்புதங்களைப் பற்றி, வேதங்கள் தெரிந்த ஒரு யூதனிடம் வினவுகின்றனர்.

அவன் , "முஹம்மதுடைய மாயங்கள், சித்து விளையாட்டுகள் மண்ணில்தான் பலிக்கும் . விண்ணில் முடியாது. உடனே அபுஜஹில் தலைமையில் இக் கூட்டம் " மினா "" என்ற இடத்தில்

நபி (ஸல்) அவர்களை சந்தித்து . "இன்று முழு பௌர்ணமி நீங்கள் அல்லாஹ்வின் தூதர் என்றால் இந்த முழு நிலவை இரண்டாக பிளக்க வேண்டும்.

நபி (ஸல்) அவர்கள் தங்கள் ஆள்காட்டி விரலினால் சந்திரனை இரண்டாகப் பிளக்கச் செய்தார்கள் .இதற்கு சாட்சியாக நீங்கள் இருங்கள் என்று நபித் தோழர்களான அனஸ் இப்னு மாலிக் (ரலி), அப்துல்லாஹ் இப்னு மசூது (ரலி), அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) ஆகியோர்களைப் பார்த்து சொன்னார்கள்

சந்திரன் இரண்டாக பிளந்தது .பின் நபி (ஸல்) அவர்கள் அதே ஆள்காட்டி விரலாலேயே பிளந்த சந்திரனையும் சேர்த்தும் வைத்தார்கள்

உடனே அவர்கள் "மண்ணையும் தாண்டிய அற்புத சூனியம் என்றும் , நாங்கள் இன்னும் சந்தேகத்தில்தான் இருக்கிறோம்"என்று கூறினார்கள்

அமெரிக்க விண்வெளி ஆய்வு நிலையமான நாஸா அப்போல்லோ 10, மற்றும் அப்போல்லோ 11 விண்கலம் அனுப்பிய புகைப்படத்தில் சந்திரனின் முகத்தில் ஆங்காங்கே அம்மன் தழும்பு மாதிரி பள்ளங்கள் தெரிந்தாலும் கவனத்தை மிக ஈர்த்தது சந்திரனைச் சுற்றி ஒரு வட்ட வடிவ பள்ளமான தடயம் தான். இந்த வடிவ பள்ளத்தை "Racky Belt" என்றழைக்கிறது. (இந்த பெயரில் வலைதளத்தில் தேடவும்)

இதுவரை நாம் பார்த்துக் கொண்டிருக்கும் வட்ட நிலா கொஞ்ச காலத்திற்கு முன் இரண்டாகப் பிளந்து மறுபடியும் சேர்க்கப்பட்டுள்ளதாக தெரிகிறது .

யார் பிளந்தது என்று நாஸா தேட ஆரம்பித்தது .நிலவின் இந்த வட்ட வடிவ பள்ள ஆராய்ச்சிக்காக ரிக்கா $ 100,000,000,000 டாலர் செலவழிக்க உள்ளது

எகிப்து நாட்டு நில இயல் வல்லுநர் Dr ஜக்லோவுல் அன்னாஜர் தொலைக்காட்சியின் பேட்டியின் போது 1400 வருடங்களுக்கு முன்பு நடந்த இந்த சம்பவத்தைச் சொல்லி,

"மறுமை நாள் நெருங்கி விட்டது. (அதனை அறிவிக்க சந்திரனும் பிளந்து விட்டது. குர்ஆன் ( 54 : 1-3) என்ற வசனத்தை ஓதிக் காட்டினார்

இன்னும் கூட அநேகர் சந்திரன் பிளந்து விட்டதா என்ற சந்தேகம் இருக்கிறது. அதை நவீன விஞ்ஞானம் அப்பல்லோ 11 விண்வெளி வீரர்கள் நிரூபித்திருக்கிறார்கள்

அப்பல்லோ 11 விண்வெளி வீரர்கள் நிலவின் மேற்பரப்பில் 100 குவார்ட்ஸ் கண்ணாடி ப்ரிஸங்களைக் கொண்ட ஒரு கருவியை வைத்தனர். இது பூமி-சந்திரன் அமைப்பைப் பற்றிய நமது புரிதலை மேம்படுத்துவதில் முக்கிய பங்கு வகிக்கிறது.

ப்ரிஸங்கள் நீண்ட ஆயுள் அதன் நேர்த்தியான எளிமை காரணமாகும். இதற்கு சக்தி ஆதாரம் தேவையில்லை, ப்ரிஸங்கள் சோதனை மூலம் பூமியை அடிப்படையாகக் கொண்ட ஆய்வகங்களிலிருந்து அனுப்பப்படும் லேசர் பருப்புகளைப் பிரதிபலிக்கின்றன. ஒளி திரும்ப எடுக்கும் நேரத்தை அளவிடுவதன் மூலம், விஞ்ஞானிகள் சந்திரனுக்கான தூரத்தை மில்லிமீட்டர் அளவிலான துல்லியத்துடன் கணக்கிட முடியும்.

இந்த தொடர்ச்சியான ப்ரிஸங்கள் சோதனை பல அறிவியல் நுண்ணறிவுகளை அளித்துள்ளது. ஆண்டுக்கு 1.5 அங்குலம் (3.8 சென்டிமீட்டர்) என்ற விகிதத்தில் சந்திரன் பூமியிலிருந்து மெதுவாக நகர்கிறது என்று தெரியவந்துள்ளது.

ப்ரிஸங்கள் இரண்டு தசாப்தங்களுக்கு முன்னர் செய்யப்பட்ட ஒரு ஆச்சரியமான கண்டுபிடிப்பு, சந்திரனில் ஒரு திரவ கோர் இருப்பதை ப்ரிஸங்கள் தரவு உறுதிப்படுத்தியுள்ளது .

மேலும், சந்திர லேசர் ரேஞ்சிங் பரிசோதனையானது ஐன்ஸ்டீனின் ஈர்ப்பு கோட்பாட்டை சோதிக்கவும், சந்திரனின் உள் அமைப்பை ஆய்வு செய்யவும் விஞ்ஞானிகளை அனுமதித்துள்ளது. பூமியின் சுழற்சி மற்றும் அதன் துருவங்களின் இயக்கம் பற்றிய நமது புரிதலுக்கும் இது பங்களித்தது.

நிச்சயமாக உங்களுடைய முயற்சி பலவாகும். (குர்ஆன் : 92:4)

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 259**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துல் லைல் - இரவு 7**

فَاَمَّا مَنْ اَعْطٰى وَاتَّقٰىۙ

எனவே எவர் (தானதருமம்) கொடுத்து, (தன் இறைவனிடம்) பயபக்தியுடன் நடந்து, (குர்ஆன் : 92:5)

وَصَدَّقَ بِالْحُسْنٰىۙ

நல்லவற்றை (அவை நல்லவையென்று) உண்மையாக்குகின்றாரோ,

(குர்ஆன் : 92:6)

فَسَنُيَسِّرُهٗ لِلْيُسْرٰى

அவருக்கு நாம் (சுவர்க்கத்தின் வழியை) இலேசாக்குவோம்.(குர்ஆன் : 92:7)

وَاَمَّا مَنْۢ بَخِلَ وَاسْتَغْنٰىۙ

ஆனால் எவன் உலோபித்தனம் செய்து அல்லாஹ்விடமிருந்து தன்னைத் தேவையற்றவனாகக் கருதுகிறானோ,(குர்ஆன் : 92:8)

وَكَذَّبَ بِالْحُسْنٰىۙ

இன்னும், நல்லவற்றை பொய்யாக்குகிறானோ,(குர்ஆன் : 92:9)

فَسَنُيَسِّرُهٗ لِلْعُسْرٰى

அவனுக்கு கஷ்டத்திற்குள்ள (நரகத்தின்) வழியைத் தான் இலேசாக்குவோம்.(குர்ஆன் : 92:10)

وَمَا يُغْنِىْ عَنْهُ مَالُهٗۤ اِذَا تَرَدّٰى

ஆகவே அவன் (நரகத்தில்) விழுந்து விட்டால் அவனுடைய பொருள் அவனுக்குப் பலன் அளிக்காது.(குர்ஆன் : 92:11)

பொருளை நல்வழியில் செலவு செய்து, அல்லாஹ்வுக்கு பயந்து தீய வழியைவிட்டு விலகி நற்கருமங்கள் செய்து வருபவனுக்கு சுவர்க்கத்தைப் பெறும் பாதையை அல்லாஹ் அவனுக்கு இலேசாக்கி வைப்பான்.

பொருளை நல்வழியில் செலவு செய்யாமல் உலோபித்தனம் செய்து தன் பொருளின் அகங்காரத்தால் அல்லாஹ்வின் அருளையும் நியாயத் தீர்ப்பு நாளையும் இலட்சியம் செய்யாமலிருந்து நல்வழிக்கு மாறாக நடப்பவன் கஷ்டத்தை (நரகத்தை) அடையும் பாதையை இலேசாக்கி வைக்கிறான்.

உதாரணமாக அல்லாஹ்வைப் பற்றிய அச்சம் அவன் உள்ளத்தில் இடம் பெறாததால், பிறர் பொருளை அபகரித்தல், அநியாயம் செய்தல், விபசாரம் புரிதல், பிறர் மீது பழி சுமத்தல், திருடல், வட்டித் தொழில் புரிதல், பெற்றோர் மனத்தை நோகச் செய்தல், அநாதைகளின் பொருளை அபகரிப்பதுடன் அதை அவர்கள் அடைய விடாமல் தடுத்து மோசம் செய்தல்...

கடத்தல், கலப்படம் செய்தல், வழிப்பறி, கொள்ளையடித்தல், கொலை செய்தல், கற்பழித்தல், நம்பிக்கை துரோகம் முதலிய தீய செயல்களில் துணிவுடன் ஈடுபட்டு மக்களின் வெறுப்புக்கும் சபித்தலுக்கும் ஆளாகி நரகத்திற்குத் தன்னைத் தயார்படுத்திக் கொள்கிறான்.

பொருள் என்பது அல்லாஹ் அளிக்கும் அருளாகும். எனவே பொருளைச் செலவு செய்வதில் அவனது கட்டளைகளை கருத்திற் கொள்வது போலவே சேகரிப்பதிலும் அவனது கட்டளைகளைக் கவனிக்க வேண்டும்.

தான் சேர்த்த பொருளை ஒருவன் இறைவனின் விருப்பப்படி அவனுக்காகச் செலவு செய்தால் அதன் பலனை ஈருலகிலும் அடைவான்.

தான் சேர்த்த பொருளை அல்லாஹ் விரும்பிய வழியில் செலவு செய்யாமல் பணங்காக்கும் பூதமாக இருப்பதுடன், அல்லாஹ்வின் பொருத்தத்திற்கும் கட்டளைக்கும் மாறாக, படாடோபத்திற்கும் புகழுக்கும் செலவு செய்தால், அதனால் அவன் எவ்வித பலனையும் அடைய முடியாது.

அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து அப்பொருள் அவனைப் பாதுகாக்காது; மறுமையில் அவனுக்கு அப்பொருள் தீங்காகவே முடியும்.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 260**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துல் லைல் - இரவு 8**

اِنَّ عَلَيْنَا لَـلْهُدٰى

நேர் வழியைக் காண்பித்தல் நிச்சயமாக நம் மீது இருக்கிறது.

(அல்குர்ஆன் : 92:12)

وَاِنَّ لَـنَا لَـلْاٰخِرَةَ وَالْاُوْلٰى

அன்றியும் பிந்தியதும் (மறுமையும்) முந்தியதும் (இம்மையும்) நம்முடையவையே ஆகும்.(குர்ஆன் : 92:13)

فَاَنْذَرْتُكُمْ نَارًا تَلَظّٰى

ஆதலின், கொழுந்துவிட்டெறியும் (நரக) நெருப்பைப்பற்றி நான் உங்களை அச்சமூட்டி எச்சரிக்கிறேன்.(குர்ஆன் : 92:14)

لَا يَصْلٰٮهَاۤ اِلَّا الْاَشْقَىۙ

மிக்க துர்பாக்கியமுள்ளவனைத் தவிர (வேறு) எவனும் அதில் புகமாட்டான். (குர்ஆன் : 92:15)

الَّذِىْ كَذَّبَ وَتَوَلّٰى

எத்தகையவனென்றால் அவன் (நம் வசனங்களைப்) பொய்யாக்கி, முகம் திரும்பினான். (குர்ஆன் : 92:16)

மனிதன் நேர்வழி அடைவதற்காக அல்லாஹ் அவனுக்கு அறிவை கொடுத்திருப்பதுடன் நபிமார்களை அனுப்பிப் போதிக்கும் செய்திருக்கிறான். மனிதன் தன் அறிவு ஆராய்ச்சியினால் மட்டும் நேர்வழி நேர்வழியை அடைந்து விட முடியாது. அல்லாஹ்வுடைய அருளினால் தான் ஒருவன் நேர்வழியை அடைய முடியும்.

இவ்வுலக சம்பந்தமான காரியங்களும் மறுமை சம்பந்தமான காரியங்களும் அல்லாஹ்வின் கைவசமே இருக்கின்றன அவன் நாட்டம் இல்லாமல் இவ்வுலகிலும் மறு உலகிலும் யாதொரு காரியமும் நடைபெறாது.

மனிதன் மறுமையில் மேலான பதவி அடையும் பொருட்டு அல்லாஹ் நபிமார்கள் மூலம் வேதங்களை கொடுத்து உண்மையை போதிக்கும்படி அனுப்பி இருக்கிறான்.

வேதங்களை பொய் என்று சொல்லி உண்மையை விட்டும் முகத்தை திருப்பியவன் துப்பாக்கியவனே ஆவான். அவன் நரகத்தை அடைவான் கொழுந்து விட்டு எரியும் நரகத்தைப் பற்றி அல்லாஹ் மனிதனுக்கு எச்சரிக்கை செய்கின்றான்.

இவ்வுலக சம்பந்தமான காரியங்களும் மறுமை சம்பந்தமான காரியங்களும் அல்லாஹ்வின் கைவசமே இருக்கின்றன அவன் நாட்டம் இல்லாமல் இவ்வுலகிலும் மறு உலகிலும் யாதொரு காரியமும் நடைபெறாது என்பதற்கு உதாரணமாக திருக்குர்ஆன் கூறும் வரலாறு

இப்னு அப்பாஸ் (ரலி ) அவர்கள் கூறியதாவது :

பல்ஆம் என்பவர் மூஸா (அலை) அவர்களது இறுதி காலத்தில் வாழ்ந்த ஒரு துறவி. ஈராக் அல்லது கன்ஆன் பகுதியை சேர்ந்தவர். வணக்க வழிபாடுகளில் அதிகமாக ஈடுபட்டிருந்தார். அதனால் அவருக்கு இஸ்முல் ஆலம் பற்றி தெரியும். இதைப் பயன்படுத்தி அவர் துஆ செய்தால், உடனே இறைவன் நிறைவேற்றிக் கொடுப்பான் .

மேலும் ஜோதிடம் பார்ப்பதிலும், சூனியம் செய்வதிலும் அவர் வல்லவராக இருந்தார்.இவரை விவிலியம் பழைய ஏற்பாடு "பேயோரின் குமாரன் " என அழைக்கிறது. எண்ணாகமம் 22 ,23 , 24 ஆகிய

அதிகாரங்களில் இவரைப் பற்றி விவிலியம் நிறைய பேசுகிறது. புதிய ஏற்பாட்டிலும் ஆங்காங்க இவரை குறித்து பேசப்பட்டுள்ளது .

மொத்தத்தில் அல்லாஹ் அவருக்கு உயர் பதவி வழங்கியும், அதை பயன்படுத்திக் கொள்ளாத ஒரு மோசமான மனிதர்தான் பல்ஆம் என்பது மட்டும் உறுதி. அவரின் வரலாறு .

மூஸா (அலை) அவர்களும் , அவர்களுடன் இருந்தவர்களும் "அமாலிகா " என்னும் அடக்குமுறையாளர்கள் இருக்குமிடம் சென்றபோது, அமாலிகா கூட்டத்தினர் பல்ஆம் பின் பாஊரா என்பவரிடம் வந்தனர் .

" மூஸா இரும்பு மனிதர் அவரிடம் அதிகமான படைகள் உண்டு. அவர் எங்களை வெற்றி கொண்டால், எங்களை அழித்து விடுவார் . ஆகையால் மூஸாவையும் அவருடன் உள்ளவர்களையும் எங்களை விட்டு தடுக்க வேண்டும் என்று அல்லாஹ்விடம் பிராத்தனை புரியுங்கள் "என்று வேண்டினர்.

மூஸாவையும் , அவருடன் இருந்தவர்களையும் திருப்பி அனுப்ப வேண்டும் என்று அல்லாஹ்விடம் நான் வேண்டினால், என்னுடைய இவ்வுலக வாழ்க்கையும்,மறு உலக வாழ்க்கையும் அழிந்து போய்விடும் என்று கூறினார். ஆனால் அவர்கள் அவரிடம் வற்புறுத்திக் கொண்டே இருந்தனர்.

அப்பொழுது அவர்கள் அவரிடம் நயமாக பேசி மகத்தான வெகுமதியை லஞ்சமாகக் கொடுத்தனர். அதனை அவர் மனோ இச்சைப்படி ஏற்றுக்கொண்டார் .

ஒரு குறிப்பிட்ட மலைக்குச் சென்று அதில் ஏறி நின்று பிரார்த்தனை செய்ய வேண்டும் என்பது ஏற்பாடு. அவருடைய கழுதையின் மீது ஏறிக்கொண்டு சில அடிகள் தூரம் சென்றிருப்பார். கழுதை படுத்துக்கொண்டது. கீழே இறங்கி அதனை அடித்தார். அது எழுந்தது .மீண்டும் அவர் அதன் மீது ஏறிக்கொண்டு சில காத தூரம் சென்றதும். மீண்டும் படுத்துக் கொண்டது .

வானவர்கள் அதன் முன்னர் நின்று கொண்டு அதனை முன்னே செல்ல விடாமல் தடுத்தனர்.

ஆரம்பத்தில் பல்ஆம் விலாயத் இல்லாமல் இருந்த நிலைக்கே போய்விட்டார் . மேலும் உலக ஆசை முற்றிவிட்ட பல்ஆம் அதைப் பொருட்படுத்தாமல் அந்த கழுதையை விட்டுவிட்டு கால்நடையாகவே மலைமீது ஏறினார் .

இஸ்ரவேலர்களை பார்த்து அவர்களுக்கு விரோதமாக பிரார்த்தனை செய்வதற்கு நாவை அசைத்த போது. நேர் மாற்றமான பிரார்த்தனை அவர் வாயில் வந்தது. இஸ்ரவேலருக்கு "தோல்வியைக் கொடு " என்று எண்ணிக்கொண்டு, நாவில் கூற நினைத்து , "என்னுடைய கூட்டத்தினருக்கு தோல்வியை கொடு. இஸ்ரவேலர்களுக்கு வெற்றியைக் கொடு" என்று வார்த்தை அவரை அறியாமலே வந்தது.

இதனைச் செவியுற்ற அவருடைய கூட்டத்தினர் அவரை நோக்கி,

"பல்ஆமே...! நீர் என்ன சொல்கிறீர் ? நேர்மாற்றமாக எங்களுக்கு தோல்வி ஏற்பட வேண்டும் என்று கேட்கிறீர்கள்" என்று ஆவேசமாக கத்தினார்.

அதற்கு அவர்," நான் என்ன செய்வது ? நான் விரும்பாதபடியே என் நாவு அப்படி கூறுகிறது .என்னால் அது தடை செய்ய முடியவில்லையே" என்று கூறினார்.

மீண்டும் அவர் "என்னை விட்டு இம்மையும்-மறுமையும் இரண்டும் போய்விட்டது. என் துஆவும் இனி அங்கீகரிக்கப்படாது என்பது எனக்குத் தெரியும். இதற்கு மேல் சூழ்ச்சிகரமான ஒரு யோசனை உங்களுக்கு தெரிவிப்பைத் தவிர வேறு ஒன்றும் எனக்கு தெரியவில்லை."

" என்ன அது ? "

"அழகான பெண்களை நன்றாக அலங்கரித்து இஸ்ரவேலர்கள் மத்தியில் அனுப்புங்கள்.நிச்சயமாக அவர்கள் அப்பெண்களின் மீது மையல் கொண்டு தகாத செயல்களை செய்வதன் பொருட்டு, அவர்களுக்கு தோல்வி ஏற்பட்டு விடும் "என்ற பயங்கரமான ஒரு கீழ்தர உபயக் கருத்தை தெரிவித்தார்.

வரலாற்றின் பின்தொடரில் அப்படி நடந்ததாகவே கூறப்படுகிறது.இந்த வரலாறு பழைய ஏற்பாடு எண்ணாகமம் 22, 23 , 24 அதிகாரங்களிலும் கூறப்பட்டுள்ளது.

முடிவில் நபி மூஸா அவர்களுக்கும் அவர்களுடைய தோழர்களுக்கும் எதிராகப் பிரார்த்தனை செய்தார் . உடனே அவர் பெற்றிருந்த ஞானங்கள் அனைத்தையும் அல்லாஹ் பறித்துக் கொண்டான்.

நாய் திருப்பவும் தன் நாக்கை வெளியே தொங்க விட்டது.

وَلَوْ شِئْنَا لَرَفَعْنٰهُ بِهَا وَلٰـكِنَّهٗۤ اَخْلَدَ اِلَى الْاَرْضِ وَاتَّبَعَ هَوٰٮهُ‌ فَمَثَلُهٗ كَمَثَلِ الْـكَلْبِ‌ اِنْ تَحْمِلْ عَلَيْهِ يَلْهَثْ اَوْ تَتْرُكْهُ يَلْهَث‌ ذٰ لِكَ مَثَلُ الْقَوْمِ الَّذِيْنَ كَذَّبُوْا بِاٰيٰتِنَا‌ فَاقْصُصِ الْقَصَصَ لَعَلَّهُمْ يَتَفَكَّرُوْنَ

நாம் நாடியிருந்தால், நம் அத்தாட்சிகளைக் கொண்டு அவனை உயர்த்தியிருப்போம்; எனினும் அவன் இவ்வுலக வாழ்வை(யே சதமென) மதித்து, தன்னுடைய இச்சைகளையே பின்பற்றினான்; அவனுக்கு உதாரணம் நாயைப் போன்று, அதை நீர் விரட்டினாலும் நாக்கைத் தொங்க விடுகிறது, அல்லது அதை நீர் விட்டு விட்டாலும் நாக்கைத் தொங்க விடுகிறது - இதுவே நம் வசனங்களைப் பொய்யெனக் கூறும் கூட்டத்தாருக்கும் உதாரணமாகும் - ஆகவே அவர்கள் சிந்தித்து நல்லுணர்வு பெறும் பொருட்டு (இத்தகைய) வரலாறுகளைக் கூறுவீராக. (அல்குர்ஆன் : 7:176)

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 261**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துல் லைல் - இரவு 9**

وَسَيُجَنَّبُهَا الْاَتْقَىۙ

ஆனால் பயபக்தியுடையவர் தாம் அ(ந்நரகத்)திலிருந்து தொலைவிலாக்கப்படுவார். (குர்ஆன் : 92:17)

الَّذِىْ يُؤْتِىْ مَالَهٗ يَتَزَكّٰى

(அவர் எத்தகையோரென்றால்) தம்மை தூய்மைப் படுத்தியவராகத் தம் பொருளை (இறைவன் பாதையில்) கொடுக்கிறார்.(குர்ஆன் : 92:18)

وَمَا لِاَحَدٍ عِنْدَهٗ مِنْ نِّعْمَةٍ تُجْزٰٓىۙ

மேலும், தாம் பதில் (ஈடு) செய்யுமாறு பிறருடைய உபகாரமும் தம் மீது இல்லாதிருந்தும். (குர்ஆன் : 92:19)

اِلَّا ابْتِغَآءَ وَجْهِ رَبِّهِ الْاَعْلٰى

மகா மேலான தம் இறைவனின் திருப்பொருத்தத்தை நாடியே (அவர் தானம் கொடுக்கிறார்). (குர்ஆன் : 92:20)

وَلَسَوْفَ يَرْضٰى

வெகு விரைவிலேயே (அத்தகையவர் அல்லாஹ்வின் அருள் கொடையால்) திருப்தி பெறுவார். (குர்ஆன் : 92:21)

அல்லாஹ்வின் மீது மிகுந்த பக்தி கொண்டு பாவ காரியங்களை விட்டு விலகியிருப்பவன். மறுமையில் நரகத்தை விட்டும் தூரமாக்கப்படுவான்.

அவன் தன் ஆத்ம பரிசுத்தத்திற்காகவே தருமம் செய்கிறான். பிறர் புகழுவதற்காகச் செய்யவில்லை. வேறு யாருடைய உபகாரத்தையும் இவன் பெற்று அதற்குப் பதிலாகவும் செய்யவில்லை. அல்லாஹ்வைத் தவிர வேறு யாருடைய உபகாரமும் இவன் மீதிருக்கவுமில்லை. அல்லாஹ்வின் திருப் பொருத்தத்தை மட்டுமே நாடி அவன் தருமம் செய்தான்.

இஸ்லாம் மனிதசமுதாயத்தின் ஓர் ஒப்பற்ற வாழ்க்கை நெறியாகும். மனிதர்கள் ஒருவரை ஒருவர் சார்ந்திருப்பதற்காக ஏனைய மார்க்கங்கள் செய்யாத வற்புறுத்தாத தர்மத்தை மனித நலனை கருத்தில் கொண்டு அவர்களுக்கு மத்தியில் சகோதரத்துவமும் நல்லிணக்கமும் ஏற்படவேண்டும் என்பதற்காக ஒவ்வொரு முஸ்மின் மீதும் தர்மம் வழங்குவதை இஸ்லாம் கட்டாயமாக்கி இருக்கிறது.

இஸ்லாத்தின் பார்வையில் ஒரு மனிதனுக்கு பொருளாதாரம் வழங்கப்படுவது என்பது அவன் அந்த பொருளாதாரத்தில் தனக்கும் தன் குடும்பத்தாருக்கும் செலவு செய்தது போக மீதம் உள்ளதில் அவனால் இயன்ற அளவிற்கு தன்னுடைய பெற்றோருக்கும் உறவினர்களுக்கும் நெருங்கியவர்களுக்கும் அனாதைகளுக்கும் வரியவர்களுக்கும் ஏழைகளுக்கும் அவர்களின் கண்ணீர் துடைக்கும் விதமாக தர்மம் வழங்குவது அவசியமாகும்.

தர்மங்கள் செய்வது குறித்து இஸ்லாம் அதிகமாக வலியுறுத்துகிறது.

`ஜகாத்' என்பதன் மூலம் கட்டாயமாக்கி உள்ளது.

தான தர்மங்கள் செய்வது குறித்து இஸ்லாம் அதிகமாக வலியுறுத்துகிறது. மேலும் ஒருவர் தன்னிடம் உள்ள செல்வத்தில் இருந்து தானம் செய்வதை `ஜகாத்' என்பதன் மூலம் கட்டாயமாக்கி உள்ளது. ஒவ்வொரு இஸ்லாமியரும் தனது வருமானம் மற்றும் சொத்துக்களை கணக்கிட்டு அதற்கு ஏற்ப பணமாகவோ, பொருளாகவோ, தானியமாகவோ ஏழைகளுக்கு தானம் செய்ய வேண்டும் என்று கட்டளையிட்டுள்ளது.

தர்மம் செய்வதன் அவசியம் குறித்து திருக்குர்ஆன் பல்வேறு இடங்களில் வலியுறுத்திக் கூறுகிறது. பல்வேறு நபிமொழிகளும் தர்மத்தின் பலன்களை பட்டியல் இடுகின்றது. `தர்மம் செய்வது ஒரு மனிதனின் பாவத்தை அழித்து விடுகிறது' என்பது நபி மொழியாகும்.

இது போல, 'பேரிச்சம் பழத்தின் ஒரு பகுதியையாவது தர்மம் செய்து நரகத்தை விட்டு உங்களை பாதுகாத்துக்கொள்ளுங்கள்' என்று தர்மத்தின் அவசியத்தை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வலியுறுத்தி உள்ளார்கள். இதுபற்றி நபிகள் நாயகம் அவர்கள் கூறியதாவது:-

`தர்மம் பாவங்களை அழித்துவிடுகிறது, தண்ணீர் நெருப்பை அழிப்பது போல'. (அறிவிப்பாளர்: இப்னு மாஜா, நூல்: அஹ்மது, திர்மிதி) 'ஒரு பேரீத்தம் பழத்தின் ஒரு பகுதியை தர்மம் செய்தாயினும் நரகத்தைவிட்டு உங்களைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள். அதுவும் உங்களுக்கு கிடைக்கவில்லை என்றால், நல்ல வார்த்தைகளை பேசுவதின் மூலமாவது நரகத்திலிருந்து உங்களைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள்'. (நூல்: புகாரி)

தர்மம் கொடுப்பது வெளிப்படையாக இருக்க வேண்டுமா?, ரகசியமாக இருக்க வேண்டுமா? என்பது குறித்து திருக்குர்ஆன் இவ்வாறு விளக்கி உள்ளது:

"தான தர்மங்களை நீங்கள் வெளிப்படையாகச் செய்தால் அதுவும் நல்லதே. ஏனெனில் அவ்வாறு செய்யப் பிறரையும் அது தூண்டும்; எனினும் அவற்றை மறைத்து ஏழை-எளியோர்க்கு அவை கிடைக்கும்படிச் செய்தால் அது உங்களுக்கு இன்னும் நல்லது; அது உங்களுடைய பாவங்களையும் நீக்கும்; நீங்கள் செய்வதை எல்லாம் அல்லாஹ் நன்கறிந்தவனாகவே இருக்கின்றான். (திருக்குர்ஆன் 2:271).

இந்த நபிமொழியும் தானம் எவ்வாறு செய்வது நல்லது என்பதை இவ்வாறு கூறுகின்றது: ``இறைவனின் நிழலைத் தவிர வேறு நிழலே இல்லாத அந்த (மறுமை) நாளில், அல்லாஹ் தன் நிழலில் ஏழு நபர்களுக்கு இடம் அளிப்பான். அவர்களில் ஒருவர் தன் வலக்கை செய்யும் தர்மத்தை தன் இடக்கை அறியாதவாறு ரகசியமாக தர்மம் செய்தவர்'' என்று இறைத்தூதர் (ஸல்) கூறினார்கள் என அபூ ஹுரைரா (ரலி) அறிவித்தார். (நூல்கள்: புகாரி, முஸ்லிம்)

மேலும் தர்மம் செய்வது என்பது நமக்கு தேவையற்ற, பழைய பொருட்களை கொடுப்பது அல்ல. நாம் நேசிக்கும் பொருட்களில் இருந்து கொடுப்பது தான் தர்மங்களில் சிறந்தது ஆகும். இது குறித்த நிகழ்வு வருமாறு:-

நபித்தோழர்களில் ஒருவரான அபூ தல்ஹா (ரலி) அதிக வசதி படைத்தவராக இருந்தார். அவருக்கு பேரீச்ச மரத்தோட்டங்கள் அதிகம் இருந்தன. அவரின் செல்வங்களில் பைருஹா என்ற தோட்டமே அவருக்கு மிகவும் விருப்பமானதாக இருந்தது.

'நீங்கள் நேசிக்கும் பொருட்களில் இருந்து தானம் செய்யாத வரை நீங்கள் நன்மையை அடையவே மாட்டீர்கள்' என்ற (திருக்குர்ஆன் 3:92)

இறைவசனம் அருளப்பட்டதும், அபூ தல்ஹா (ரலி), நபி (ஸல்) அவர்களிடம் வந்து, ''`இறைத்தூதர் அவர்களே, 'நீங்கள் நேசிக்கும் பொருட்களிலிருந்து தர்மம் செய்யாதவரை நீங்கள் நன்மையைப் பெறவே மாட்டீர்கள்' என அல்லாஹ் கூறுகிறான். என் செல்வங்களில் நான் மிகவும் நேசிக்கும் பொருள் பைருஹா என்னும் தோட்டமேயாகும். அதை அல்லாஹ்விற்காக தர்மம் செய்ய விரும்புகிறேன்'' எனக்கூறினார்.

நபிகள் நாயகம் அவர்கள், இதை அவரது உறவினர்களுக்கு கொடுக்குமாறு தெரிவித்தார். அபூ தல்ஹா (ரலி) இதை ஏற்றுக்கொண்டு தன் தோட்டத்தை தம் நெருங்கிய உறவினருக்கும், தம் தந்தையுடன் பிறந்தவரின் குழந்தைகளுக்கும் பங்கிட்டு விட்டார்.

இந்த தகவல்களை புகாரி நூலில் நபித்தோழர் அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார். தர்மம் குறித்த மற்றொரு நபி மொழி வருமாறு:

`தர்மத்தில் சிறந்தது எது?' என மக்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் வினவினர். `குறைந்த செல்வமே உள்ளவர் அதிலிருந்து தர்மம் செய்வது. நீங்கள் உங்கள் தர்மத்தை உங்கள் வீட்டாரிலிருந்து தொடங்குங்கள்' என்று இறைத்தூதர் (ஸல்) கூறினார்கள் (அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா (ரலி), (நூல்கள்: அபூ தாவூத், அஹ்மத்).

"தர்மம் செய்வதால் செல்வத்தில் எதையும் குறைத்துவிடாது. அடியான் மன்னிப்புக் கோருவதால் அல்லாஹ் அவனுடைய மதிப்பை மேலும் அதிகப்படுத்தவே செய்கிறான். அல்லாஹ்வுக்காகத் தன்னைத் தாழ்த்திக் கொண்ட எந்த மனிதனையும் அல்லாஹ் உயர்த்தாமல் இருக்க மாட்டான்'' என்று இறைத்தூதர் (ஸல்) கூறினார்கள். (அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா (ரலி), நூல்: முஸ்லிம்).

மனமகிழ்வுடன் தர்மம் செய்வோம், நாம் விரும்பிய பொருட்களில் இருந்து கொடுப்போம், இறையருள் பெறுவோம்.

குறிப்பு :- இத்துடன் விஞ்ஞானத் தப்ஸீர் - சூரத்துல் லைல் - இரவு என்கிற சூரா நிறைவு பெற்றது.

+919360181033

